ஓம் சரவணபவ

# கவிஞர் கபிலவாணன் கவிதைத் தொகுதி

## புலவர் கபிலவாணன்

புலவர் கபிலவாணன்,
'வெற்றிவேல்'
255, திருவொற்றியூர் நெடுஞ்சாலை,
(த. பேட்டை மணிக்கூண்டுக்கு அருகில்)
வண்ணாரப் பேட்டை, சென்னை-600 021.

# நூலின் வரலாறு


- கவிஞர் கபிலவாணன்
  கவிதைத் தொகுதி.

  கவிதைத் தொகுப்பு நூல்.

- கவிஞர் கபிலவாணன்,
  தமிழாசிரியர், உதவித் தலைமையாசிரியர்,
  தூய இராயப்பர் உயர்நிலைப்பள்ளி,
  இராயபுரம், சென்னை-600 013.

- முதற் பதிப்பு: திசம்பர் 1991.

- அச்சிட்ட படிகள்: 1,200.

- அச்சிடப் பயன்படுத்தப்பட்ட தாள்: 11.6 கி. கி. வெள்ளை.

- அச்செழுத்து: 10 புள்ளிகள்.

- பக்கங்கள் VIII + 264 = 272.

- அச்சகம்: மணியன் அச்சகம்,
  172, சண்முகம் பிள்ளைத் தெரு,
  மயிலாப்பூர், சென்னை-600 004.

- நூல் கட்டமைப்பு: விக்னேஸ்வரா பைண்டிங்,
  பேன்பேட்டை. நந்தனம்,
  சென்னை-600 035.

- நூலின் விலை :

- நூல் கிடைக்குமிடம்:
  புலவர் கபிலவாணன்,
  'வெற்றி வேல்'
  2[illegible]5, திருவொற்றியூர் நெடுஞ்சாலை,
  வண்ணாரப்பேட்டை,
  சென்னை-600 021.

  குமரி பேனா நிறுவனம்,
  174, மன்னார்சாமி கோயில் தெரு,
  இராயபுரம், சென்னை-600 013.

# உள்ளடக்கம்

## சமுதாயச் சந்தை

## தமிழாலயம்



## சாதனைச் சாவடி



## மகளிர் மன்றம்

## பவளவிதி



## தத்துவராயர் நந்தவனம்



□□□

ஓம் சரவணபவ

# முன்னுரை

பவளச் சக்கர மலர்த் தேரில் பறக்கும் படிவமாய், பாட்டரசியாய், பண்புத் தொகையாய் நின்று களிநடம் செய்து வரும் கவிதா தேவியின் வார்த்தை வடிவமே கவிஞர் கபிலவாணனின் கவிதைத் தொகுதி.

இயற்கைத் தேரடி, ஐந்திணைவீதி, சமுதாயச்சந்தை, தமிழாலயம், சாதனைச் சாவடி, மகளிர் மன்றம், பவள வீதி, தத்துவராயர் நந்தவனம் என்பன எம் தொகுதியின் குடியிருப்புப் பகுதிகள். தொகுதி வளம்பெற மிகுதி யாகவே உழைத்திருக்கிறோம் உழைப்பின்மேல் கொண் டுள்ள உறுதிப்பாட்டுடன் உங்களை இக்கவிதைத் தொகுதிக்கு வரவேற்கின்றோம்.

தொகுதியில், முகங்களே முகவரிகள். தேடியலைய வேண்டிய அவசியம் இல்லை. மூவகை அளவைகளில் மூழ்கி எழுந்ததாலும்— நிகழ்ச்சிகளின் பாதிப்பாலும் எழுச்சிக் கங்கை எழுத்தலங்காரம் பெற்றுள்ளது. பிரும்ம தேவனின் கைப்பிசகால் அன்று பிறவாமலிருந்த கவிதைத் தீபகர்ப்பத்தை இன்று நாம் படைத்திருக் கிறோம்!

பத்திமையோடு கூடிய தவ யேக்கத்திற்குப் பிறகு வெளிவரும் கவிதை நூல் இது! எழுத்துப் பதிவுகள் என்றோ நிகழ்ந்தவை. சிற்சில வார்த்தை வார்ப்படங்கள் மட்டுமே புதியன புகுத்தலாய் முகிழ்த்தன.

கோப தாபங்கள், கொந்தளிப்பு மகிழ்ச்சிகள் யாவும் கவிஞனுக்கே உரிய தனியுடைமைகள். படைப்புத் தொழிலாற்றுவார் பண்புகள் அனைத்தும் நமக்கும் உண்டு.

சரியான இலக்கைச் சென்றடைய இலக்கியமே சாரதி. எம் கவிதைப்பார்த்த சாரதி, சாதா உபதேசமும் கீதா உபதேசமும் செய்திருக்கிறான்.

தோய்ந்து மகிழ வேண்டியதும் ஆய்ந்துரைக்க வேண்டியதும் இலக்கியப் பார்த்தர்களின் பணி. தொகுதிக்குள் நுழைந்து பாருங்கள். கட்டாயப் பாடம் எதுவும் இல்லை; கர்நாடகத் தனங்களும் இல்லை. வழிப் பறியும் வன்முறையும் எம் தொகுதியில் இல்லை. இச் செய்திகளைச் சொல்லும் போது எம்மால் கவிதைச் செருக்கடையாமல் இருக்க முடியவில்லை. இவையே எம் அறிமுக வார்த்தைகள்.

அட்டைப்படம் வரைந்தளித்த ஓவியர் வசந்தன், கருத்து விளக்க ஓவியம் வரைந்து கொடுத்த மா. முத்து இவர்களுக்கு நன்றி. குறள்ஞானி, பேராசிரியர் முனைவர் கு. மோகனராசு அவர்களின் அணிந்துரைக்கும், முனைவர் மூ கங்காதரன் அவர்களின் இனிய ஆய்வுரைக்கும் என்ன கைம்மாறு செய்ய வல்லோம்? தமிழறிஞர் இருவருக்கும் நன்றியைத் தெரிவித்து மகிழ்கிறோம்.

மணியன் அச்சகத்தார்க்கும் நூல் வெளியீட்டுக் குழுவினருக்கும் எம் நன்றி உரித்தாகுக.

குகப்பெருமானின் திருவடித் தாமரையைச் சிந்தை செய்து வணங்கி, இத்தொகுதியைத் தமிழ் இலக்கிய உலகத்திற்குப் படையலாய்ப் படைக்கிறோம்.

வாழிய தமிழகம். வளர்க நன்னெறி.

சென்னை-21,
30-12-91. -கபிலவாணன்.

# அணிந்துரை

'குறள்ஞானி' பேராசிரியர் முனைவர் கு. மோகனராசு
(திருக்குறள் ஆய்வுமையம், சென்னைப் பல்கலைக் கழகம்)

**உருவாக்கச் சூழல்:**

பிறக்கின்றபோதே யாரும் கவிஞராகப் பிறந்து விடுவதில்லை; வாழ்ந்து–வாழும் சமுதாயச் சூழல்கள், தாக்கங்கள், தேவைகள் ஆகியனவே கவிஞர்கள் உருவாகக் காரணங்களாக அமைகின்றன.

அந்த வகையில் கவிஞர் கபிலவாணன் அவர்கள் உணர்ச்சிமிகு ஓர் உரத்த சிந்தனையுடைய கவிஞராக உருவாவதற்குரிய பின்புலமாக அமைந்தது, அவர் பிறந்த ஊரான ''ஏனாதி கரம்பை''யே என்பதை,

''இங்கேதான் ஆசைகளைப் புதைத்தேன்; ஏழ்மை
எரியாலே சுடப்பட்ட காயத் திற்கும்
இங்கேதான் எந்தையன்புத் தைலம் தேய்த்தார்;
இன்னல்களை எதிர்த்துநிற்க, முறிய டிக்க
இங்கேதான் யான்கற்றுத் தேர்ச்சி பெற்றேன்;
இளம்புரியாச் சுமையோடும் கவலை யோடும்
இங்கேதான் அடியளந்து நடந்தேன்; என்னை
எழுத்தீட்டிக் காரனாகச் செய்த திவ்வூர்'' (ப. 231)

"ஆற்றல்மிகு மகரந்தச் சேர்க்கைக் கென்னை
ஆளாக்கி விட்டதிவ்வூர்" (ப. 232)

எனவரும் கவிஞர்தம் கூற்றுகள் தெளிவு செய்கின்றன.

இந்தக் கூற்றில் வெளிப்பட்டு நிற்கும் இரண்டு உண்மைகளையும், அவற்றின் இணைவினையும் இங்கே நினைவு கொள்ளல் தகும்.

i) இளமையில் கவிஞர் ஏழ்மையில் வாடிய நிலை;
ii) இன்று கவிஞர் அவர்கள் ''ஆற்றல் மிகு'' கவிஞராக உருவாகியிருக்கும் நிலை.

—இவை. உண்மைகள்.

எளிமையும் ஏக்கமும் எதிர்ப்புகளுமே அவர் ஓர் "ஆற்றல் மிகு கவிஞ"ராக உருவாக வழிவகுத்துள்ளன.

—இ.நு. இருநிலை இணைவுப் பார்வை.

**கவிஞரின் பேராற்றல்:**

பாரதிதாசன் வழிவந்தவரான கவிஞர் கபிலவாணன் அவர்கள், 'அவர் வழி', 'இவர் வழி' என்றில்லாமல், தமக்கென்று ஒரு 'தனிவழி' அமைத்துக் கொண்டார்; அதனால்தான் அவர்தம் கவிதைகள் பலவற்றிலும் "ஒரு தனித்துவம்' 'காண முடிகின்றது; அதுவே அவர்தம் வெற்றி என்றும் கூறலாம்.

"நதிப் பால்" (ப. 28)
"கலப்பை நகம்" (ப. 29)
"மேக நீக்ரோப் பெண்" (ப. 34)

என இணைத்துக் காண்பதிலும் சரி.

"தாவரத்தை"
"தா—வரத்தை" (ப. 29)

எனப் பிரித்துக் காண்பதிலும் சரி, இவர் தமக்கென்று ஒரு முத்திரையைப் பதிய வைத்துக்கொள்கிறார்.

கவிஞர் கபிலவாணன் அவர்கள் இயற்கை நிகழ்வு களில்— காட்சிகளில் தம்மைப் பெரிதும் ஈடுபடுத்திக் கொள்பவர்; இயற்கையில் தாய்மையை— மனைவி மையை— குழந்தைமையை— உணர்பவர்; இயற்கையை நுணுக்கமாக-அணுக்கமாகக் காண்பவர். அதனால்தான், அவை அவருடைய கவிதைகளில், புத்தம் புதிய கோணங்களில்— கோலங்களில் "எழுத்தாக்கம்" பெற்றி ருப்பதைக் காண முடிகின்றது.

சான்றுகளாக,

"பூப்படைஞ்ச பூமிப்பொண்ணு
மஞ்சக் குளிக்கிறா...

புதுசா அவ வெட்கப்பட்டு
ஆறாச் சிரிக்கிறா(ள்)
தோப்புச் சேலையைக்
காத்துப்பய தொட்டிமுக்கிறா(ன்)
தூங்கப் போற பூமிகூட
மயங்கி நிக்கிறா..." (ப. 65)

"சங்கொதுங்கிக் கிடப்பதைப்போல், யாரோ வைத்த
சந்தனச்சோப் பிருப்பதுபோல் விண்ணில் உள்ளாய்;
எங்கள்கை அரிவாள்போல்— பறங்கிக் கீற்றாய்
இருக்கின்றாய் சிலநாள்கள் ஏனிக் கோலம்?" (ப. 47)

என வருவனவற்றைக் கொள்ளலாம்.

## இயற்கையும் சமுதாயக் கண்ணோட்டமும்:

இயற்கையை இயற்கையாகக் காண்பது— காட்டு வது— என்றில்லாமல், அவற்றைச் சமுதாயக் கண்ணோட்டத்தோடு— சமுதாய எழுச்சிக் கண்ணோட்டத்தோடு அணுகும்போது கவிஞர் ஒளிர்கிறார்— தனிவாழ்வு பெறுகிறார் எனலாம். இந்த உண்மையை, "விண் மீன்கள்" என்னும் பாடலில்,

"வாழா வெட்டிப் பெண்கள் வடித்த
வெப்பக் கண்ணீர்த் திவலைகளோ? — இந்தப்
பாழாய்ப் போன சமுகச் சேற்றுக்
கஞ்சிக் கிடக்கும் உயிரிகளோ?" (ப. 39)

எனவரும் அடிகளும், "வானப் பண்ணையின் வசியம்" என்னும் பாடலில்,

"இருட்டதி காரத்தை எதிர்த்த மக்கள்
உருவாக்கும் சமுத்துவ ஒளியாட் சிக்காக
அந்திப் புரட்சி நடத்திய போது
சிந்திய ரத்தக் கங்கையோ வானம்?" (ப. 31)

எனவரும் அடிகளும் உறுதி செய்யும்.

இந்தப் போக்கில் புரட்சிக் கவிஞரின் தாக்கத்தையும் காண முடிகின்றது.

## சமுதாயப் போலிமைகளைச் சாடல்:

சமுதாயத்தின் போலிமைகளையும் கொடுமைகளை யும் கண்டு, பூனையைப் போல் கண்ணை மூடிக் கொள்பவன் அல்ல கவிஞன்; புலியைப் போல் சீறித் தாக்குபவன்தான் கவிஞன்.

அத்தகையதொரு "பாய்ச்சலை"க் கவிஞர் கபிலவாணன் அவர்களிடமும் காண முடிகின்றது.

சான்றாக,

"சாதி மதங்கள் இனத்தாலும்— பலரின்
சகுனியின் துரோகக் குணத்தாலும்
வீதியில் பிணங்கள் உருளுவதோ— இந்த
வேதனை யாற்புவி கருகுவதோ?" (ப. 145)

"வேலிபயிரை மேயும்—நல்ல
வெள்ளாடுகள் சாயும்
காலிகளின் வேலை—நாடே
கண்ணம் வைக்கும் சாலை
நல்லவர்க்குக் கண்ணீர்—நய
வஞ்சகர்க்குப் பன்னீர்
கல்விக்கில்லை மதிப்பு— இங்கு
கபமைபுதுப் பதிப்பு" (ப. 66)

என்பனவற்றைக் கொள்ளலாம்.

## பெண்ணுரிமை போற்றல்:

உலக அமைதி என்பது மனித இன ஒருமைப் பாட்டால் அமைகிறது; மனித இன ஒருமைப்பாட்டின் அடித்தளம் மனித இனச் சமன்மைப்பாடு; மனித இனச் சமன்மைப்பாட்டின் ஒரு கூறு, ஆண் பெண் சமன்மைப் பாடு.

உலக அமைதி— ஒருமைப்பாடு கருதும் எந்த ஓர் அறிஞரும்— கவிஞரும் ஆண் பெண் சமன்மையை— பெண்ணுரிமையை— போற்றாதிருக்கமாட்டார்கள்.

உலக அரங்கில் பெண்ணுரிமைக்கு முதன் முதல் குரல் கொடுத்த பெருமகனார் திருவள்ளவர். அந்தப் பெருமகனாரிடம் பற்றுகொண்ட— அவரின் வழிவந்தவர் கவிஞர் கபிலவாணன் அவர்கள். ஆகவே, அவருடைய உள்ளமும் பெண்ணுரிமைக்கு ஏங்குவதைக் காண முடிகின்றது.

பூக்களின் புதிய பிரகடனம், அப்பா வாங்கிய தலைவரடி, ஏனம்மா குனிகின்றாய் நீ, உடைந்த கப்பல் அதிகாரி, மணமகன் உறுதிமொழி, கோணல் மனக் குறிப்பு, போன்ற கவிதைகளில் அந்த ஏக்கம்— எண்ணம்— தெளிவாகவே வெளிப்பட்டுள்ளது.

இரும்பிளைத்தால் மனம்நோகும் இந்த நாட்டார்
 இருவிழியில் ஒருவிழியாய் விளங்கும் மாதர்
துரும்பாகிப் போனாலும் விடுவ தில்லை" *(ப. 214)*

எனச் சமுதாயத்தின் சமன்மை அற்ற போக்கைச் சாடும் கவிஞர் அவர்கள்,

"ஆண்களுக்குப் பெண்களென்ன போதை யூட்டி
 அந்தரத்தில் மிதக்கவைக்கும் அபினா.. கள்ளா?
வீண்கதைக்கும் கேலிக்கும் வசைமொ ழிக்கும்
 விளைநிலமா, யந்திரமா பெண்கள் கூட்டம்?" *(ப. 214)*

எனப் பெண்களை எழுச்சிபெற ஆற்றுப்படுத்து கின்றார். எழுச்சியோடு அமையாமல், அவர்களை எரிமலையாகவே வெடிக்கச் செய்வதை,

"நகங்களெல்லாம் கத்திகளாய் மாறும்; எங்கள்
 நாவமுதும் கொல்லுகிற நஞ்சாய் மாறும்;
முகமதியும் நெருப்புமிழும்; வளைக்க ரங்கள்
 முட்டியினைப் பெயர்த்தெடுக்கும் கருவி யாகும்" *(ப. 215)*

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

அதே வேளையில்,

"கலைபல கற்ற மாப்பிள்ளையின்— அறிவுக்
 கலைமிகும் முகத்தைப் பாருங்கடி!

விலைதான் கொஞ்சம் அதிகமடி—இதனை
விட்டால் பெண்களுக் கென்னவிதி?" (ப. 218)

"அழகென்ன இளமையென்ன பொருளி லார்க்கு?
அத்தனையும் வழக்கொழிந்த சொல்போ லாகும்;
முழுப்போட்டுப் பார்க்கின்ற சாதி பேத
முறைதானே வாழ்வுக்கோர் முட்டுக் கட்டை?' (ப. 228)

எனவரும் பாடல் அடிகளில் பெண்களின் இன்றைய சமுதாய மதிப்பு நிலையை— சமுதாயப் பிற்போக்கு நிலையைக் கோடிட்டும் காட்டுகின்றார்; காட்டி, சமுதாயம் இத்தகைய இழிநிலைகளிலிருந்து மாற்றம் பெற ஆற்றுப்படுத்துகின்றார்.

இங்கெல்லாம், ஒரு பெரும் சமுதாயக் கவிஞராக— சமுதாய விழிப்புணர்வுக்கு ஆற்றுப்படுத்தும் கவிஞராகக் —கபிலவாணன் அவர்கள் ஒளிர்வதையே காண முடிகின்றது.

## அறம்—ஊடுபொருள்:

கவிஞர் கபிலவாணன் அவர்கள், "இலக்கியம் வாழ்க்கைக்காக" என்னும் உறுதியான கொள்கை படைத்தவர், வள்ளுவத்தில் தோய்ந்த உள்ளத்தவர்; இயல்பாகவே அற நெஞ்சம் வாய்க்கப் பெற்றவர். ஆகவே, அவர்தம் கவிதைகளில் "அறம்" பேராதிக்கம் செலுத்துவதைக் காண முடிகின்றது; கவிதைகளின் "ஊடுபொருளாக" அறமே அமைவு பெறுகிறது எனினும் பொருந்தும். இதற்கு,

"அறத் தமிழ்" (ப. 243)
"அற முறைப் போர்" (ப. 238)
"ஆசாரக் கோவைதந்து
அனுதினமும் அருள்விளைய
பாசமுடன் விதைத்திருந்தேன்" (ப. 258)
"நீதிக் குறள் கொடுத்த வள்ளுவர்" (ப. 186)

என்பன ஒரு சில சான்றுகள்.

**எதிர் நோக்கு:**

இன்று உலகம் சீரழிந்து கொண்டிருக்கிறது; நல்லவர் உள்ளங்கள் நலிந்து கொண்டிருக்கின்றன என்பது உண்மையே.

ஆனால், கவிஞர்கள் 'நம்பிக்கை' இழந்து விடுவதில்லை. எதிர்காலத்தில் ஒரு பெரிய மாற்றம் ஏற்படும் என்னும் நம்பிக்கை அவர்கள் உள்ளத்தில் வேரோடி நிற்கும்; அல்லது, ஏற்பட வேண்டும் என்று வேட்கை வேரோடி நிற்கும்.

இந்த நம்பிக்கையின்— வேட்கையின்— வெளிப்பாட்டை "ஒரு புதிய பூமி" என்னும் கவிதையில் காண முடிகின்றது.

> "கூண்டில் அடைபட்ட மாந்தர் களிங்கே
> கொதித்தே எழுந்து விட்டார்!
> ஆண்டான் அடிமைகள் இல்லாமலே யொரு
> அண்டம் பிறக்குதடா...!
> சத்தியமாகவே மனிதரைப் போற்றிடும்
> காலம் உதிக்கிறது!
> நித்திய தரித்திரம் இல்லாம லேயொரு
> நீள்புவி பிறக்கிறது!

என அவர் உள்ளம் நம்பிக்கைக் கூத்தாடுகிறது. இது தான் உண்மையான கவிதை உள்ளம்.

**சமுதாய ஆற்றுப்படை:**

மொத்தத்தில், இந்த நூல், கவிஞர் கபிலவாணன் அவர்களின் பேராற்றலை— கவிதை ஆற்றலை— வெளிப்படுத்தும் ஒரு பேரேடாக விளங்குகிறது.

சமுதாய விழிப்புணர்வுக்கு வழிவகுத்து, எதிர்காலத்தில் நல்லதொரு— வல்லதொரு— சமுதாயம் அமைய ஆற்றுப்படுத்தும் "சமுதாய ஆற்றுப்படை" யாகவும் இந்நூல் அமைகிறது.

சென்னை—5
30-12-91.

—கு. மோகனராசு.

# அணிந்துரை

டாக்டர். பு. மு. காங்கா தரன்
தமிழ்ப் பேராசிரியர், மாநிலக் கல்லூரி. சென்னை-5.

'தானை பதாதி தண்டம் பதாகினி
வானி அநிகம் வாகினி தந்திரம்
சேனை பகுதி பாடி பலம்படை

என்பது பிங்கலம். படைக்கு ஆதியாகிய தலைவனைப் படைத்தலைவன், சேனாதி என்னும் பெயர்களான முன்னோர் வழங்கி வந்தனர். சமண், சமர், சேமம் என வருஞ்சொற்களின் முன்னொலி வீழ்ந்து முறையே அமண், அமர், ஏமம் என வழங்கப் பெற்றாற் போலச் 'சேனாதி' யென்னும் சொல்லினும் முதலொலி வீழ்க்கப் பட்டு 'ஏனாதி' யென வழங்கப் பெற்றது. பிறவும் தமபோல் பேணி வாணிகம் செய்து சிறந்தார்க்குக் காவிதி, எட்டி யென்னும் பட்டங்களைச் சூட்டி மகிழ்ந் தாற்போலவே, படைத் தலைமையிற் சிறந்தார்க்கும் இவ் ஏனாதி என்னும் திரிபெயரைப் பட்டமாகச் சூட்டி மகிழ்ந் தனர். தொல்காப்பியர் இத்தகு பட்டப் பெயர்களைச் 'சிறப்பினாகிய பெயர்நிலைக் கிளவி' என்றல் காண்க. சாத்தஞ் சாத்தன் என்பான் பராந்தகன் நெடுஞ்சடையன் என்னும் பாண்டிய மன்னன் வழங்க, ஏனாதிப் பட்டத் தைப் பூண்டு விளங்கினான் என்னுஞ் செய்தியை வேள்விக்குடிச் செப்பேடுகள் தெரிவிக்கின்றன. அறு பான் மூவர் நாயன்மார்களுள் ஒருவராகிய ஏனாதி நாத நாயனாரும் இப்பட்டத்தைப் பூண்டு விளங்கியமையைப் பெரியபுராணம் நுவலுகின்றது. ஏனாதிப்பட்டத்தைப்

பெறுவோர்க்கு 'ஏனாதி மோதிரம்' செறிக்கப் பெறும்; இஃதேயன்றிப் பெருநிதியமும், இறையிலி நிலமும், முற்றூட்டு ஊரும் அளிக்கப் பெறும் என்பது சீவக சிந்தாமணியான் அறியக் கிடப்பதாகும்.

'ஆழ்கடல் வையத் தில்லா
அருநிதி அரசு, நல்ல
சூழ்மணி ஆழி, செம்பொன்
சூட்டொடு கண்ணி, காதல்
தோழர்கட் கருளித் தொல்லை
உழந்தவர் தம்மைத் தோன்ற
வாழ்கென நிதியும் நாடும்
மன்னவன் கொடுப்பித் தானே.'

மன்னனால் சிறப்புச் செய்யப் பெறும் போது, அளிக்கப் பெறும் ஊர் அல்லது நாடு முற்றூட்டு எனப்பெறும். ஏனாதிப் பட்டத்தைப் பெற்ற படைத்தலைவன் ஒருவனுக்கு முற்றூட்டாக வழங்கப் பெற்ற ஊராகலாம், கவிஞர் கபிலவாணனை ஈன்று புறந்தந்து தாலாட்டி வளர்த்த தஞ்சைமாவட்டத்துச் சிற்றூராகிய ஏனாதி கரம்பை. கவிஞரின் கருத்துப்படி வளமற்ற இவ்வூர் தான் வளமிக்க கவிஞனை உருவாக்கியுள்ளது. தனக்குக் கவித்துவத்தைக் கொடுத்தமையை,

'ஆற்றல்மிகு மகரந்தச் சேர்க்கைக் கென்னை
ஆளாக்கி விட்டதிவ்வூர்; வளர்த்த திவ்வூர்'

என்னும் அடியானும்,

'தஞ்சைமா வட்டத்துப் பேரா ஊர்ணி
நிலத்தருகே படுத்திருக்கும் என்றன் சிற்றூர்
நீண்டகவிக் கனவுகளை வளர்த்த துண்மை'

என்னும் அடிகளானும்,

'இங்கேதான் யான்கற்றுத் தேர்ச்சி பெற்றேன்;
இனம்புரியாச் சுமையோடும் கவலை யோடும்
இங்கேதான் அடியளந்து நடந்தேன்; என்னை
எழுந்தீட்டிக் காரனாகச் செய்த திவ்வூர்.'

என்னும் அடிகளானும் கவிஞரே சொல்லிவிடுகின்றார். ஏனாதிகரம்பை யென்னும் இம்முற்றூட்டூர் முற்றவூட்டிய இயற்கைக் கல்வியும், 'தந்தையை ஒப்பர் மக்கள்' என்பதனுக்கேற்ப, 'எல்லையிலாப் பாடல்களை நெஞ்சில் காத்த' தன் தந்தைவழி வந்த பாடம் போற்றலும் இத்தகு கவிதைத் தொகுப்பை வழங்கக் கவிஞர்க்குத் துணை நின்றன போலும்.

கவிஞர் கபிலவாணன் இலக்கிய இலக்கணப் புலமை சான்றவர். இவர் பயின்ற நூல்களைப் பட்டியல் போட்டுக் காட்டுகின்றன, 'தமிழ் என்தாய்' 'தமிழ்க் காதலியே' என்றாற் போன்ற தலைப்பில் வரும் கவிதைகளும், நூல் முழுவதும் பரந்து கிடக்கும் மேற்கோளாட்சிகளும். ஐவகையாய் விரிந்த இலக்கணப் புலமைக்கு,

'அலைக்கையால் பூமியினைத் தொட்டுத் தொட்டே
ஆனந்தக் கலிப்பாவை பாடும் ஆழி'

'கைக்கிளை' இல்லாதவன்
கருமேனி நெடியவன் நான்'

'உச்சியில் கழுத்தில் நெஞ்சில்
உயர்வான மூக்கில் வந்து
கச்சிதமாய்ப் பொருந்தும்
காற்றினால் எழுத்துத் தோன்றும்!'

'உடம்படு மெய்யேஎன் சந்தச் சிந்தே'

'உயிருக்கும் மெய்தேவை; இளமை யான
காற்றுக்கு நீர்தேவை'

'...................... நெஞ்சில்
உருப்பெற்ற காதலினை வளர்த்துக் கொள்வோம்
ஒருயிராய் ஒட்டணியாய் உலகில் வாழ்வோம்.'

'உவமையணி போன்றவளே! நிலவுநக லான
ஒளிமேனி இளமானே! புன்னகைப்பூக் காரி'

'விழிபரணி நூலாகும்; காற்சிலம்பு: கைகள்
வெண்டளைகள் நன்னூலே இடையாகும்; அன்பே!
பொழிப்பெதுகை போன்றவளே! புகழேந்தி வார்த்த
புதுப்பாட்டே! குண்டலமே! கலித்தொகையே! இன்ப
மொழிப்புணர்ச்சி தற்றிடுவோம். இதழொற்றிக் கொள்வோம்.'

'கூட்டெழுத்தாய் நாமிணையும் நேரமிது'

'புணரியலின் வருமொழியே! புதுத்தொகையே! யாரும்
கற்பிக்கா மெய்ம்மயக்கை விழிவரியால் காட்டு.'

'ஒன்றென்னும் எண்ணாவோம்; உயிர்மெய்யாய் ஆவோம்'

'அ இ உ வாய்ச் சுட்டெழுத்தும் மூன்றாம் அன்றோ?'

'ஈங்குமுதல், வழிசார்பு என்று நூல்கள்
இனம்பிரிக்கும் வகைமூன்று; விகாரம் மூன்று'

என்றாற் போன்று நூல் முழுவதும் பரந்து வரும் கவிதை யடிகளே சாட்சியம் பகர்கின்றனர். இவ்வாறே, பரந்து பட்ட இலக்கியப் புலமைக்கு,

'பூத்த வேங்கை வியன்சினை ஏறி
மயிலினம் அகவும் நாடன்'
'கையில் ஊமன் கண்ணில் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போலப் பரந்தின்று'

போன்ற சங்கப் பாடற் கருத்துக்கள் பயின்றுவர யாத்துள்ள,

'வேங்கையில் குடியிருக்கும்— எழில்
விந்தைமா மயில்களெல்லாம்
பாங்குடன் நடனமாடும்' (ஓங்குயர் மலைச்சாரல்)

'வெயிலில் வைச்ச வெண்ணெயாக உருகுது—மனம்
வேதனையாம் நெருப்பினிலே கருகுது' (சோதி நிலா காயுது)

என்னும் அடிகளும்,

'.............. வெள்ளி வெண்
கோல்நிரைத்தனபோல் கொழுந்தாரைகள்

என்னும் சிந்தாமணியடியை நினைவூட்டுவதாக அமைந்துள்ள,

'தண்ணீர்க் கம்பிக் கைகளினால்
தரையைத் தழுவா திருந்திட்டால்'
(மழையே மழையே வா! வா!)

என்னும் அடியும்,

'குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு'

'ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்குமென் பீடு'

என்றாற் போன்ற குறட் கருத்துக்களைத் தாங்கிவரும்,

'ஓட்டினை உடைத்துக் காற்று,
ஓடிடும் பறவை யானால்
வீட்டினை, உடம்பைத் தீயில்
வேகவைத் தழுவீர் அன்றோ' (காற்றின் கவிதை)

'மன்றிலதி காரம்செய் நளமன்னன் இங்கே
மனையிலதி காரம்செய் அழகரசி முன்னால்
ஒன்றுமிலாப் பஞ்செனவே இருப்பதனை ஓர்வாய்
உன்வலியை வாங்கியெங்கோ பதுக்கி விட்டாய்'
(வெட்கமென்ன வெட்கம்)

எனவரும் அடிகளும்,

'நீலவான் ஆடைக்குள் உடல்ம றைத்து
நிலவென்று காட்டுகின்றாய் ஒளிமுக த்தைக்

கோலமுழுதும் காட்டி விட்டால் காதல்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ?...'

என்னும் பாவேந்தனை இனங்காட்டும்,

'கட்டுடலை ஒளிமேனிச் சுரங்கந் தன்னைக்
காட்டாமல் வட்டமுகம் மட்டும் காட்டும்
கட்டழகி ..... ...............' (வெண்ணிலா)

எனவரும் அடியும், என்னால் சுட்டிக் காட்டப் பெறாத—பாடல்களில் பயின்று வருகின்ற பிற அடிகளும் சான்றாகலாம்.

'நிலவென்றால் அதற்கெந்த உறுப்பும் இல்லை
நெஞ்சள்ளும் சிலையென்றால் உயிர்தான் இல்லை;
மலரென்றால் அதற்குன்போல் ஞான மில்லை
மயிலென்றால் அதுபேசக் கண்ட தில்லை' (விடைதாராயோ)

என்னும் பாடல்,

'மானென அவளைச் சொன்னால் மருளுதல் அவளுக் கில்லை;
மீன்விழி உடையாள் என்றால் மீனிலே கருமை இல்லை;
தேன்மொழிக் குவமை சொன்னால் தெவிட்டுதல் தேனுக் குண்டு;
கூன்பிறை நெற்றி யென்றால் குறைமுகம் இருண்டு போகும்.'

என்னும் நாமக்கல்லாரை நினைவுபடுத்துகின்றது. இங்ஙனம் உவமமாகவும், கருத்து நடையாகவும் தங்கட் கவிதைகளில் பயிலச் செய்வது, முன்னோர் மொழி பொருளேயன்றி அவர்மொழியும் பொன்னே போல் போற்றிக் கொள்ளும் பெருந்தகைமையைக் காட்டுவதே யன்றி நூலறிவும் வெளிக் கொணர்வதாகும். இம்மாட்சி மைப்பட்ட நூல்களைப் பயிலப் பன்னூல் பயின்ற அறிவும் கிட்டிவிடுகின்றது. இதனை இந்நூலாசிரியரும் மேற்கொண்டுள்ளார்.

'கவிஞர் கபிலவாணன் கவிதைக் தொகுதி' என்னும் பெயரிய இந்நூல் ஆசிரியம், விருத்தம், சிந்து, தெம்மாங்கு

என்றும் தென்பாங்கு, புதுக்கவிதை ஆகிய பா வகைகளால் புனையப் பெற்ற நூறு அரிய கவிதைகளைக் கொண்டுள்ளது; உவமை, உருவகம், சிலேடை, மடக்கு என்னும் அணிவகைகளோடு அங்கதச் செய்யுளும் பெற்றுள்ளது; யாற்றுநீர் ஒழுக்குப் போன்ற தெளிவான போக்கு; எளிய சொற் செப்பம்; பாவேந்தன் மிடுக்கு ஆயவற்றைத் தன்னகத்தே கொண்டது; கற்றுத் தெளிவதற்குப் புலவோரை நாடச் செய்யா நலத்தது என்பவற்றை நூலில் தோயும் வாசகர்கள் உணராமற் போகார். பாடுபொருள் தேர்ந்தெடுப்பு— தேர்ந்த பொருளுக்குகந்த தலைப்புத் தரும் பாங்கு— தேர்ந்த பொருளைக் கருத்து நயம் செறியக் கூறும் பெற்றி— செறிந்த கருத்துக்களை எடுத்து வைக்கும் பான்மை— மாற்றுக் கருத்தினரைச் செம்பொருளாகவோ, பழிகரப்பாகவோ சாடும் போதும் நயம்பட மொழியும் முறைமை ஆகியன ஆசிரியர்க்குக் கைவந்த கலையாக உள்ளன. இக்கலைக்குக் காரணம், பன்னூல் பயிற்சி, சிந்தனைத் தெளிவு பாரதி, பாவேந்தன், பட்டினத்தார் பாடல்களில் படிந்த தோய்வு. இவையாவற்றிற்கும் மேலாகக் கவிதையேடு நடத்திய (அனுபவம்) பட்டறிவு போன்றனவாதல் கூடும்.

முதற்கண், 'வர்க்கமூலம்' என்னும் தலைப்பில் மண்ணுலகை— மெத்தை— ஆப்பிள்— தொட்டில்— அமுதப்பெண் எனப் பலபடப் புனைந்துரைத்த கவிஞர், பெரிய துணையைப் பெற்று விண்ணுலகை அடைய வேண்டுமென்னும் அவா அமைந்த பாடலை இறுதிக்கண் வைத்துள்ளது நயமுடையதேயாம். இவ்விரண்டிற்கும் இடைக்கண்ணமைந்த கவிதைகள், வாழ்க்கையின் பல்வேறு பரிமாணங்களையும், பற்றப்படவேண்டிய பல்வகைப்பட்ட சமுதாய— அற முறைகளையும், அவற்றைப் பின்பற்றிப் பயன்மரமாகிய பலதிறப்பட்ட பெரியோர்களையும் பற்றியவனவாக உள்ளன.

பூமி, (வர்க்க மூலம்) வானம், வேனில், மேகம், கிளி, விண்மீன், மலைச்சாரல், மழை, காவிரி, நிலா, இயற்கை நங்கை, பனை, புல், காற்று ஆகியவற்றைப் புனையும் புனைவில் கற்பனையின் குடியிருப்பு, உவமையின் அரசிருப்புப் போன்றன பளிச்சிடுகின்றன. விரிக்கின் பெருகுமென்று அஞ்சினாலும்,

'உழைப்பாளர்க்கே — தாலிகட்டிக் கொண்ட வள்நான்'
(வர்க்கமூலம்)

எனப் பூமி கூறும் கட்டியத்தையும்,

'இருட்டதி காரத்தை எதிர்த்த மக்கள்
உருவாக்கும் சமத்துவ ஒளியாட்சிக் காக
அந்திப் புரட்சி நடத்திய போது
சிந்திய ரத்தக் கங்கையோ வானம்?'
(வானப்பண்ணையின் வசியம்)

என வரும் அந்திவான் அழகையும்,

'வாழா வெட்டிப் பெண்கள் வடித்த
வெப்பக் கண்ணீர்த் திவலைகளோ — இந்தப்
பாழாய்ப் போன சமூகச் சேற்றுக்கு
அஞ்சிக் கிடசகும உயிரிகளோ' (விண்மீன்கள்)

என இராப் போழ்தத்து விண்ணில் கொட்டிக்கிடக்கும் நட்சத்திரங்களைக் கண்டு வெதும்பும் சீர்மையையும்,

'ஈங்கொருநாள் மறைகின்றாய்...? தூர மாகும்
இயல்பாலே வாராமல் இருக்கின் றாயோ' (வெண்ணிலா)

என நில்வு ஒருநாள் வாராமைக்குக் கூறும் குறிப்பேற்றத் தையும் தாங்கிவரும் கவிதையடிகளைச் சுட்டாமல் செல்ல இயலவில்லை. இத்தகையன நூற்கண் ஏராளம்! ஏராளம்.

'விடைதாராயோ' என்பது முதல் 'வெட்கமென்ன வெட்கம் என்பதுவரை உள்ள கவிதைகளைக் 'காதல்' என்னுந் தலைப்பில் அடக்கிக் கொள்ளலாம். இதன்கண்,

மதிவெளிச்சம் கொண்டவள் ஒருத்தி, தன் அங்கத்தால் மலர்க்கண்காட்சி நடத்துகின்றாள். கண்ணுறும் காளையோ 'உடம்பெல்லாம் உனைப் பூசிக் கொள்ளா விட்டால்— ஊழித்தீ எனை எரித்துச் சாம்பலாக்கும்; கடலுக்குள் முத்துக் குளித்துத் திளைக்காவிட்டால்— காலாவதி யாகிவிடும் உயிர்ச் செப்பேடு' என்கின்றான். அவன் ஆவலோ,

'சட்டையில்லாமல்
.. . கட்டியணைத்து,
கால்களைப் பின்னி மேனியில் ஏறிப்
பன்னாடையைக்
களைந்தெறிந்து
பாளைவாய் வடிக்கும்
உமிழ்நீர் மதுவைக்
குடிக்கும் ......... (பனைமரம்)

மரமேறிகளைப் போலப் போதையில் பரவசமடைய வேண்டுமென்பதாம். மற்றொருத்தி 'உண்பதற்குக் கரும்போடு கூலி வேறா? எனக்கேட்டுக் கரும்பயிறற்குக் கூலி போலும் என்னும் பரிமேலழகருரையை நினைவூட்டிப் பேசுபவள். அவள்,

'கண்ணுக்குள் நெருஞ்சிமுள் வைத்துக் கொண்டு
கனல்மூச்சுத் தேருருட்டி உழலு கின்றேன்'

என வருத்தத்தைக் காட்டி,

'தண்ணீரில் உப்பாகக் கரைவ தற்குத்
தயாராக இருக்கின்றேன்.

என விருப்பத்தைக் கூறுபவள். இவள் வார்த்தையில் 'அப்பொடு பெய்த உப்பே போல' என்ற உரைகாரர்கள் தம் நெடி வீசுகின்றது. மெய்யெழுத்து உயிரெழுத்தோடு கலந்து தன் மாத்திரையளவை இழப்பதுபோலத் தலைவ னொடு கலந்து தன்னியல்பை இழக்கவும்— இரண்டறக் கலக்கவும்— துடிக்கும் மெய்த்தலைவி என்பதும்

தெரிகின்றது. உள்ளம் வந்து சேரவில்லை; நான் வந்து சேர்ந்தேன் எனும் கருத்தில் மகாவித்துவானவர்கட்குச் சீட்டுக் கவிதையை எழுதிய மாயூரம் வேத நாயகம் பிள்ளையை,

'அன்பைப் பொழிந்து அன்பைப் பொழிந்து
ஆயிரம்........ கொடுத்தனுப்பு
என்னை உருக்கும் அன்பைக் கொண்டாய்
இன்றே அனுப்பிடுக' (நலந்தானா)

எனச் செல்விக் கண்ணிடம் சிந்தையை அனுப்பி மீள வரப்பெறாத தலைவன் தன்கூற்றால் நினைவுபடுத்துகின்றான். காதலில் தோல்வியைத் தழுவிய தலைவன் ஒருவன்,

'உனக்கேனும் நல்வாழ்வு கிடைத்த தாம்மா?
உவர்க்கடலில் தண்ணீர்க்குத் தவிக்கின் றாயா?

என்று கேட்பதன் வாயிலாகத் தன்வாழ்வு கலைந்தமையும், தாகம் தீர்த்தலறியாத உவர்க்கடலன்ன செல்வக் கடலில் வாழ்க்கைப்பட்டதையும் கூறாமல் கூறி 'நதிக் கண்ணீர்' வடிக்கின்றான். வடித்தவன், தன்னாற்றாமையையும் வடிக்கின்றான்,

'கடல்பற்றி எரிவதனை யார ணைப்பார்?'

என்று. இவ்வரி, தஞ்சைவாணன் கோவைப் பாங்கன் அழுங்கிக் கூறுகின்ற,

'.. ........... கடல் வெதுப்பில்
தன்மேல் விளாவவுண் டோதரை மேலொரு தண்புனலே.'

எனும் குமுறலைக் காட்டத் தவறவில்லை. தாகம் தீர்க்கும் தண்ணீராக இருக்கும் 'அத்தரில் ஊறிய நிலவின் தங்கை' ஒருத்தி, கிழமைகள் ஏழனையும் தன்னிடத்தே கொண்டு மிளிர்கின்றாள்.

'திங்களிற் செவ்வாய் கொண்டவளே—புத
வியாழ வெள்ளிகள் கண்டவளே – காம்

சங்கமம் ஆவதைச் சனிக்குடிலன்
தடுத்திடக் கூடுமோ ஞாயிறிலே?

இவ்வரிகளிலும்,

'இன்றைக்கு முடிவேந்தர் விரும்பவொரு
திளைத்திரும்பு தனைப்பொன் செய்வேம்
இன்றைக்குப் பொன்னளித்து நாளை வெள்ளி
இயற்றினும்பின் சனிய தாமே'

என மொழியும் கச்சிக்கலம்பக இரசவாதிகள், தோற்றம் காட்டுகின்றனர்.

மக்கள் நிலை, பன்மணித்திரள், சமூகநீதி ஆயவழிகளில் பகுக்கலாம் எனநின்ற கவிதைகளில் உள்ள,

'ஊரார் பிள்ளைக் குணவளித்தால் – ஒகோ
உன்றன் பிள்ளைகள் வளருமென்ற
சீரார் மொழிமேற் கொண்டாயோ? – உன்றன்
சிந்தையறிந்தேன்... தூங்கம்மா... (இந்திய மயக்கம்)

எனும் பழமொழி கலந்த அங்கதத்தையும்,

'இஞ்சியின் மேல் தோலுரியும்; எங்கள் கைகால்
இருக்கின்ற விரல்களிலும் தோலு ரிந்து
கொஞ்சமாய்க் குறைந்துவரும்; அழுகிப் போகும்
கொடியதொரு நோய்க்குப்பேர் தொழுநோ யாமோ?'
(தொழுநோயாளர்கள்)

என்னும் எடுத்துக்காட்டுவமங் கூடிய சிலேடையையும், (தொழுநோய்– நோயின் பெயர்; தொழுநோய்— வினைத்தொகையாயின் வணங்கத்தக்க நோய்)

'நேற்றைக்கு எமைமதித்த உரோமம் கூட
நிற்காமல் எமைவெறுத்து உதிர்ந்து போகும்'

எனும் உள்ளக் குமுறலோடு கலந்த அழுகையையும், பிறவற்றையும் படித்து நீந்திய வாசகர்கள்.

'மண்டைக் காடுகள் இனி வேண்டாம்—எந்த
மசூதிக் குள்ளும் சிலை வேண்டாம்
சண்டைகள் எதற்கு நமக்குள்ளே — இனிச்
சமத்துவம் காண்போம் நொடிக் குள்ளே'

துடிதுடிக்கும் உரமிக்க தோள்க ளெல்லாம்
தொடர்ந்தொன்றாய் இணைந்து நிற்கக் கற்றுக் கொண்டால்
விடியாமல் சபிக்கின்ற நளாயி னிக்கு
வேலையில்லை; பரிதிகூட நேரங் கேட்கும்

என்றாற்போன்ற சமத்துவத்தையும். ஒற்றுமையின் இன்றியமையாமையையும் விடாமுயற்சியையும் இன்னும் எத்தனையோ நீதிகளையும் தாங்கிவரும் அடிகளைத் காணலாம்.

எங்கள் நாடு எங்கள் மொழியென இயம்புந் திறனைத் தந்த பாரதி, கண்ணனைத் தோழனாக— தாயாக— தந்தையாக— சேவகனாக— அரசனாக— சீடனாக— குருவாக— குழந்தையாக— பிள்ளையாக— காதலனாக— காதலனாக— காதலியாக — ஆண்டானாக —தெய்வமாகப் படைத்துக் காட்டுவதுபோலவே கவிஞர் கபிலவாணனும் தமிழைத் தாயாக— காதலியாக— மனைவிளக்காகப் போற்றிப் படைக்கின்ற கண்டுக் கவிதைகளை இன்றைய மாணாக்கருலகம் உண்டு சுவைக்க வேண்டும்; மொழிப்பற்று மீதூர வேண்டும்.

'அள்ள அள்ளக் குறையாத ஞான ஆழி— அணுவுக் குள் கடல் காட்டும் விந்தை ஆடி' யாம் திருக்குறளை ஈந்த வான்புகழ் வள்ளுவர், மருதத்தில் பெய்த நன் மழையைப் போன்ற மனிதருள் மாணிக்கம்— நேரு, பாரதம் காத்த இந்திரா அன்னை, வெண்பாவைப் போல (பிறதளை கலவா) மேன்மை— வேற்றுமை காட்டா நெஞ்சத்துத் தமிழ்த் தென்றல் திரு. வி. க., 'கங்கையினைக் கவிதைச் சொல்லாக்கித் தீயைக்— கக்கு கின்ற எரிமலையை நெஞ்சில் தேக்கி— வெங்கொடுமைச்

சீர்கேட்டை எதிர்த்த' பூபாளப் பாவேந்தன்— பாரதிதாசன். கந்தகச் சொற்களால் கண்களைத் திறந்து சிந்திக்க வைத்த ஈரோட்டுச் சிங்கம்'— ஓரோட்டுக்கும் எங்கியிராத சமூகச் சிற்பி— பெரியார் என்னும் பேரொளி, சரித்திரத் தலைவனாம் இராஜீவ் காந்தி, சால்புமணி மேகலையாம் தமிழகத்துப் பெண் முதல்வர்—ஜெயலலிதா, வள்ளுவர் குறளுக்காக வந்தவோர் இலக்கியமாம் அண்ணல் காந்தி ஆகிய தலைவர்கள் போற்றப்படும் விதம் படித்துப் பாராட்டத்தக்கது. இவற்றுள், உலகத்தார் உள்ளத்துள் நின்றதற்கான அவர்தம் செயற்பாடுகள், கொள்கைகள் விளக்கம் பெறுகின்றன.

'குடிமக்கள் பெருமை'; 'அப்பா வாங்கிய தலைவரடி' எனுந் தலைப்பிட்ட கவிதைகள் பழிகரப்பு அங்கதங்களாக அமைகின்றன; மறைமுகமாகக் கள்ளுண்ணாமையையும், வரதட்சணைக் கொடுமையையும் பேசுகின்றன.

'வீட்டிலுள்ள தண்ணீரைக் குடித்தால் கூட
விளைகிறது சுகமென்றால். சரக்கை ஊறப்
போட்டுவைத்துச் சுத்திசெய்த நீர்கு டித்தால்
போகாத நோய்களெல்லால் போய்வி டாதோ?'

'சிந்தனைகள் ஏதுமற்றுச் சவத்தைப் போலே
செயலற்றுக் கிடப்பதுதான் சமாதி யென்பர்
வந்தனைக்கும் உரியோராய் வாழ்ந்த சித்தர்;
வாய்க்காத சமாதியையும் கூட்டி வைக்கும்
செந்தேனைக்— காய்ச்சிவடித் தெடுத்த நீரை—
சீச்சீஎன் றிகழலாமோ உணர்ந்தி டாமல்?
இந்துமுஸ்லீம் ஏழைபணக் காரன் எல்லாம்
இணைகின்ற ஐக்கியசபை மதுக்க டைதான்!
(குடிமக்கள் பெருமை)

'யந்திர ஆடுகல், தொலைக்காட்சி — பெரிய
வானொலிப் பெட்டியும் சேர்த்தளித்தோம்
தந்தச் சிலையவள் கொண்டுவரும் — மாதச்
சம்பள மும் இவர் பையினுக்கே!
கலைபல கற்ற மாப்பிள்ளையின் — அறிவுக்
கலைமிகு முகத்தைப் பாருங்கடி!
விலைதான் கொஞ்சம் அதிகமடி — இதனை
விட்டால் பெண்களுக் கென்னவிதி?
(அப்பா வாங்கிய தலைவரடி)

'அடுக்களையில் நாளெல்லாம் வெந்து நின்றோம்
அகமுடையான் ஆடலுக்கும் இடம்கொ டுத்தோம்;
கொடுக்கில்லாத் தேளாகக் கொட்டும் மாமி
கொண்டு வந்த தென்னவெனக் குதறும் காத்தி
படுக்கைக்கு வருவாளா எனச்சி ரிக்கும்
பருவத்தின் இளம்விடலை... ...' என
அடுக்கடுக்காய் வரும் தொல்லைகளைச் சுமந்த பூக்கள்—பெண்கள்.

ஆடவரைத் தண்டிக்க மார்க்கம் இல்லை;
ஆயிரந்தான் இருந்தாலும் குற்றம் இல்லை;
கூடலுக்கும் வாடலுக்கும் மட்டுந் தானா
குடஞ்சுமக்கும் பூங்காக்கள் தேவை யிங்கே?
பூடகமாய்ப் பேசவில்லை; நீதி கேட்டுப்
போர்க்கொடியை உயர்த்துகிறோம்; வெல்வோம்
நாங்கள்
ஆடல்களை நிறுத்துங்கள்: வர்க்க பேதம்
அமைதியினை விழுங்கிவிடும்; திருந்திப் போங்கள்'

எனப் போர்க்கொடியை உயர்த்திப் பிரகடனம் செய்வது முதலாக 'முதிர்கன்னியின் முன்னுரை' முடியவுள்ள கருத்துச் சுமந்த பாடல்கள் மகளிர் நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

'பிரும்ம சூத்திரம்' தொடங்கிப் 'பெரிய துணை வேண்டும்' வரையுள்ள கவிதைகள் தத்துவத்தின்

தொட்டிலாக அமைந்துள்ளன. 'பெண் ஆணாய்ப் பேதம் வைத்துச் செய்பவன் யாரு? பேதத்திலும் கவர்ச்சி வைத்து முடித்தவன் யாரு?— பஞ்சபூதக் கூட்டணிக்குச் செயலர் யாரு? என்பதைத் தன் மும்மலத்தான் அறியாத ஆன்மா, இரும்பிடத்துத் துரும்புபோல இயல்பானே நின்ற அறியாமையான் வந்த வேலை முடிக்காமல் பந்தக்காலைப் பிடித்து உழல்வதையும், உள்ள போது எல்லாம் வந்து ஒட்டிக் கொள்வதும், இல்லாதபோது அற்றகுளத்து அறுநீர்ப் பறவைபோல எல்லாம் வெட்டிக் கொள்வதுமாகிய வாழ்வின் படிநிலைகளையும், காவலுக்குப் பலர் இருப்பினும் மரணதேவன் வந்துற்றபோது கற்றவித்தை பயன்படாது இறைவன் போதடியே அப்போது தோது என்பதையும், கட்டுடலம் கதைக் குதவாச் சதையாவதையும், 'கடைவிரித்தேன் கொள்வாரில்லை; கட்டிவிட்டேன்' என்ற வடலூர் வள்ளல் கருத்துப்படி, அப்பர்— திருமூலர்— அருணகிரி ஆகியோர் கருத்தை எடுத்துக் கூறவும் கேளாத உலகர்ப்பற்றியும் எடுத்து மொழிகின்றன, இக்கவிதைகள். மேலும், இவையே, ஆட்டுவிப்பான் ஆட்டுவிக்கும் வித்தையை உணர்ந்து கொள்ளும் காலத்துக் காலம் இல்லாமல் போவதையும் காட்டுகின்றன;

'விருத்தியுரை யெழுத
விதி நுனியைத் தொட்டழிக்க
உருகிக் கொண்டிருக்கையிலே மயிலே— நரி
ஊளையிட்டுப் பார்ப்பதென்ன குயிலே'

பொட்டல் வெளிப் ப்ட்டணத்தில்— பூச்சியத்தின் இராச்சியத்தில்— பொன்னரங்கில் ஆடும் அருள் பரம் பொருள்' ஆகிய பெரிய துணையிருப்பின், ஐம்புலன்களுள் காமம், குரோதம், கோபம், உலோபம், மதம், மார்ச்சரியம் என்னும் ஆறலைக் கள்வர்கள் அறுவர் குடும்பம் நடத்த் ஒன்று இரண்டாகி— இரண்டு

மூன்றாகி— மூன்று பலவாகி வாழ்வு கிளைத்தாலும் தேகசுத்தி செய்து கொண்டு விண்ணுலகை அடையலாம் என வழிகோலுகின்றன.

'தேரூரும் சாலைவிட்டு
தேகசுத்தி செய்துகொண்டு
பேரூர்க்குப் போவதற்குப்
பெரியதுணை வேண்டுமடி
வாலைப் பெண்ணே— வழி என்னடிஞானப் பெண்ணே'

பாவேந்தர் நூற்றாண்டு விழாவையொட்டித் தமிழக அரசு நடத்திய கவிதைப் போட்டியில் முதலிடம் பெற்றவர் இத்தொகுப்பு நூலாசிரியர் கவிஞர் கபிலவாணன்.

'என்னை நன்றாய் இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாய்த் தமிழ் செய்யு மாறே'

என்ற திருமூலர் பாணியிலே,

'பத்துப் பாட்டிருக்கும்— மதுரைப்
பாண்டியன் பூங்கொடி நீ!
எத்தனை நோன்பிருந்தாய்— என்னை
இப்படி வளர்ப்பதற்கே'

எனத் தமிழ்த் தாயை வினவும் வீறு இவருடையது; இவ் வீறு கவிதைகளிலும் அரசோச்சுகின்றது. சொல்வீறு; சொல்லும்வீறு; எனப் பல்வீறு கொண்ட கவிதைகளைத் தன்னகத்தேகொண்ட இந்நூலைத் தமிழ்கூறு நல்லுலகம் செம்மையின் வரவேற்பதாக. நன்னூல்கள் பல மேலும் படைக்கத் தமிழ்க் கடவுள்— குன்றமர் குகன்— ஆசிரியருக்கருளவேண்டி, அவன் குளிர்ப்பதங்களை மனத்தில் குறிக்கின்றேன். வாழ்க வையம்.

சென்னை-5,
30-12-91.

அன்பன்,
பு. மு. கங்காதரன்.

# முருகா என்னை எழுதவிடு!

முருகா என்னை எழுதவிடு
முத்துக் குமரா வாழ்வுகொடு

கவிதை மடையைத் திறந்துவிடு— நெஞ்சக்
களைகளை மட்டும் கெல்லியெடு!
கவிஞனென் எதிரியைத் திருத்திவிடு— எனைக்
காளிதா சனைப்போல நிமிர்த்திவிடு.

முருகா என்னை எழுதவிடு
முத்துக் குமரா வாழ்வுகொடு!

கீரனின் நாக்கும் எனக்காக— நானே
கிழக்கில் உதிக்கும் விளக்காக
ஆரா வமுத மழையாக— கவிதை
அரசர்க் கரசர் நானாக

முருகா என்னை எழுதவிடு
முத்துக் குமரா வாழ்வுகொடு!

வீணையை விறகாய் எரிக்கின்றார்— என்
வேதனையிற் பலர்சிரிக் கின்றார்
பூனையார் நிமிர்ந்தே பார்க்கின்றார்— இந்தப்
புலிமேல் திராவகம் வார்க்கின்றார்!

முருகா என்னை எழுதவிடு
முத்துக்குமரா வாழ்வுகொடு!

சத்திய நெருப்பைப் பதம்பார்க்க— இந்தச்
சமுத்திரத் தடிமண் ணையெடுக்க
எத்தர்கள் சிலபேர் துடிக்கின்றார்— ஐயா
ஏனிவர் இப்படி நடிக்கின்றார்?

முருகா என்னை எழுதவிடு
முத்துக் குமரா வாழ்வுகொடு

# வர்க்கமூலம்

நான் உலகின் வர்க்கமூலம் - தொங்கும் கோளம் -
நலியாமல் மிகவிரைவாய்ச் சுழலும் மெத்தை
வான்விதானத் தில்தொங்கும் கயிற்றில் ஆடும்
மண் ஆப்பிள்; உயிரினத்தை வளர்க்கும் தொட்டில்;
கான்முல்லை ஊசியிலை மரங்கள் என்றன்
கருங்கூந்தல்; மலைகளெல்லாம் மார்ப கங்கள்
தேன்சொரியும் மருதமென்கைத் தான்ப ரேகை!
சின்னயிடை யேநெய்தல்; அமுதப் பெண்நான்.

மக்களகம் அதிகமானால் அடிவ யிற்றில்
பற்றியெழு யுந்தீயை அணைப்ப தற்கே
பக்கமெல்லாம் சமுத்திரத்தை வைத்துள் ளேன்நான்
தீயணைப்புப் படைவீரன் தூங்கு வானா?
முக்கலொலி யோடலைந்து திரிகின் றான்என்
முதுகினையும் தடவுகிறான் சபலத் தோடு:
தக்கணத்துப் பாறைமனம். உழைப்பா ளர்க்கே
தாலிகட்டிக் கொண்டவள்நான்; மாறு வேனா?

பொன்ரேகை என்கரங்க வயிற்றில் ஓடும்.
புடைந்திருக்கும் கனிவகைகள்; வியர்வை வித்தை
என்மேனியில் விதைத்தால் போகம் கிட்டும்
ஏமாற்றிக் கொண்டிருந்தால் வறுமை வாட்டும்!
வன்மனத்தால் பூமியெனைத் தனியு டைமை
வைப்பாக்க வருபவரைக் கேலி யாக்கி
புன்னகைப்பேன் பரிதாப மாகப் பார்ப்பேன்
பூமியெனக் குயிரினமே அடக்க மன்றோ?

என்மீது பெண்களுயிர் வாழ்வ தால்தான்
எனக்கிருக்கும் இழுப்பாற்றல் பெற்றுள் ளார்கள்;
என்மீது வழிந்தோடும் நதிப்பா லால்தான்
எலாவுயிரும் வாழ்வடையும்; நிலைத்து நிற்கும்;
என்மீதும் கலப்பைநகம் படுவ தால்தான்
கதிர்விளைவாய்ச் சிரிக்கின்றேன் தாயா கின்றேன்;
மண்மீது நீர்த்தாரை இலாத தால்தான்
வன்பாலை வெயில்நோயால் துடிக்கின் றேன்நான்

அரும்பாகிப் பூத்துமண மூச்சு விட்டும்
அறியாமல் வசந்தத்தில் திணறு வேன்நான்:
கரும்புமொழி பேசியிள நீரை யூட்டி
கலந்துமன மகிழ்ந்திடுவேன் குளிர்கா லத்தில்;
பருவத்து விளையாட்டில் ஆசை வைப்பேன்
பதிவிரதா கோன்பிருப்பேன் சிலநே ரத்தில்;
திருவிழாவை இளவேனிற் காலங் காட்டி
தென்றலெனும் மூச்சுவிட்டுக் கொண்டி ருப்பேன்.

தாவரத்தை உயிரினத்தைப் படைப்ப தும்நான்
தயைகாட்டிக் காப்பதுவும் அழிப்ப தும்நான்;
தா-வரத்தை எனமரங்கள் கிளைக்கை தூக்கி
மலர்காட்டி வானத்தை இறைஞ்சி னாலும்,
சேமவைப்பு நானேதான்; ஒட்ட கம்போல்
சேமித்துத் தண்ணீரைக் கொடுக்கின் றேனே.
பூமகளென் வயிறன்றோ இறந்த பின்னும்
புகலிடமாய் மிளிர்கிறது உயிர்கட் கெல்லாம்?

பூவெனக்கு மிகப்பிடிக்கும்: அதனா லேதான்
பூவாடை உடுத்துகின்றேன் புல்ரோ மத்தும்
பூவைத்துப் பார்க்கின்றேன்; மகிழு கின்றேன்
பூமியெனை அடையும்வெறி தலையில் ஏற,
தீவைத்துப் பேரழிவைச் செய்கின் றீர்கள்
தீயநெறி கைவிட்டு நலஞ்சே ருங்கள்;
காவைத்துக் கொண்டிருக்கும் மண்ணைப் போல
கடனாற்றி வாழுங்கள் வளந்தே டுங்கள்.



# வானப் பண்ணையின் வசியம்

என்ன நடக்கிறது? என்னதான் நடக்கிறது?
பொன்னை உருக்கிப் பூமிக்கு வார்ப்பதால்,
சூரியக் கிழவன் சூதுசெய் கின்றானோ?
காரியம் இளைய நங்கையை மயக்க
வானூர்ப் பண்ணையார், வைத்துள பொன்னைக்
கரைத்துத் தெளித்துக் கலங்குகின் றாரோ?

மாலையாம் மங்கைக்கு மங்கல வாத்தியம்!
சோலை மலர்களின் சுந்தரப் புன்னகை,
குங்குமச் சிவப்பு. கொட்டிக் கிடக்க
இங்கோர் அரசனின் ஆட்சி முடிகிறதோ?

ஒளிக்கதிர் வழங்கியோன் ஓய்வுறும் நேரம்!
களிப்புடன் வண்ணக் கலவைகள் சேர்த்து
அணிவகுப் பாலே மரியாதை செய்தவோ?
மணிக்கடல் பொழியும் சூரியச் சுந்தரன்
இருட்டுக் குகைக்குள் இப்போது நுழைகிறான்;
திரட்டு நகைகளின் பிரதி பலிப்பு
வானமண்டலத்தையே வனப்பாக் கிவிட்டதே!
நாணம் மிகுந்த நங்கைபோ அந்திவான்;

இருட்டதி காரத்தை எதிர்த்த மக்கள்
உருவாக்கும் சமத்துவ ஒளியாட் சிக்காக
அந்திப் புரட்சி நடத்திய போது
சிந்திய ரத்தக் கங்கையோ வானம்?

இரவில் உலாவரும் காதல் தேவதைக்கு
வரவேற் போவியம் வரைதற் காக
தலைக்கனம் பிடித்த இயற்கை ஓவியன்
வண்ணக் கலவையை வான வீதியில்
வீசி யெறிந்ததால் விளைந்த காட்சியோ?

சூரியத் தலைவன் இருள்மஞ் சத்திற்கு
நேராக இழுத்துச் செல்லப் படுகிறான்!

ஒளிக்குடும் பத்தின் ஒப்பிலாத் தலைவன்
களிப்புடன் காட்சி யமுதைக் கண்களாற்
பருகித் தீர்க்கப் படம் வரை கின்றானோ?

அந்தி நேரத்தில் வாங்கிய செய்தியை,
எந்தன் மனையிலே இடுவ தென்பதை
மறந்து போன மடாக் குடிகாரன்
பறப்பான்; நிற்பான் பையவே நகருவான்
தெருவெலாந் தேடியும் திரிந்தலைந் திடுவான்!

இதுவரை மௌனமாய் இருந்து பார்த்த
மதுக்குல மலர்ச்செடி மங்கையர் கூட்டம்,
தென்றலின் கூத்தினால் அரும்பிய சிரிப்பை
அடக்க வியலாமல் மறைக்கத் தெரியாமல்
மலர்களாய்ச் சிரித்து மணமா கிறார்கள்.

என்னதான் மேற்கே இனியும் நடக்கிறது?
இன்னலில் இதுவரை எரிச்சலாய் இருந்த
சூரியக் கிழவன் குளிர்ந்து விட்டானா?

# வேனில் இளவரசன்

வேனிற் காலமாம் இளவரசன்
வீதியில் ஊர்வலம் வருகின்றான்!
தேனினும் இனிய செயல்புரிய—
தேடி மகிழ்ந்தவன் வருகின்றான்...

மாங்குயில் புலவர்கள் இசைபாட,
மலர்க்கொடி நங்கையர் நின்றாட,
ஏங்கிய காதலர் உறவாட
இளமை வளர்த்திடும் நோக்கோட,

வேனிற் காலமாம் இளவரசன்
வீதியில் ஊர்வலம் வருகின்றான்...

மல்லிகை முல்லை முழுநீலம்,
செண்பகம் அசோகம் கணையாக,
வில்லாம் கரும்பில் தொடுத்தேக
வீரர்கள் அனைவரும் தோற்றோட

வேனிற் காலமாம் இளவரசன்
வீதியில் ஊர்வலம் வருகின்றான்
தேனினும் இனிய செயல்புரிய
தேடி மகிழ்ந்தவன் வருகின்றான்...

சித்திரை நிலவு குடையாக
சில்லெனும் வண்டுகள் கொம்பூத
சிலிர்க்கும் தென்றல் தேரேறி
கிளியினம் வழியில் புடைசூழ...

வேனிற் காலமாம் இளவரசன்
வீதியில் ஊர்வலம் வருகின்றான்!
தேனினும் இனிய செயல்புரிய
தேடி மகிழ்ந்தவன வருகின்றான்.

மகரக் கொடி-அவன் முன்போக
மாமரம் புதுப்பெண் போலாக
ஆம்பல் குவளையில் வண்டாட
அகிலமே மகிழ்ந்திது கொண்டாட

வேனிற் காலமாம் இளவரசன்
வீதியில் ஊர்வலம் வருகின்றான்!
தேனினும் இனிய செயல்புரிய
தேடி மகிழ்ந்தவன் வருகின்றான்...



# மேக நீக்ரோப் பெண் சிரிப்பு

வானிலே நாட்டியம் நடக்கிறது ஏனோ
நொடிக்குள மறைந்தும் விடுகிறது!
கானிலே நெளியும் சுடர்ப்பாம்போ? - அது
கார்முகில் எழுதும் கவிக்கீற்றோ?

பிறக்கும் போதே இறக்கிறது — ஆனால்
பேரொளி வீசிச் சிறக்கிறது!
'புறப்பொருள' பொன்னேன் பறக்கிறது—இந்தப்
புவியோர்க் கஞ்சியா மறைகிறது?

மேக நீக்ரோப் பெண்சிரிப்பில் — இந்த
மேதினி மயங்குமோ ஒளிவிரிப்பில்?
மோகனப் புன்னகை செய்துவிட்டு — பேரிடி
முழக்கம் ஆகுமோ நிலைகெட்டு?

ஈர முகில்மேல் ஒளிக்கோடு யாரோ
எழுதும் போதே அழிகிறது
சேரத் துடித்தோர் தொடுகையிலே - உணர்ச்சி
சிதறி ஒளியாய்த் தெரிகிறது!



கவிஞர் கபிலவாணன்

மழைக்கு முந்தைப் பேற்றுக்கு -வான
மருத்துவி ஊசி மருந்திதுதான்!
உழைப்பவர் கைவரும் செல்வம்போல்—மேலே
உலாவரும் ஒளியேன் மறைகிறதாம்?

ஒலியும் ஒளியுமாய்த் தொலைக்காட்சி—தந்த
ஒருமுன் னோட்டமே மின்காட்சி
கிலியில் ஏதோ நடக்கிறது வானம்
கிறுக்கி (ப்) பாடம் படிக்கிறது.

மின்னல் விலாங்குமீன் பிடித்தற்கு தொழில்
மேதையேன் இன்னும் வரவில்லை?
கண்ணைக் கவர்ந்தே இருட்டாக்கும்—மின்னற்
கன்னிக் கென்ன மனத்துயரம்?



## கிளியே! வா வா விருந்தாக

கிளியே கிளியே செம்பவளம் — உனக்குக்
கிடைத்த தெப்படி மூக்காக?
வெளியெலாம் சுற்றும் வடிவழகே — எங்கள்
வீட்டுக்கு வாவா விருந்தாக.

பச்சை மரகத மேனியொரு — காஞ்சிப்
பட்டாய் மின்னுவ தெப்படியோ?
நிச்சயம் உன்கண் வைரக்கல் — உன்னை
நினைத்தால் மனமே துள்ளுதடி!

கடையில் வாங்கா மாலையினை அழகுக்
கழுத்தினில் அணிந்து கொண்டுள்ளாய்!
கடையின் மாங்கா(ய்) மாலைக்கு — பெண்கள்
கண்ணீர் வடிப்பதைக் காணாயோ?

கிளையில் ஊஞ்சல் ஆடுகிறாய் — எங்கும்
கிறுக்குத் தனமாய் ஓடுகிறாய்!
விளைந்த மணிகளைத் தேடுகிறாய் — கனியை
விரும்பித் தின்றுயிர் வாழுகிறாய்!

இசையைத் திருவாய் மொழியாக்கி —பேசும்
இனிமை, செவிக்கு விருந்தாகும்;
அசையும் அழகு வார்ப்படமே – பவள
அலகால் எனக்கொரு முத்தந்தா!

கூடையில் மாம்பழம் இருக்கிறது — இனிப்புக்
கொய்யாப் பழமும் கிடக்கிறது.
ஆடையும் நகையும் தருவேண்டி — வெளியில்
அலையா திங்குநீ வந்திருப்பாய்!

கூரிய நகங்களாம் கத்திகளை – காலிற்
பொருத்திக் கொண்டுள கிளியாரே
பாரினைப் படைத்தோன் உனைப்பார்த்தால் — அறையில்
பதுக்கிக் கொள்ள நினைப்பானே!

கூண்டில் அடைத்திட மாட்டேன்நான் — உனக்குக்
கொஞ்சமும் துன்பம் தரமாட்டேன்
காண்பதற் காகவே அழைக்கின்றேன். நெஞ்சக்
கனிவை உணர்த்திட நினைக்கின்றேன்.



# விண்மீன்கள்

ஓட்டை விழுந்த நீலக் குடையை
    உயரத் தூக்கிப் பிடித்தானோ? — இயற்கை,
கூட்டிப் பெருக்கிக் குவிக்கா வண்ணம்
    குறுமணி யெங்கும் விதைத்தானோ?

சின்னக் காசுகள் சிதறிக் கிடக்குது
    சிறுவர்கள் பொறுக்கி யெடுக்காமல் — அவை
கண்ணைச் சிமிட்டும் பெண்களைப் போல
    காதலில் வேகுமோ பொறுக்காமல்?

பண்ணைக் கலவர மண்ணிற் சிதறிய
    கண்ணகி நெல்மணி விண்மீன்கள் — ஆகா!
விண்ணில் மலர்ந்துள பொன்னிற முல்லை
    வேடிக்கை செய்குமோ பொன்மீன்கள்?

தங்கப் பொடியினால் பின்னற் கோலம்
    போடுதற் கிட்ட புள்ளிகளோ மேலே
தொங்கும் விளக்கெனத் தூக்கி நிறுத்திய
    விண்மீன் களென்ன கள்ளிகளோ?

வாழா வெட்டிப் பெண்கள் வடித்த
வெப்பக் கண்ணீர்த் திவலைகளோ? — இந்தப்
பாழாய்ப் போன சமுகச் சேற்றுக்
கஞ்சிக் கிடக்கும் உயிரிகளோ?

வட்டிலில் இட்ட தங்கச் சோற்றைத்
தட்டிக் கொட்டிய தாரிங்கே! — வானக்
கட்டிலில் தூவிய முல்லை மொக்குகள்
கண்ணைக் கவர்ந்திடும் பாரங்கே!

சூரிய வெப்பம் தாங்கா வானில்
அம்மை முத்துகள் விழுந்தனவோ — மக்கள்
வாரிக் கொள்ள முடியா வண்ணம்
வைரக் கற்களே பரந்தனவோ?

இயற்கைத் தேவி சீற்றம் கொண்டே
சிலம்பின் மணிகளைத் தெளித்தாளோ — காதல்
மயக்கக் கவிஞன் எழுதிச் சிதைத்து
முத்துக் கவிதை விரித்தானோ?



# ஓங்குயர் மலைச் சாரல்

இலைக்குடை பிடித்துநிற்கும் – மலையில்,
எண்ணிலாப் பெருமரங்கள்.
மலர்மெத்தை மேற்குதித்து – அங்கு
மகிழ்ந்திடும் வானரங்கள்!

மரகதக் காய்கள் தொங்க – பலா
மரமெலாம் அணிவகுக்கும்.
பரந்திடும் முகிற்சிறார்கள் – வரையில்
படுத்துக்கொண் டுராய்ந்திடுவார்.

புள்ளிமான் அழகுகாட்டி – மனம்
பூரித்து மகிழும்போது
கிள்ளைகள் ஊஞ்சலாடும் – பச்சைக்
கிளைகளில் அணில்களோடும்!

வேங்கையிற் குடியிருக்கும் – எழில்
விந்தைமா மயில்களெல்லாம்
பாங்குடன் நடனமாடும் – கெட்ட
பாம்பினம் அஞ்சியோடும்!

பனித்திரை மெல்லவீழும்—எல்லாப்
பக்கத்தும் புகையேசூழும்!
இனிதான வெயில்வரவால்—வான
ஏழ்நிறப் பாலம்வரும்.

வரும்வழித் தடாகநீரை—எங்கும்
வாரியே உண்டகாற்று
அருவியின் குளிர்ச்சியோடு—தேனை
அள்ளிக் கொணர்ந்தடிக்கும்.

நெருப்பு நிறமலர்கள்—காண்போர்
நெஞ்சைப் பிடித்திழுக்கும்.
கறுப்பு நிறச்சிறகார்—தேனைக்
கண்டு குடித்திருப்பார்!

மூங்கில்கள் தலையசைக்கும்—அங்கொரு
மோகன இசைபிறக்கும்!
தூங்காச் சில்வண்டுகளோ—பாடித்
தொடர்ந்து மகிழ்ந்திருக்கும்.

மத்தளம் ஒலிப்பதுபோல்—சில
மண்டுகம் ஒலியெழுப்பும்
புத்தம் புதுமகள்போல்—மலை
பூரித்து உயர்ந்திருக்கும்

யானைகள் நடைபயிலும் — அவை
யாற்றினிற் குளித்திருக்கும்!
பூனைகள் மகிழ்ச்சிகொளும் — ஏதோ
பிடித்திட நடித்துநிற்கும்.

பறையொலி யெழுப்புகின்ற — அருவி,
பாறையை விட்டிறங்கும்;
குறைவிலா வெள்ளியாறு — கீழே
குதிப்பதாய்த் தானொழுகும்!

குறிஞ்சி நிலத்தழகில் — நெஞ்சம்
கோடிச் சுகங்காணும்!
அறிஞர்தம் நெஞ்செனவே — மலை
ஆகாயம் வரை உயரும்!



# மழையே, மழையே வா! வா!

உலகைப் புரக்கும் மழைமகனே
உயர்வான் மிதக்கும் வெண்முகிலே
பலகால் நீயிவண் வரவேண்டும்
பசுமைப் புரட்சி செயவேண்டும்!
சலசல வென்றெலா ஓடைகளும்
சங்கீத தப்பா தரவேண்டும்!
புலம்பும் மக்கள் வாழ்ந்திடவே
புவியைத் தொடுவாய் விரைவாக

தண்ணீர்க் கம்பிக் கைகளினால்
தரையைத் தழுவா திருந்திட்டால்
மண்மகள் வருந்தித் துடித்திடுவாள்
மரணக் குரலிற் புலம்பிடுவாள்
உண்பார்க் குணவைக் கொடுப்பவளே
உழவர் கையை முடக்குவதால்
கண்ணை இழக்கும் இவ்வையம்
கலங்கித் துடிக்கும்; முறைதானா?

குடிக்கத் தண்ணீ ராய்வருவாய்
குளத்தில் நின்றுநீ தவம்செய்வாய்;
நடிப்பாய் நதிகளில் ஆடிடுவாய்
நன்மல ரெங்கும் குவித்திடுவாய்
குடியை அரசை இயக்குகிற
குமணா மேலே பறக்காமல்
வடியும் விழிநீர் துடைத்திடவே
வருவாய் முகிலே பெருமழையாய்!

நெருப்பு வெட்டம் தன்நாக்கால்
நிலத்தைத் தீண்டிப் பார்க்கின்றான்!
மருவிலா ஆவினம் புல்லின்றி
மயங்கிக் கிடக்கும்; குழந்தையெலாம்
பெருந்துயர் அடைதல் காணாயோ?
பிழையார் இனிமேல் நீசினந்தால்;
வருகவே பேரிடி மின்னலுடன்
வையம் செழிக்க மழைபொழிக!

தன்பிழை யுணரார் பிறர்குறையை,
தரையில் உரைப்பார் மிகநாண
மின்னல் நகையுடன் இடியிடித்து
மேனி கருத்துப் பொழிந்திடுவாய்,
கன்னல் செழிக்க, கதிர்விளைய
காவிரி மகளின் மனங்குளிர
ஏனல் தீரப் பெருமழையாய்
வருக விரைவாக!



கவிஞர் கபிலவாணன்

# காவிரித்தாயே !

காவிரித்தாயே—எங்கள் காவிரித்தாயே—நீ
நடந்துவரும் வழியிலெல்லாம்
கா—விரித்தாயே...!

குடகுமலை நாட்டினிலே நீபிறந்தாய்
குழந்தையைப்போல் அருவியாக வழிநடந்தாய்
படகுக் கூடை தூக்கிவந்தாய் பொன்னியம்மா
வயல்களிலே நீநடந்து படியளந்தாயே...

காவிரித்தாயே—எங்கள் காவிரித்தாயே...

பூவாடை மேனியிலே உடுத்திக் கொண்டாய்
புரள்பாசிக் கூந்தலினை அலைய விட்டாய்
கயல்விழியைப் புரளவிட்டு இடைநெளித்தாய்...
காற்சதங்கை ஒலியைக்கூட்டி ஆடிவந்தாய்!

காவிரித்தாயே—எங்கள் காவிரித்தாயே...

மரங்களெல்லாம் பச்சைக்குடை பிடித்துநிற்க
மரியாதையாய்க் காற்று மலர்கள் தூவ
தரமிகுந்த உழவரெல்லாம் பாட்டுப் பாட
தரையினிலே ஊர்வலமாய் வருகிறாயம்மா...

காவிரித்தாயே—எங்கள் காவிரித்தாயே...

சோழநாட்டின் மருமகளே குலக்கொடியே நீ
சோலைகளில் முல்லையாகச் சிரிக்கிறாயம்மா...
வாழவைக்கும் நதியமுதே பொன்னி நாயகி...
வரம்பிலாத கடலுனக்கு என்ன நாயகி...?

# வெண்ணிலா!

வான்பொட்டல் வெளியினிலே துணையில் லாமல்
வாழ்ந்துகொண் டிருக்கின்ற வெண்ணி லாவே!
ஏன்இன்னும் ஒளிமுகத்தை மட்டும் காட்டி
ஏங்கியிளைக் கின்றாய்நீ வளரு கின்றாய்;
தேன்சொட்டப் பேசியுனைக் காத லித்துத்
திருமணத்திற் கிழுத்தடித்துக் கொண்டுள் ளானோ
கூன்மனத்துக் காதலன்?உன் மாமி செய்யும்
கொடுமையிலே தனித்திருந்து வாழ்கின் றாயோ?

ஆகாயத் திருந்துகொண்டு குளிர்வெ ளிச்சம்
அளிக்கின்ற மேகலையே இன்ப ஊற்றே!
லோகாய நெறியினர்க்கும் ஞான மார்க்கம்
நுவல்வோர்க்கும் பொதுவாய்நீ விளங்குகின்றாய்
பூ, காயப் பட்டதுபோல் முகத்தி லென்ன.. ?
புள்ளிகளா... சுடப்பட்ட வடுக்கள் தாமா?
நீகாயப் பட்டாலும் உலகிற் கெல்லாம்
நீளொளியைக் கொடுக்கின்றாய் சான்றோ ரைப்போல்;

நீலவானம் பெருங்கடலாம்; கடற்ப ரப்பில்
நிலாப்பெண்ணே நீயுமொரு தங்கக் கப்பல்;
கோலமிகு உடுக்களெலாம் படகுக் கூட்டம்;
குவிந்துள்ள மேகங்கள் நுரைகள் ஆகும்;
பாலமுதம் தோய்ந்ததயிர்க் கட்டி யைப்போல்
பணக்காரன் சினந்தெறிந்த வட்டி லைப்போல்
காலமெல்லாம் கிடக்கின்றாய்; கவிதை யூற்றுக்
கண்களையும் திறக்கின்றாய் குருவைப் போல.

தங்கரதம் செய்வதற்குக் காலத் தச்சர்
கடைந்தெடுத்த சக்கரமோ திங்க ளேநீ;
பொங்குமெழில் தனிற்சிக்கி வானம் உன்னைப்
போதையொடு தூக்கிமடி வைத்துக் கொண்டு,
கங்குலிலே கொஞ்சுகிற காட்சி தானோ
கவின்நிலவே உனைஇரவில் காணும் நேர்த்தி!
எங்கொருநாள் மறைகின்றாய்...? தூர மாகும்.
இயல்பாலே வாராமல் இருக்கின் றாயோ?

தங்கமுலாம் பூசுகின்றாய் தரைமே னிக்கு;
தரித்திரர்க்கும் செல்வருக்கும் ஒளியை வீசி,
இங்கெமக்குப் பாடமொன்றா புகட்டு கின்றாய்...?
எரியாத மதிவிளக்கே! பூத்த பூவே!
சங்கொதுங்கிக் கிடப்பதைப்போல், யாரோ வைத்த
சந்தனச்சோப் பிருப்பதுபோல் விண்ணில் உள்ளாய்;
எங்கள்கை அரிவாள்போல்—பறங்கிக் கீற்றாய்
இருக்கின்றாய் சிலநாள்கள் ஏனிக் கோலம்?

ஆண்டுகொள்ள வந்தாரே வெள்ளை நாட்டார்,
அம்புலியுன் அங்கத்தை ஆய்ந்து பார்த்து(த்)
தீண்டவொண்ணாப் பெண்ணென்றோ ஒதுங்கி விட்டார்?
தெய்வதமே! உனையவரா அறிந்து கொள்வார்?
தாண்டவனின் முடியிருக்கும் தகைமை பெற்றாய்
தமிழ்க்கவிஞர் நெஞ்சிலெலாம் இடமும் பெற்றாய்;
வேண்டுவதோ இனிச்செல்வம்? கடக வீட்டை
விற்றுவிட்டு நீயிங்கே வரமாட் டாயோ?

கொட்டிவைத்த முல்லைப்பூ உடுக்க ளுக்குள்
குமரிப்பெண் நிலாபடுத்துக் கிடக்கின் றாயோ?
பொட்டல்வெளிக் கட்டிலிலே படுத்துக் கொண்டு
போதைமருந் தூட்டிமண்ணைக் கெடுக்க லாமோ?
கட்டுடலை—ஒளிமேனிச் சுரங்கந் தன்னைக்
காட்டாமல், வட்டமுகம் மட்டும் காட்டும்
கட்டழகி! மாரன்தேர்க் குடையும் நீயாம்;
காராடைக் குள்மறையும் மதியே வாழி!



# அழகு நங்கையின் ஆட்சி!

அழகென்னும் இளநங்கை ஆட்சிக் கட்டில்
அணிபெறவே கொலுவிருந் தானு கின்றாள்;
பழஞ்சுமக்கும் வாழைமரம் செறிந்த பச்சைப்
பசுங்காட்டில், நெல்வயலில் அழகைக் கண்டேன்;
கிழடுதட்டாப் பூமியிலே, தென்னந் தோப்பில்
தெய்வீக மாயழகு நடக்கக் கண்டேன்;
பழக்கமிலாப் பெண்ணைப்போல் தென்றற் காற்று
பதுங்கிவரும் மெல்லிசையில் அவளைப் பார்த்தேன்;

அல்லிகளும் தாமரையும் நீரில் நின்றோர்
ஆடையின்றித் தவிப்பதிலும் குளத்து நீரில்
கல்விழுந்து வட்டங்கள் பரவும் போதும்.
கரையிருக்கும் மரங்களெலாம் அசையும் போதும்,
எல்லையிலாப் பேரழகு மயக்கக் கண்டேன்;
இளங்கதிரோன் எழுந்துவரும் காலைப் போதில்
மல்லல்மா ஞாலத்தின் கடலில் வீழும்
மாசில்லாப் பொன்னொளியின் எழில்தான் என்னே!

அலைக்கையால் பூமியினைத் தொட்டுத் தொட்டே
ஆனந்தக் கலிப்பாவைப் பாடும் ஆழி!
வலைவீசும் மீனவர்கள் மிதந்து சென்று
வகைவகையாய் மீன்பிடித்துக் கொணரும் காட்சி;
மலைக்குன்று படுத்திருக்க, அருவி பாடி,
மதர்ப்புநடை போடுகின்ற இன்பக் காட்சி;
இலையாடை பூமிப்பெண் உடுத்திக் கொண்டு
மலர்க்கூடை சுமக்கின்ற அழகும் கண்டேன்!

சேற்றுக்குள் கைவைத்து நாற்று நட்டு
சிற்றூரை— பேரூரை வாழ வைக்கும்,
மாற்றாடை யும்மில்லா ஏழைப் பெண்கள்
மதிப்பூவில்— மயங்குவிழி வண்டி ரண்டில்,
ஆற்றல்மிகும் அழகுநடம் ஆடக் கண்டேன்!
அவர்பருவச் செழிப்பினிலும் எழிலைக் கண்டேன்;
காற்றுக்கை கொண்டியற்கை சேட்டை செய்யும்
காலத்தும் கானழகில் மயங்கி நின்றேன்.

ஊருக்குள் ஆரவாரம் செய்து கொண்டும்
ஒல்லியிடை காட்டிமிக நெளிந்து கொண்டும்
பேருக்கும் புகழுக்கும் மூல மாகப்
பெருகிவரும் ஆற்றினிலே மீன்கள் துள்ளும்
நீருக்குள் மூழ்கியடி மண்ணெ டுத்து
நீந்திவரும் சிறுவர்களில் அழகைக் கண்டேன்;
தேருக்குள் அமர்ந்தசிலை அழகும், ஊரின்
தெருக்கோடிக் கோயிலிலும் அழகே கண்டேன்.

வண்ணவண்ணப் பூக்களிலே வண்டு வந்து
    வட்டவிதழ் களைத்தொட்டுத் தேனு றிஞ்சி,
சுண்ணமெனும் தாதூதும் போது மந்தச்
    சுந்தரியைத் தரிஷித்து மகிழ்ந்து வந்தேன்;
வண்ணமயில், முகில்வண்டி வருதல் பார்த்து
    வளர்தோகை விரித்தாடும் காட்சி தன்னில்,
பண்ணிசைக்கும் மாங்குயிலின் கீதத் தில்நான்
    பரவியுள்ள அழகினையும் அறிந்து கொண்டேன்.

தேய்வதுவும் காய்வதுவும் தெரிந்தே, இன்னும்
    திருந்தாமல் தேய்ந்தோய்ந்து கொண்டி ருக்கும்
வாய்பேசா வெண்ணிலவில், இந்த வையம்
    வயமிழந்து துயில்வதிலும் எழிலைக் கண்டேன்;
காய்த்துநிற்கும் தாவரங்கள், கனிகள் வைத்துக்
    காத்திருக்கும் மரங்களிலும் அழகின் ஆட்சி!
தாய்ப்பறவை குஞ்சுகளுக் கிரையூட் டுங்கால்
    தத்திநடம் புரியுமந்த அழகைக் கண்டேன்.

கொட்டியெறிந் திட்டசிறு வைரக் கற்கள்
    குபேரன்தன் நகைச்சிதறல் விண்மீன் கூட்டம்;
நட்டநடு நிசியினிலே கண்சி மிட்டும்
    நளினத்தும் ஒய்யார அழகைக் கண்டேன்!
பொட்டல்நேர் வானத்தில் அழகு, மின்னல்
    புன்னகையை உதிர்ப்பதிலும் மகிழ்ச்சி யுற்றேன்;
முட்டாக்குப் போடுகின்ற நிலாப்பெண் கொஞ்சம்
    முகில்திரையை அகற்றுவதும் அழகே யாகும்.

வானத்து மழைவில்லில் மருண்ட பார்வை

மங்கையரின் உருவத்தில், சிரிப்பில், நாட்டு

மானத்தைக் காப்பாற்றும் போர்வீ ரன்தன்

மறத்தோளில், செயலிலெலாம் அழகைக் கண்டேன்;

தேனொத்த இனிமைமிகு சொல்மி ழற்றும்

சிறுவர்களில்— தமிழ்ப்பாட்டில்— அழகு கண்டேன்.

கானத்துப் பறவைகளின் சுதந்தி ரத்தில்

கறையானின் புற்றினிலும் அழகே கண்டேன்.

சிற்றூரில் இயற்கையின்கை அழகும், மற்ற

சிறந்தநகர்ப் புறமெல்லாம் செயற்கை நங்கை

பெற்றெடுத்த தொழிலழகும் விளங்கக் கண்டேன்;

பிஞ்சுகிலாக் குழந்தைகளின் அணிவ குப்பில்

கற்பனைக்கைக் கெட்டாத எழிலும் கண்டேன்

கம்பன்தன் காவியத்தில், சிலம்பு நூலில்

அற்புதமாம் பேரழகைக் கண்டு கொண்டேன்

அழகையா ராதனைசெய் துபாடு கின்றேன்.



# பனைமரம் பாடுகிறது

நான் ஏழைக்கிரங்கி
வந்த மரம்
எனது பெயரோ
பனைமரம்!

'கைக்கிளை' இல்லாதவன் நான்!
கருமேனி நெடியவன் நான்:
வான விதானத்தின்
ஒட்டடை மேகங்களை,
தட்டிவிட நினைத்துத்
தலைநிமிர்ந்து
எழுந்தவன் நான்!

மேகத்தின் ஈர இதயம்
தெரிந்த பின்னர்
ஒட்டடைக் குச்சியாகாமல்,
ஒற்றையடியோடு
நீக்ரோ மரமாக
நின்று கொண்டிருக்கிறேன்!

நான் ஏழைக்கிரங்கி
வந்த மரம்
எனது பெயரோ பனைமரம்!

நான் அனிச்சையாய்த்
தானே தோன்றியதால்,
நான்—தான் தோன்றிதான்!

நீர்—ஊற்றினாலும்
நீர்—ஊற்றாவிட்டாலும்
எனது பலன்கள் பலவற்றைத்
தலையாலே தான் தருதலால்
நான்—தருதலையன் தான்...

வறட்சியை எதிர்த்தே
வளர்ந்தவன்
ஆகையால்,
பசுமைப் புரட்சி நடைபெற
மழை வண்டிகள் வருவதற்காகப்
பச்சைக் கொடி
காட்டிக் கொண்டுள்ளேன்.

நான் ஏழைக்கிரங்கி
வந்த மரம்
எனது பெயரோ பனை மரம்!

என் மட்டைக் கைகளைக்
கால வில்லன்

கணக்கில்லாமல் வெட்டினாலும்,
பின்னும் கைகளோடு
காட்சியளிக்கிறேன்.

எனது கைகளே-
கத்தியாயிருப்பதால்
அஃறிணை உயிர்களால்
என்னை, அழிக்க முடிவதில்லை.
சீறிப்பாயும் சீற்றப் புயலும்
விரைவிலே என்னை
வீழ்த்த முடியாது.

மரங்களிலே நான் மிகவும்
வளர்ந்திருக்கிறேன்
மக்களுக்கு வள்ளலாய்ப்படி
அளந்து நிற்கிறேன்!

தண்ணீர்ச் சுகத்திற்காகத்
தவம் கிடக்காமல்,
பிறரின் உழைப்பை
உறிஞ்சிக் கொள்ளாமல்,
பயன் பல கொடுக்கிறேன்!

எழுத்துக் குடியிருப்பை,
'என் ஒலை விரல்களில் தாங்கி
அற நெறிச்சாரத்தை,
அறிவித்து வருவதால்,
அறத்தைக் கொடுக்கும்
ஆசான் நான்தான்!
என்னையே,
முழுமுதற் பொருளாகக் கொண்டு
எத்தனை குடும்பங்கள்,
வாழ்க்கை நடத்தி வருகின்றன?

தூரான பதநீராயே,
கருப்பட்டி பாகக் கொடுத்து,
குடும்ப மானத்தைக்
கட்டிக் காக்கவில்லையா?

சூரியக் கோபத்தின்
சூட்டைத் தணிக்கும்,
நுங்குக் காய்களால்,
உங்கட்கு உணவுப்
பொருளாவதை,
சித்திரைக் கோடையில்
உணர்ந்து கொள்வீர்கள்.

ஏழைகள் சுவைக்கும்
எனது பழங்கள்,
கறுப்பும் சிவப்பும்
கலந்த உருண்டைகள்!

என் கைகளின்
நரம்பு நார்கள்தாம்
கப்பலைக் கட்டும் கயிறுகளாகவும்
தேரையும் இழுக்கும்
வடங்களாகவும்
தெரிவு செய்யப்பட்டுள்ளன!

நான் புழுக்கத்தைப்
போக்குதற்கு
விசிறி தந்தவள்!
பூமியிலே உழைப்பவற்குப்
பொருளாய் வந்தவள்...

சட்டையில்லாமல்,
என்னைக் கட்டியணைத்து,

கால்களைப் பின்னி மேனியில் ஏறி
பன்னாடையைக்
களைந்தெறிந்து
பாளைவாய் வடிக்கும்
உமிழ்நீர் மதுவைக்
குடிக்கின்றீர்கள்.
இன்பப் போதையில்
கேவலமாகிப்
பரவசம் அடைகிறீர்கள்...

இந்த இன்ப மயக்கம்
பனை நான் கொடுக்கும்
இன்பசுகமல்லவா...?

பலருக்கு என்னுடைய,
ஓலை உள்ளங் கைகளே,
வீட்டுக் கூரையாய்
வேயப்படுவதால்,
வீட்டுடம்பின் விலா எலும்புகளாய்
நானே அமைந்து விடுவதால்
வீடு பேற்றையும்
நானே விரும்பியளிக்கிறேன்!

அறம், பொருள், இன்பம், வீடு
அனைத்தையும் அளிக்கும்
அறுபதடிக் கருப்பனாய்-நான்
அவனியில் இருக்கிறேன்...

நான் நாரையின் அலகிற்கு,
உவமை தந்தவன்!
நாளெல்லாம் பயன்
கொடுக்கப்
பிறவியெடுத்தவன்!

உழைக்காமல் வாழும்
சோம்பேறிச் செல்வர்கள்,
எட்டி விடாத நிலையில்தான்
எனது பயன்களைத்
தலையில் தூக்கி
வைத்துக் கொண்டுள்ளேன்.

நான் ஏழைக்கிரங்கி
வந்த மரம்
எனது பெயரோ பனை மரம்!



# புல்லின் புலம்பல்

விரித்துவைத்த பச்சைநிறப் பட்டைப் போல,
விரிமண்ணின ரோமம்போல் வாழு கின்றேன்;
சரியான வடிவிலாமல் கீழே வந்து
சாய்ந்தென்மேல் ஒய்வெடுக்கும் பனித்து ளிக்கு
அரியதொரு பஞ்சுமெத்தை; இயற்கை வீடு
ஆடுமாடு தேடிவந்தென தலையைக் கொய்யும்;
பெரியவரென் அண்ணன்தான் மூங்கில! என்னைப்
பெருந்தொல்லைப் படுத்துவதேன் வையத் தோரே?

மனிதருக்குத் தொல்லைதரா தொதுங்கி வாழ்ந்தால்
மாடுகளை விட்டென்னைக் குறைக்க லாமா?
முனிவிருந்தால் உங்கள்கால் சொத்தை, யெங்கள்
முதுகினிலே கொண்டுவந்தேன் தேய்க்க வேண்டும்?
வனிதையரின் உடல்மூடும் உடையைப் போலே
வையத்தின் உடல்மூடி நானி ருந்தால்,
மனிதருக்கு வந்ததென்ன? புல்லின வேரை
மண்ணிருந்து பறிப்பதன்ால் என்ன நன்மை?

வளராத சிறுமிக்கோர் நன்மை செய்ய
வரமாட்டார் இந்நாட்டார்; திரும்ப மாட்டார்
உளங்கவரும் நிலவாகப் பூத்து நின்றால்,
ஊரிளைஞர் சுற்றிவந்து ஓலம் செய்வார்;
முளரிமணம் கமழ்நாட்டில், நானும் கூட
முடங்கிநின்ற காலத்தில் வந்தா ரில்லை;
தளதளென வளர்ந்திருக்கும் என்னைப் பார்த்துத்
தையலர்கள் வருகிறார்கள் கொய்து போக!

நுகருணர்ச்சி நெடியேற்றும் தைலம் உள்ள
நுட்பமிகும் புல்லாய்நான் இருப்ப தாலே,
தகவிலாமல் எனைவாட்டிக் கொல்ல லாமோ?
தமிழ்படித்த உங்களுக்கா இந்தப் புத்தி?
பகலவனின் ஒளிக்கைக்குப் பயந்து தூங்கும்
பனித்துளிக்குக் கொஞ்சநேரம் உதவி செய்வேன்;
அகமகிழ்வேன் என்செயலால்; நீங்கள் எல்லாம்
அறிவிருந்தும் கழுத்தறுத்துக் கெடுக்கின் றீர்கள்!

கொடுமைசெயும் உயிர்களுக்குள் நாங்கள் கூடக்
குடும்பமுடன் மலர்கின்றோம் வாழு கின்றோம்;
கடுகடுக்கும் சினமுகமும் என்னைக் கண்டால்
கமலம்போல் ஆகிவிடும்; குளிர்ச்சி யாகும்.
வடுவிழியும் காளையுமாய்க் காதல் கொண்டு
வருவார்கள் காவிற்கு: புல்மேல் குந்தி
தொடுக்குமுரை யெலாம்கேட்டு மகிழ்வேன்! நோவேன்
தொன்றுதொட்டென் பாதையிது மாற்ற மில்லை!

காற்றுவாங்க வருகிறார்கள் மக்கள் என்றால்
கடைக்காரர் யாரய்யா? விலைதான் என்ன?
ஆற்றோரம் குளக்கரையில் குடியி ருக்கும்
அழகுநிறை பசும்புல்நான் விளவு கின்றேன்;
வேற்றுமைகள் இளச்சண்டை இங்கே இல்லை
வீட்டுவளம் சொத்துரிமை தேவை இல்லை;
நாற்புறமும் வாழ்ந்திருக்கும் புல்லைப் பார்த்து
நடைபோட வேண்டுகிறேன்? இனிமே லேனும்!

# காற்றின் கவிதை

புவியினை ஆட்டி வைக்கும்
பூதமே காற்று நான்தான்!
செவிப்பறை தன்னைத் தொட்டுச்
செய்தியை வழங்கு தற்கும்
தவிப்பினைத் தீர்ப்ப தற்கும்
உயிரினம் வாழ்வ தற்கும்
புவியினைச் சுற்றிக் கொண்டோர்
போர்வைபோல் இருக்கின் றேன்நான்!

கைப்பிடி இதய மொக்கில்
கவின்நுரை யீர லான
பைக்குள்நான் இருந்து கொண்டு
பாம்புபோல் ஓடு கின்றேன்
மைபடி வானை நோக்கி
மாவளி நான்ப றந்தால்,
வையம்போ லாசை எங்கே?
வாழ்வீரோ காற்றில் லாமல்?

ஓட்டையாம் சாள ரங்கள்
ஒன்பது வாசல் கொண்ட
கோட்டையை இயக்கு கின்ற!
கூட்டணித் தலைவன் நானே!
ஓட்டினை உடைத்துக் காற்று,
ஓடிடும் பறவை யானால்,
வீட்டினை, உடம்பைத் தீயில்
வேகவைத் தழுவீர் அன்றோ?

உச்சியில், கழுத்தில், நெஞ்சில்,
உயர்வான மூக்கில் வந்து
கச்சித மாய்ப்பொ ருந்தும்
காற்றினால் எழுத்துத் தோன்றும்!
குச்சியும் கயிறும் என்றன்
கூத்தினால் நடன மாடும்;
இச்சையும் வெறுப்பும் காற்றின்
இயக்கமே! புரிந்து கொள்வீர்!

என்மனம் துள்ளு மானால்
இசைபெறும் அமுதம் தோன்றும்!
என்நிலை உயர்ந்து மேகத்
தொட்டினால் மழையே கொட்டும்.
என்மனம் வெகுண்டெ ழுந்தால்
இடிமின்னல் ஊழி யாகும்;
என்மனம் சோர்ந்தால், தீயின்
எரிச்சல்தான் உம்மை வாட்டும்.

பள்ளத்தை மெத்தை யாக்கிப்
படுத்துள கடல்நீர் தொட்டு,
தன்னிலே அலையை வைப்பேன்
தூசையும் பறக்கச் செய்வேன்;
புள்ளினம் பறப்ப தற்கும்
போதிய வலிமை யாவேன்
அன்றியும் குறையா என்னால்
அகிலமே இயங்கும் காண்பீர்!

நீரினில் கொப்பு ளத்தை,
நிலைத்திடா நுரையை யெல்லாம்,
பாரினில் படைப்பேன்; மாய்ப்பேன்;
பரம்பொருள் செயல்கள் செய்வேன்
வேரினை நிலத்தில் ஊன்றும்
வினைத்தொகை மரத்தைக் கூட
சீரழித் தழிக்கும் ஆற்றல்
சிறியர்க்கா உண்டு சொல்வீர்?

பந்தாரின் வயிற்றுக் குள்ளே
பாய்ந்துநான் குடிபு குந்தால்
அந்தர மாகத் துள்ளி
ஆடுவேன் குதித்து வீழ்வேன்
சந்தனப் பெண்கள் மெய்யில்
சாய்ந்துநான் சடைபி டிப்பேன்;
சுந்தர அரும்ப விழ்ப்பேன்
சுற்றுவேன் மரம சைப்பேன்.

வடபெருங் கல்லில் மோதி
வாய்க்காலிற் குளித்தெ ழுந்து
அடைமழை நாளில் தெற்கை
அடைகிறேன் வாடைக் காற்றாய்:
அடைமழைக் காற்றென் னாலே
ஆடுவீர் நடுக்கம் கொள்வீர்;
நடையினைத் தளர்த்தித் தென்றல்
நங்கையாய்ச் சுகம ளிப்பேன்!

கடலினில் மிதக்கும் கப்பல்
　　கவிதையில் மிதக்கும் இன்பம்;
உடலினில் மிதக்கும் சக்தி;
　　உள்ளத்தில் மிதக்கும் எண்ணம்;
தடந்தோளில் மிதக்கும் வீரம்
　　தரையெலாம் மிதக்கும் காற்று
அடடாவோ காற்றென் ஆட்டத்
　　தால்புவி மகிழு மன்றோ?



# குளுகுளுன்னு

குளுகுளுன்னு காத்தடிக்குது
குங்குமத் தோப்பிலே...
சலசலன்னு காத்தடிக்குது
சந்தனத் தோப்பிலே ..

பூப்படைஞ்ச பூமிப்பொண்ணு
மஞ்சக் குளிக்கிறா...
புதுசா அவ வெட்கட்பட்டு
ஆறாச் சிரிக்கிறா(ள்)
தோப்புச் சேலையைக்
காத்துப்பய தொட்டிழுக்கிறா(ன்)
தூங்கப் போற பூமிகூட
மயங்கி நிக்கிறா...

குளுகுளுன்னு காத்தடிக்குது குங்குமத் தோப்பிலே

சலசலன்னு காத்தடிக்குது சந்தனத் தோப்பிலே...

ஆத்துக்கரை ஓரமெல்லாம்
பொன்னு வெளையுது...ஆனா
சோத்துக்காக மனிசன்வயிறு
ஏங்கிக் காயுது . !
காத்திருந்தவன் கையிருந்தே
செல்வம் போகுது — அதைக்
கண்டதாலே சூரியனின்
உடம்பும் எரியுது...

குளுகுளுன்னு காத்தடிக்குது குங்குமத் தோப்பிலே
சலசலன்னு காத்தடிக்குது சந்தனத் தோப்பிலே...

காட்டிலேயும் பலமிருகம்
பயந்து வாழுது...!
காலமெல்லாம் இந்தக்கதை
தொடர்ந்து வருகுது...
நாட்டிலேயும் பலமிருகம்
மனுஷ ரானது
நன்மை தீமை கலந்துதானே
உலகமானது...

குளுகுளுன்னு காத்தடிக்குது குங்குமத் தோப்பிலே
சலசலனனு காத்தடிக்குது சந்தனத் தோப்பிலே...!



# விடைதாராயோ...

பூக்களெலாம் தாமரைப்பூ ஆவ தில்லை
புலவரெலாம் வள்ளுவராய் வென்ற தில்லை;
தேக்குமரத் திற்கீடாய் மரங்க ளில்லை;
தென்பாங்கு போன்றவளே உன்னைப் போலே
நோக்குடைய உயிர்ச்சிலையைக் கண்ட தில்லை
நுண்ணறிவுக் காவியமே! தொட்டுத் தோயும்
ஆக்கத்தை நானடையத் தேடு கின்றேன்
அன்புமழைக் கேங்குகிறேன் விடைதா ராயோ?

மதிவெளிச்சம் கொண்டவளே! மலர்க்கண் காட்சி
மாதங்கத் தில்நடத்தும் மோக னாங்கி,
புதியதொரு பூங்காவாய், நூல்க ளோடு
போம்போதுன் காலசைவில் நடனம் கண்டேன்;
அதிமதுர மாயொலிக்கும் கொலுசுக் குள்ளே
அகப்பட்டுப் போனதென்றன் பிஞ்சு நெஞ்சம்;
இதிகாசம் சொல்லுகின்ற தேவ தைபோல்
இயல்பான ஒயில்மயிலே! விடைதா ராயோ?

கடல்தந்த நீலத்தைக் கண்ணில் தேக்கி,
கருக்கொண்ட மேகத்தைக் கூந்த லாக்கி,
மடல்தாழை யேடுகளை உடம்பா யாக்கி
மதுமலரை இதழாக்கி, முத்துக் கோத்து,
அடடாவோ பல்வரிசை கொண்டு வந்தாய்
அந்திவெயில் நிறத்தவளே சுகந்தத் தென்றல்
நடமிடல்போல் அசைகின்றாய் நளினங் காட்டி
நாள்மலர்நீ யென்நெஞ்சில் எரியை மூட்டி!

நிலவென்றால் அதற்கெந்த உறுப்பும் இல்லை.
நெஞ்சள்ளும் சிலையென்றால் உயிர்தா னில்லை;
மலரென்றால் அதற்குன்போல் ஞான மில்லை;
மயிலென்றால் அதுபேசக் கண்ட தில்லை;
குலமகளே.. குழலென்றால் - தானாய் நாதம்
கொடுக்கின்ற திறமில்லை உன்னைப் போலே;
இலங்குலக்கும் திருவிளக்கே! பார்வை யாலே
இமயத்தில் நானுலவ விடைதா ராயோ?

சொல்லுக்குப் பொருளாவாய்; விழிக ளுக்குச்
சுடராவாய்; என்வாழ்வுக் கப்பல் நீயே!
நெல்லுக்குள் அரிசியிலாப் பொழுதில் என்ன
நிலையாகும்? அந்நிலைக்குத் தள்ளி டாதே!
கல்லுக்குள் ஈரமுண்டு: மலருன் னெஞ்சில்
கனிவுண்டு; கடைத்தேற்றும் காத லுண்டு;
இல்லறந்தான் சொர்க்கத்தின் முன்னு ரையாம்!
என்னுயிரே, தயக்கமின்றி விடைதா ராயோ?

மழைவில்லை மகுடமாக்கிச் சூட்ட வேண்டும்
மல்லிகையைச் செருப்பாக்கி மாட்ட வேண்டும்
அழைத்தாலும் வாராத நிலவை வெட்டி
அணிகலனாய் போட்டழகு பார்க்க வேண்டும்...
உழைப்பாலே வரும்வியர்வை காய, மேக
ஊஞ்சலிலே நாமிணைந்தே ஆட வேண்டும்;
விழைவாலே கற்பனையில் நீந்து கின்றேன்
விழிப்படையால் தீயணைக்க விடைதா ராயோ?

உடம்பெல்லாம் உனைப்பூசிக் ... ட்டால்

ஊழித்தீ எனையெரித்துச் சாய... லாக்கும்;

கடலுக்குள் முக்குளித்துத் திளைக்கா விட்டால்

காலாவதி யாகிவிடும் உயிர்ச்செப் பேடு;

உடம்படு மெய்யோஎன் சந்தச் சிந்தே!

உன்செவ்வாய் ரஸத்தால்தான் இந்நோய் தீரும்

அடலேறாய் எனையுலவச் செய்வா யோநீ...

அழிப்பாயோ...எதுவெனினும் விடைதா ராயோ?



# பதில் இனிப்பு வேண்டும்

ஆற்றுக்குக் கரைதேவை; கல்வி கற்க
அறிவார்ந்த நல்லாசான் தேவை; நெஞ்சில்
ஊற்றெடுக்கும் கற்பனைக்கு நிகழ்ச்சி தேவை;
உயிருக்கும் மெய்தேவை; இளமை யான
நாற்றுக்கு நீர்தேவை; தோட்டத் திற்கு
நான்குபுறக் காப்பாக வேலி தேவை;
ஏற்றைப்போல் நிமிர்ந்தவரே எனக்கு நீங்கள்
இனியதுணை யாய்த்தேவை அட்டி யில்லை!

திருக்குறளின் உயிர்ப்பதிப்பே! வருந்தித் தேடாத்
திரவியமே! உமைவென்ற பெண்மை யாலே,
செருக்கெனக்கு வருவதும் இயல்பு தானே...?
ஜெகமாளும் அரசியைப்போல் பூரிக் கின்றேன்.
மருக்கொழுந்து காய்ந்தாலும் மணம்ப ரப்பும்
மலர்க்காவென் நிலைகூட அதுதான்; நெஞ்சில்
உருப்பெற்ற காதலினை வளர்த்துக் கொள்வோம்
ஒருயிராய் ஒட்டணியாய் உலகில் வாழ்வோம்.

நெஞ்சக்குள் பெரும்புதையல் கண்டெ டுத்தேன்
நீட்டோலைக் குறியீட்டாற் செல்வம் பெற்றேன்
வஞ்சகரின் வலைவரிப்பிற் சிக்கிக் கொண்ட
வாலைகளின் கதைமுடிவை நினைத்துப் பார்த்தால்
விஞ்சுவதோ அச்சந்தான்.. காதல் என்னும்
வீண்வம்பில் யார்சிக்கிக் கொளநி னைப்பார்?
நெஞ்சுறுதி யிலாஆண்கள், தம்மை விற்று
நிதிதேடும் காலமன்றோ...சிந்திக் கின்றேன்...!

பெண்ணைப்பெண் என்பதற்கே விரும்பு கின்ற
பெரியகுணம் உங்களிடம் அமைந்தி ருந்தால்,
கண்ணாக, உயிராக ஏற்றுக் கொஞ்சிக்
காதல்மழை பொழியுமிந்த அன்பு மேகம்!
விண்ணுக்குச் சூரியனாய் நீங்கள் வந்தால்
வேறென்ன பேறெனக்குக் கிடைக்க வேண்டும்?
உண்பதற்குக் கரும்போடு கூலி வேறா...?
உறுதியுயர் கொள்கையையே விரும்பு கின்றேன்.

தண்ணீரில் உப்பாகிக் கரைவ தற்குத்
தயாராக இருக்கின்றேன்; ஆனால் நீங்கள்
பெண்மையினைப் புரிந்துகொள்ள வேண்டு மென்று
பேசுவதை, செதுக்குவதாய் எண்ண வேண்டாம்!
உண்மையிலே மடல்பார்த்த பிறகு நெஞ்சில்
உருவான மாற்றத்தை எழுதப் போமோ?
கண்ணுக்குள் நெறிஞ்சிமுள் வைத்துக் கொண்டு
கனல்மூச்சுத் தேருருட்டி உழலு கின்றேன்!

எனக்கேநான் அன்னியமாய் ஆகி விட்டேன்
என்தாயைக் கண்டாலும் பிடிக்க வில்லை;
மனக்கேணிக் குள்ளிருந்து நீங்கள் ஓதும்
மந்திரத்தைச் செவிகுளிரத் தினம்கேட் கின்றேன்.
இனந்தெரியா தொருமின்னல் பூந்தே கத்தில்
இறங்கிக்கொண் டிருப்பதையும் உணரு கின்றேன்.
தனந்தேடி வாழ்விக்கும் உலகில், என்னைத்
தான்தேடி வருங்குன்றை மறுக்க லாமோ?

கலைமேதை கையிருக்கும் வீணைக் கன்றோ
கற்றோரின் புகழுரைகள் சொந்த மாகும்?
சிலைகூடச் சிற்பியின்கை நுட்பந் தானே...!
சேரிடத்தால் தான்சிறப்பு மலர்க ளுக்கு;
மலையெதிர்ப்பு வந்தாலும், சாதீ பேத
மாயாவி தடுத்தாலும், அர்த்த நாரி
நிலையாகத் தயக்கமில்லை; நெஞ்ச வீட்டில்
நிறைந்தவரே! உங்கள்பதில் இனிப்பு வேண்டும்.



# நலந்தானா?

செல்விக் கண்ணே! செல்விக் கண்ணே...!
என்னுயிர் நலந்தானா...?
உள்ளம் உருகி உள்ளம் உருகி
உணவை வெறுத்தாயா...?

முல்லை மலரே! முல்லை மலரே!
முகத்தில் மகிழ்வுண்டா?
இல்லத்திருந்து என்னை நினைத்துத்
தூக்கம் மறந்தாயா?

மயிலைப் போன்றாய் மயிலைப் போன்றாய்
மலரை அணிந்தாயா?
இலையே அத்தான் இலையே என்று
ஏங்கித் தவித்தாயா?

சிலையைப் போன்ற குயிலே! என்னால்
சிரிப்பை இழந்தாயோ?
நிலையை நினைத்து நிலையை நினைத்து
நெஞ்சம் தவித்தாயோ......?

விழியைப் பார்க்க விழியைப் பார்க்க
வேட்கை பெருகுதம்மா...!
கிளியைப் பழித்த மொழியைக் கேட்க
ஆவல் பெருகுதய்யோ...

அத்தான் அத்தான் என்றெனை அழைக்கும்
அழைப்பினைக் கேளாமல்
பித்துப் பிடித்தேன் பித்துப் பிடித்தேன்
பெண்ணே என்செய்ய...?

முத்துக் குவித்த முல்லைப் பூவின்
முறுவலைக் காணாமல்
எத்துணை நாட்கள் எத்துணை நாட்கள்
இப்படி யிருப்பேனோ...?

கல்விக் கழகம் சென்றவன் புலம்பல்
கடியும் செயலொன்றாம்;
செல்விக் கண்ணே! செல்விக் கண்ணே
சிந்தையை அனுப்புகிறேன்

அன்பைப் பொழிந்து அன்பைப் பொழிந்து
ஆயிரம்..........கொடுத்தனுப்பு
என்பை உருக்கும் அன்பைக் கொண்டாய்
இன்றே அனுப்பிடுக.



# கடல் பற்றி எரிகிறது...

எங்கிருந்து வாடுகிறாய் இதயப் பூவே...?
இன்பத்துப் பாலாகும் வாய்ப்பி ருந்தும்
தொங்கிக்கொண் டிருக்கின்ற வெளவா லைப்போல்
தூரப்போய் விட்டாயே, விதியா என்ன?
குங்குமமே உயிர்த்துணையாய் வருவா யென்று
குளிர்நிலவுக் கற்பனையில் மிதந்தி ருந்தேன்
இங்கெனக்கு வாய்த்ததெல்லாம் இரும்புச் சோறு!
இனியவளே, என்வாழ்க்கை மாயத் தேர்தான்.

மணிப்பவள இதழ்விரித்து மின்னல் காட்டி
மலர்க்கொடிநீ அத்தானென் றழைக்கும் போது
பனிக்கட்டி யைச்சுவைக்கும் குழந்தை யாவேன்
பரவசத்தில் குளித்தெழுவேன் கரைந்து போவேன்;
இனிக்கவில்லை என்வாழ்வு நீயில் லாமல்;
யந்திரமாய்ச் சுமைதூக்கி உழலு கின்றேன்;
வணிகமுறை விடுதியினில் உணவுண் பான்போல்
வாழ்க்கைத்தேர் இழுத்தோடும் குதிரை யானேன்!

சிறுகீறல் என்னுடம்பில் பட்டால் கூட
செல்வியம்மா மனம்பதறித் துடித்துப் போவாய்;
வெறும்பூவே என்வாழ்வு; விரக்தி யோடு
வீட்டுநலத் திற்குழைக்கும் கூலி யானேன்;
நறுந்தேனாம் அன்புமழை பொழிந்து போற்ற
நாதியிலாப் பாலைவனத் தொட்ட கம்நான்
குறும்பலாவே சான்றோனாய் வாழ்வ தாலே
குன்றருமை இங்கெவர்க்குந் தெரிய வில்லை.

எனக்குநானே கொடுத்தளித்தத் தண்ட னையால்
இதயத்தைச் சுமைதாங்கி யாக்கிக் கொண்டேன்.
உனக்கேனும் நல்வாழ்வு கிடைத்த தாம்மா?
உலர்க்கடலில் தண்ணீர்க்குத் தவிக்கின் றாயா?
மனக்கிறுக்கல் களைப்படிக்க முடிய வில்லை
மாசில்லாக் குலக்கொடியுன் தூய நட்புக்
கனத்தையெண்ணி நதிக்கண்ணீர் வடிக்கின் றேன்நான்
கடல்பற்றி யெரிவதனை யார ணைப்பார்?



# காளைக்கு வேலை!

(வயலில் வேலை செய்து பிழைப்பவர்கள்; இருவருக்கும் காதல் பிணைப்பு. அவன், அவளைத் தொட்டு விளையாடத் துடிக்கிறான். அவள் திருமணமாகட்டும் என்கிறாள். அவர்களின் உரையாடல் கவிதையாகிறது.)

அவன் :-

கம்மாய்க் கரையோரத்திலே
கதிரறுக்கிற வள்ளியம்மா
சும்மா மனசு துடிக்குதடி பார்த்து—அடி
சுத்திச்சுத்தி அடிக்குதடி காத்து.

அவள் :-

தென்னந் தோப்புப் பக்கத்திலே
தேடிவந்தேன் வெட்கத்திலே
அஞ்சியஞ்சித் துடிக்குதையா மனசு—ஒன்னும்
அறிந்திடாத நானுமொரு புதுசு...!

அவன் :-

புள்ளிபோட்ட சேலையிலே
புளியம்பூவு ரவிக்கையிலே
மின்னுதடி உன்னுடம்பு(த்) தங்கம்—அழகு
மேனியிலே குளிக்க இன்பம் பொங்கும்!

அவள் :-

சாய்ஞ்சு நிக்கிற தென்னையிலே
ஏறிப்போகுற ஆசையிலே
வரம்புமீறிட வேண்டாம்பா—இப்போ
தாலியும் கூறையும் கொண்டுவாப்பா!

அவன் :-

கோடைவெயில் நேரத்திலே
குளிக்கவந்தேன் ஓடையிலே
தடுத்துநிறுத்திப் போட்டியேடி வள்ளி—உயிரைத்
தாங்குமோடி என்னுடம்பு கன்னி?

அவள் :-

ஆசையிருக்கு நெஞ்சினிலே
ஆயிரம் இருக்கு வாழ்க்கையிலே
கட்டிவெல்லம் கையில்வரும் ராஜா—இந்தக்
களைக்கு வயலில் வேலைதரும் ரோஜா!



# மனைவி மகாக்காவியம்

இல்லறக்கூட் டாட்சியினைப் புகழும் பக்கம்
இருப்பதற்கு வந்தஇணைச் செயலர் இல்லாள்.
சொல்லிருக்கும் பொருள்போல்வாள்; வாழ்வ ரங்கில்
சுகராகம் இசைக்கின்ற வீணை யாவாள்;
கல்லுக்கும் வாழ்வளிக்கும் அமுதம்; இல்லக்
கப்பலுக்குத் திசைக்கருவி; இயக்கும் சக்தி.
பல்லாலே சொல்வடிவம் சிறக்கும்; இன்பப்
பத்தினியால் கணவனவன் சிறக்கின் றானால்.

பங்கயமேன் குளத்தினிலே கிடப்ப தென்றால்,
பாதமலர்க் கஞ்சுவதே ஏது வாகும்;
தங்கநிலாத் தேய்வதுவும், வளர்ந்து பார்த்துத்
தளர்வதுவும், பெண்முகத்திற் கஞ்சிய யேதான்;
மங்கையரின் சாயலைப்போல் இல்லை யென்ற
மனச்சலிப்பால் தான்மயில்கள் காட்டில்வாழும்;
தெங்கிளநீர், கோங்கரும்பு இவைகள் எல்லாம்
தெரிவையரின் மார்புக்குத் தோற்றுப் போகும்.

முத்தத்தை விதைக்கின்ற மோகப் பண்ணை
முதலாளி தான்மனைவி; மலர்க ளாலே
அத்திரங்கள் தொடுக்கின்ற மதனின் வீச்சை
அர்த்தமுள்ள தாக்குகின்ற மனைவி யைப்போல்
சொத்தேது? உலகினிலே சொர்க்கம் ஏது?
சுவையேது? மனைவியின்றி வாழ்க்கை யேது?
பித்தேற்றும் நோய்தீர்க்கும் மருந்து; வாழ்க்கைப்
பிரயாணி; படுக்கைப்பங் காவி யாவாள்!

மொழிக்கரும்பால் சுவையூட்டி, சிரிப்பு மின்னல்
    மோகனத்தால் தலையாட்ட வைத்து, தீய
பழியெதுவும் வாராமற் பாது காக்கும்
    படிநிலவே இல்லறத்தின் நல்ல மைச்சர்;
வழிகாட்டும் நல்லாசான் அன்பால் தன்னை
    வாட்டிக்கொள் கின்றதொரு மனையூர் வள்ளல்
எழிலாகக் கதவடைப்புச் செய்யும் வர்க்கம்
    எடுபிடிபோல் பலநேரம் குழைந்து நிற்கும்;

அடுக்கிவைத்த பழங்கள்போல், தங்கத் தேர்போல்
    அழகுருவாய் உலவுகின்ற அன்பு மேகம்;
இடுக்கண்வரும் நேரத்தில் வெல்லும் சக்தி!
    இராக்காலத் திற்படிக்கும் புடவை நூலாம்:
அடுக்களையைத் திறமையாலே அமுத மாக்கி
    ஆயுளையும் விருத்திசெயும் தெய்வத் தாதி
வெடுக்கென்று பேசாத பண்புப் பாவை
    வேளையறிந் துணவூட்டும் அன்பு அன்னை;

துன்பமெனும் சுடுவெயிலில் நடந்து சோர்ந்து
    துவண்டுவிடா திருப்பதற்கு, நிழல்கொ டுத்து
மன்பதையில் வாழ்வுநிலம் செழிப்ப தற்கு
    மங்கையரே அமுதோடு வந்தா ரீங்கே;
அன்பிற்குப் பெண்ணினந்தான் சாட்சி; அறிவு
    ஆற்றலெலாம் அன்பிற்குள் அடங்கு மன்றோ?
என்னைப்போல் இருப்பவளே மனைவி; வாழ்வில்
    ஏற்றமுற்றார்க் காணிவேரே மனைவி யென்பர்;

பசிக்குணவு கொடுப்பதுவும், நோய்வ ராமற்
பாதுகாத்து நிற்பதுவும். வந்து விட்டால்
நசித்துவிடாமல் விழித்துக் கொண்டி ருந்து
நாடிசுத்தி செய்வதுவும் மனைவி யாவாள்!
கசிந்துருகும் மனைவிளக்கே கூட்டல்; இந்தக்
கடலளிக்கும் நன்மக்கள் பெருக்க லாகும்
வசிகரிக்கும் சுகவிருந்து; தன்னைத் தானே
வார்த்தெடுக்க வாய்த்தவொரு உயிர்க்க ணிப்பான்.

தாம்பத்யம் என்பதொரு சுகரா கந்தான்
தருவதனால், பெறுவதானால் வேக மாக
நாம்பெறுவ தொருமுதிர்ச்சி இன்ப மாகும்
நம்மாயு ளையுறவு வளர்த்து நிற்கும்;
காம்பின்றிப் பூவேது...? கனிக ளேது?
கரைகாணா வாழ்க்கையிலே மனையாள் இன்றிச்
சாம்புதற்கு மனிதனவன் பிறக்க வில்லை;
சம்சாரம் அறநெறியின் சார மாகும்.



# சோதி நிலா காயுது...

(செல்வவளம் கொடுக்கும் சிற்றூர் அந்த மருத நிலம். பண்ணையாரின் செல்வமகள் திருமணமாகி, சில மாதங்களுக்குள் விதவை யாகிப் போனாள். வெள்ளையாடை உடுத்திய வீட்டு நிலவு துணையை யிழந்து துயரத்தில் மூழ்கினாள்... எச்சரிக்கையாயிருக்க வேண்டிய பருவம்! தென்றலும் நிலவும் அவளைச் சுட்டுப் பொசுக்கிடும் இரவு. மாளாத்துயரில் மீளாத வீணையின் அந்தரங்கச் சுருதி கவிதையாகக் காட்சியளிக்கிறது.)

சோளப்பொறி மத்தியிலே
சுட்டுவைச்ச தோசையைப்போல்
சோதிநிலா என்னைப்பார்த்துக் காயுது — நெஞ்ச
வேதனையோ புலியைப்போல பாயுது.

தாமரைப் பூத்தேன்குடித்த
வண்டு வரும்எனநினைத்து
வண்டுவிழி கண்ணீராகப் பூக்குது— போன
வழியை வழியைப் பார்த்துமனம் வேர்க்குது!

மலையும் ஆறும் சேர்ந்தது போல்
மகிழ்ந்ததையே நெனச்சுடம்பு
வெயிலில் வைச்ச வெண்ணையாக உருகுது— மனம்
வேதனையாம் நெருப்பினிலே கருகுது...

தென்னம்பாளை உடைஞ்சது போல்
சின்னமகள் சிரிப்புமாறி
தேனும்பாலும் குடிக்கக்கூட வெறுக்குது— எல்லாத்
திசைகளிலும் சூனியந்தான் இருக்குது!

விரிச்சுப் போட்ட படுக்கையிலே
புரண்டு புரண்டு படுத்தபோதும்
பஞ்சுமெத்தை நெறிஞ்சி முள்ளாக் குத்துது— அந்தப்
பழைய கதையை நெனைக்க மனம் இனிக்குது....



# தாகம் தீர்க்கும் தண்ணீர்

தாகம் தீர்க்கும் தண்ணீரே... மேனித்
தரையில் பொழிமழைப் பன்னீரே

நீயே எனக்கொரு விருந்து..!
நெஞ்சினில் இனிக்கு மற்புதமருந்து...!

அந்தரில் ஊறிய நிலவின் தங்கை— நீ
அழகெலாம் திரண்டுருக் கொண்ட மங்கை...
முத்தொளிப் புன்னகை மோகினி...!
மோகனம் இசைக்கும்மெய் வீணைநீ...

நீயே எனக்கொரு விருந்து
நெஞ்சினில் இனிக்கு மற்புதமருந்து...

இமைகள் களைத்ததுன் நினைவுகளால்,
இதயம் மெலிந்ததுன் கனவுகளால்,
நித்திரை உணவிலா இரவுகள்— விழிக்கு
வெறுமைகளே வாய்த்த வரவுகள்!

திங்களிற் செவ்வாய் கொண்டவளே!— புத
வியாழ வெள்ளிகள் கண்டவளே... நாம்
சங்கமம் ஆவதைச் சனிக்குடிலன்
தடுத்திடக் கூடுமோ ஞாயிறிலே...?

நீயே எனக்கொரு விருந்து
நெஞ்சினில் இனிக்கு மற்புதமருந்து

நீலவான் விதான மாளிகையில்— வெள்ளி
நிலவு விளக்கொளிப் போதையிலே,
நாளெலாம் மதன்கவி பாடிடுவோம்— வான
மீனெலாம் ஏங்கிடக் கூடிடுவோம்...

ஓசையிலாமல் வந்துவிடு...
உனையே எனனிடம் தந்துவிடு
பொறாமைக் கழுகை மறந்துவிடு— காதல்
ராஜ பாதையைத் திறந்துவிடு...!

நீயே எனக்கொரு விருந்து
நெஞ்சினில் இனிக்கு மற்புதமருந்து...!



# காகிதமானேன் துயரோடு...

கனவுகள் சுமக்கும் விழியோடு— நான்
காகித மானேன் துயரோடு...

வசந்தங்கள் உதிர்ந்தன நெஞ்சோடு— சுக
வானவில் கலைந்தது அடியோடு...

எழுதிய ஓவியம் சிதைந்தது— துன்ப
எரியினில் ஆசைகள் கரைந்தது...
மூழ்கிய கப்பலாய்ப் போனது— கோட்டை
முற்றுகை யாய்வாழ்க்கை ஆனது!

கனவுகள் சுமக்கும் விழியோடு— நான்
காகித மானேன் துயரோடு...!

கோட்டையில் பிறர்கொடி பறக்குது— இந்தக்
கிள்ளையின் உயிரிங்கே பறக்குது!
நினைவுகள் தொடர்கதை யாகுது— விழி,
நித்தில இலங்கைகள் உதிர்க்குது...

எனக்குநான் அன்னிய மானேன்— இதயச்
சுமையில் ஒடிந்தே போனேன்
உறவுக்கும் பகையாய் உழல்கிறேன்— துன்ப
ஊழியில் துரும்பாய்ச் சுழல்கிறேன்...

கனவுகள் சுமக்கும் விழியோடு— நான்
காகித மானேன் துயரோடு...

# பிரிவுப் பாடலா பேசுகிறாய்?

நெஞ்சம் உனையே மறக்குமோ— வேறு
நினைவும் இனிமேற் பிறக்குமோ?
மஞ்சள் வெயில்போல் பேரழகே— இனி
மனத்தில் நிம்மதி இருக்குமோ?

தாவரக் கனவுகள் மலரானது
மேகத்தின் கனவு வான்வில்லானது
நெஞ்சத்தின் கனவுதான் கவியானது!
நீகண்ட கனவுகள் என்னானது— அன்பே...

எல்லாம்— மண்ணானது...
நெஞ்சம்—புண்ணானது !

உடுத்திடத் தெரியாப் பெருவானிலே— நிலா
ஒட்டிக் கொண்டுயிர் வாழ்கிறது!
தடுத்திடும் இருளையும் எதிர்க்கிறது— வாழ்க்கைத்
தத்துவம் தனைநமக் குரைக்கிறது!

மீன்கள் தாலாட்டும் இரவிலே— நெஞ்சம்
மீளாது துடிக்கிறதுன் பிரிவிலே,
கூனான வெறியர்கள் எதிர்ப்பதால்—அன்புக்
குளிர்நிலா எனைவிட்டு வாழ்வதா... நான்

சிறகிலாமல் வீழ்வதா...
வாழ்க்கை தாழ்வதா...

# கும்பகோணம் கொழுந்து வெத்தலை

ஆண்: கும்பகோணம் கொழுந்து வெந்தலை
கொட்டைப் பாக்குந் தட்டிப் போட்டேண்டி!
வாசனைசேர் சுண்ணாம்பையும்
சேர்த்துக் கொண்டேண்டி..! அடி... என்
வாய்செவக்க(ல்)லியே — உனை—நான் மறக்கல்லியே...

பெண்: வெட்டிவேரைத் தண்ணியிலே
போட்டு வச்சே(ன)ய்யா...
பத்திரி ஏலம் கிராம்பைக்கூட(க்)கலந்து கொண்டே(ன்)ய்யா
தண்ணி குடிச்சேன் தாகந் தீரல்லே...
ஒடம்பு கொதிப்பு மாறலே...!

ஆண்: தாமரைப்பூக் கொளத்தினிலே
குளிக்கப் போனேண்டி...
தண்ணியிலே முழுகி முழுகி எழுந்து நின்னேண்டி...!
அரும்பைப் பா(ர்)த்து உனை நெனைச்சேண்டி...
அப்போ... உருகி நின்னேண்டி...
இப்போ அருகில் வந்தேண்டி!

பெண்: கருதறுப்பிலே கங்காணத்திலே
ஒன்னைப் பா(ர்)த்தேன்யா...
கதிரடிச்சுக் குவிக்கும்போது
மயங்கி நின்னேன்ய்யா...! என்
கழுத்தினிலே முடிச்சுப் போடணும்— நாம
பள்ளிப்பாடம் படிச்சுப் பா(ர்)க்கணும்...!

இருவரும்: கும்பகோணம் கொழுந்து வெத்தலை
கொட்டைப் பாக்குந்தட்டிப் போடுவோம்!
வாசனைசேர் சுண்ணாம்பையும்
சேர்த்துக் கொள்ளுவோம்—நம்ம
வாய் செவந்திடும்— நமக்கு— வாழ்க்கை வந்திடும்!

# வருந்தாதே கண்ணே

*(வேத்தியல் கூத்து நிறைவுற்றபின் நெடுஞ் செழியன் அந்நங்கையைப் புகழ்ந்தானாக, அது கண்டு பொறாத கோப்பெருந்தேவியின் ஊடல் தவிர்க்க இவ்வாறு பாடினான்.)*

வானநிலா ஏன்வளர்ந்தும் தேய்கிறதாம் உன்றன்
வட்டமுக உறுப்புகளைப் பெறமுயன்று தோற்றுப்
போனதனால் அடுத்தடுத்து நிலைகலங்கிற் றேன்பேன்;
பொற்சிலையே நிலவுபிறை யாவதுன்றன் நெற்றித்
தேனமுதம் போலிருக்கச் செயும்முயற்சி! மீன்கள்
திரிந்தலைதல் உன்விழியை ஒத்திருப்ப தாலாம்;
மானினந்தான் உன்மருட்சிப் பார்வையினைக் காட்டும்
மாதிரியாய் இருப்பதனால் சிறப்படைந்த தன்பே!

பொன்னொளியுன் மேனிநிறம் காட்டவந்த தாகும்;
பூவல்லி மலர்வதுன்றன் உதட்டழகுக் காக;
மின்னலோடி மறைவதெல்லாம் மறையாத மின்னல்
மேதினிநீ யிருப்பதனாற் பயந்தோடும் காட்சி;
என்னெஞ்சம் உச்சரிக்கும் மறைமுதலே! வீணை
இசையுன்றன் வாய்மொழியைக் காட்டமிக ஏங்கும்!
தென்னாட்டுப் பெடையனமே கடலுக்குள் முத்து
தேடுவதுன் பல்லழகை ஏனடிவ ருத்தம்?

காந்தளுக்குன் கைவிரல்கள் காட்டாகு மென்பர்
கருமுகிலார் விண்பறத்தல் உன்குழற்கே அஞ்சி
பூந்தோட்டம் போன்றவளே எனைமயக்கும் அன்பே
புவிமதியே பாண்டிநாட்டு மன்னனென்ன செய்தேன்;
மாந்தளிர்தான் சுடுவெயிலில் வாடுவது போல
மனம்வாடிச் சுருங்குதற்குக் காரணந்தான் என்ன?
வேந்துநெடுஞ் செழியனிந்த வெண்முத்தை விட்டு
வெறுமுத்தை நினைப்பானோ? வருந்தாதே கண்ணே.

# தயக்கமென்ன அன்பே

உவமையணி போன்றவளே, நிலவுநக லான
ஒளிமேனி இளமானே புன்னகைப்பூக் காரி!
தவமுனிவன் உறுதியையும் நின்னழகுத் தீயால்
தரைமட்ட மாக்குகின்ற ஆற்றல்மிகும் பெண்ணே
நவரசச்சொல் விளைக்கின்ற நன்செய்யே, முத்தே
நான்குமுந்தை உன்னுடம்பில்; பூக்காட்டில் வண்டு;
பவளவல்லி! எழிலரசி இயற்கையெனும் வள்ளல்
பரிசளித்த தோடியுன்றன் எழிற்செல்வம் கண்ணே!

முகமதியைக் கண்டாலென் அகவல்லி பூக்கும்
முகிற்குழலே அசைந்தாலென் மனப்பயிர்செ ழிக்கும்
அகத்துறைநூற் பாவேயென் நாவுச்ச ரிக்கும்
அருமறையே தென்மொழியே சின்னஇடை மாதே!
நகர்காக்கும் காவலைப்போல் மனங்காக்கும் உன்னை
நானடைந்தேன் பரிசாகத் தயக்கமென்ன பின்னே?
அகலமுடி யாதபடி எனையீர்க்கும் காந்தம்
ஆசைவிழி: வண்டுகளை என்னென்பேன் கண்ணே!

இனிக்கின்ற நற்கருப்பஞ் சாறோஉன் சொற்கள்?
இணையடியின் அசைவெல்லாம் நாட்டியமோ நங்காய்?
கனிக்கொடியே புதுப்பூவே முப்பழமே என்றன்
கையிருக்கும் வையகமே மாசில்லாப் பொன்னே!
தனித்திருக்கும் பொழுதுமெனைத் தவித்திருக்க வைத்தல்
தகுமோடி யுன்றனுக்கு? அளபெடைபோல் ஆவோம்!
அனிச்சமலர்க் காம்புகளைத் தாங்கமால் வாடும்
ஆணிப்பொன் மேனியெழில் அறிவரசி வாராய்?

செவ்வல்லி இதழ்மேலே தவம்புரியும் மூக்கும்,
சின்னநிலா தனைக்காட்டும் நுதற்குடையும் கண்ணும்
நவ்வியதன் மடமுமெனைத் தகர்ப்பதனால் கண்ணே
நானுழவ னாகநன்செய் நிலமாவாய் வாராய்!
எவ்விடத்தில் பிறந்தாலும் கடல்நோக்கும் ஆறு;
எச்சொல்லும் பொருள்கொள்ளும்; எனனாரம் நீயே,
இவ்விடத்தே நம்மிளமை ஆட்சிசெய்ய வேண்டும்
இலக்கியமே முற்றூட்டே! அமுதூட்டிக் காப்பாய்!

விழி, பரணி நூலாகும் கால்சிலம்பு; கைகள்
வெண்டளைகள்; நன்னூலுன் இடையாகும் அன்பே
பொழிப்பெதுகை போன்றவளே! புகழேந்தி வார்த்த
புதுப்பாட்டே! குண்டலமே! கலித்தொகையே இன்ப
மொழிப்புணர்ச்சி கற்றிடுவோம் இதழொற்றிக் கொள்வோம்
மூச்சூஞ்சல் அசையும்வரை இணையெதுகை யாவோம்;
வழித்துணையே பொருட்பேறே யான்மீட்டும் யாழே
வரந்தருவாய் சுரம்மீட்ட; தயக்கமென்ன அன்பே?



# வெட்கமென்ன வெட்கம்

அழகுருப்புக் கண்காட்சி நடத்துகின்ற காலம்
அமைந்திருக்கும் திருவுருவே விமன்தன் பெண்ணே!
பழவழகி யான்குளிக்கும் பெண்ணாறே இன்பப்
படையலிடும் பூவரசி மதுவென்ற சொல்லால்
குழலிசையைச் செவியோரம் பாய்ச்சாயோ கண்ணே?
கூட்டெழுத்தால் நாமிணையும் நேரமிது நேரம்
பழகிப்பின் மணம்பெற்றும் பால்நிலவுப் போதில்
பருவத்தேர் உனக்கென்ன வெட்கமடி வெட்கம்?

பற்றுவர வோடுகொஞ்சப் பாக்கியென்ன வேண்டும்
படையெடுக்கும் காமத்தை நான்வெல்ல உன்றன்
பொற்கையால் எனைப்பிணைத்துக் கொள்வதுவே போதும்;
புணரியலின் வருமொழியே புதுத்தொகையே யாரும்
கற்பிக்கா மெய்மயக்கைக் விழிவரியால் காட்டும்
காமநூற் பாத்தொகுப்பே தமயந்திக் கிள்ளாய்
முற்றூட்டாய் ஆனபின்னும் என்னெஞ்சைக் கொல்லல்
முறையாமோ? உனக்கென்ன வெட்கமடி வெட்கம்?

மன்றிலதி காரம்செய் நளமன்னன் இங்கே
மனையிலதி காரம்செய் அழகரசி முன்னால்
ஒன்றுமிலாப் பஞ்செனவே இருப்பதனை ஓர்வாய்
உள்வலியை வாங்கியெங்கோ பதுக்கிவிட்டாய் கள்ளி!
இன்றைக்கென் உணர்ச்சிமழைக் காவியத்தைத் தீட்ட
இளங்குருத்து மெய்யோலை உளமுவந்து தாராய்
ஒன்றென்றும் எண்ணாவோம் உயிர்மெய்யாய் ஆவோம்
உனக்கிந்த நேரத்தில் வெட்கமென்ன வெட்கம்?

பள்ளத்தில் படுத்தபடி தரைமகனைப் புல்லும்
பாவையெனும் கடல்நங்கை கொண்டாளா வெட்கம்?
வெள்ளவரன் மனையிருக்குந் தாமரைப்பூ மங்கை
வெய்யவனைப் புல்லுதற்குக் கொண்டாளா வெட்கம்?
வள்ளுவனை அணைப்பதற்குச் செய்யுளுக்கு வெட்கம்
வந்ததுவா இவற்றையெலாம் நன்கெண்ணிப் பாராய்
கொள்ளையெழில் உறுப்பிலக்கி யக்காட்டே முல்லைக்
குறிஞ்சிக்கே ஊறுசெய்யும் வெட்கமென்ன வெட்கம்?



# வந்து இணைந்திடடி!

வட்டக் கருவிழி சுட்டதனால் நெஞ்சம்
வாடி அலையுதடி — உன்றன்
பட்டான மேனியால் காயத்தை ஆற்றுதல்
பாவையே ஆகா தோடி!

ஆடி அசைகின்ற தேர்போல வந்துநீ
ஆசையைமுட்டிவிட்டாய்— நெஞ்சை
மூடி மறைத்தெனைக் குப்பி விடத்தினுள்
மூழ்கவும் செய்து விட்டாய்!

உண்ணும் கனிகளும் வண்ணமலர்களும்
உடம்பினில் கொண்டவள்நீ— மெய்யாய்
வண்ண நிலவொளி தேக்கியவண்ணமாய்
வையகம் வந்தவள் நீ!

மண்ணைப் படுக்கையாய்க் கொண்ட கடலதும்
மண்ணைத் தழுவுதடி! —தேனை
உண்டு மகிழ்கின்ற தும்பியும் பூவினில்
*ஓடித் திரியுதடி!*

மாம்பழக் கன்னமும் மாங்குயில் ஓசையும்
மயக்கம் கொடுத்ததடி - நல்ல
பூங்குழல் தோகையே! தாங்குவன் உன்னைநான்
பொற்கொடி வந்திடடி!

வாழ்க்கைக் கடலினில் இல்லறத் தோணியில்
வந்து இணைந்திடடி! நீயென்
வாழ்க்கை அமைச்செனா வந்துவிட்டால் நானே
வான்புகழ் கொள்வனடி!



# சமுதாயச் சந்தை

# நமக்குத் தொழில் கல்வி
# நாட்டுக் குழைத்தல்

தொடுவானம் கைக்குவரா தெனினும் கல்வித்
துணையாலே வான்பரப்பை அளக்க லாகும்;
நெடுங்கடலும் மண்மகளும் கோளும் மீனும்
நெஞ்சுவந்து கல்விக்கே வசிய மாகும்;
அடுத்திருக்கும் தீயசெயல் அழிந்து போகும்;
அகஇருளும் விலகும்பே ரொளியுண் டாகும்;
படுத்திருக்கும் வினாக்குறியாய் மீசை கொண்ட
பாரதியின் கவித்திறமும் அளிக்கும் கல்வி;

எண்ணெழுத்தே கண்களாகும் தோண்டத் தோண்ட
நிலத்தடிநீர் சுரப்பதைப்போல் கற்கக் கற்க
மண்மாந்தர்க் கூற்றெடுக்கும் அறிவு நுட்பம்
மானுடத்தை உயர்த்துவதே கல்வி யன்றோ?
புண்பட்ட சமுதாயப் புற்று நோய்க்கு.
பொல்லாத சாதிப்போர், வறுமை நோய்க்கு,
உண்மையிலே கைகண்ட மருந்தே கல்வி;
உள்ளொளியை ஏற்றுவதே எமக்கு வேலை.

தப்பாமல் பெய்கின்ற வான்மு கில்போல்
தரித்திரர்க்கு நிதியளிக்கும் கொடையா ளன்போல்
எப்போதும் கல்விப்பால் புகட்டு கின்றோம்
இருள்நெஞ்சக் களிமண்ணைப் பிசைந்தெ டுத்தே
ஒப்பில்லாப் பாவைகளாய்ப் படைக்கின் றோம்யாம்
உருக்காலை வார்ப்புகளே அறிவு மாந்தர்;
அப்பப்பா... நமக்குத்தொழில் கல்வி; நாட்டுக்
கயராமல் உழைப்பதெங்கள் வேலை யாகும்.

நடமாடும் ஞானசக்தி நாங்கள்; எங்கள்
நாக்கலப்பை யால்உழுது கருத்தைத் தூவி,
இடமகன்ற பூவயலில் — ஒழுக்கம், மேன்மை
இகபரத்துச் சுகவெற்றிக் குழைக்கின் றோம்யாம்
கடனாற்றும் தேனீக்கள்; முல்லைப் பூக்கள்
கருப்புநெஞ்சை வெளுக்கின்ற வண்ணார் நாங்கள்
உடனிருக்கும் மாணவர்கள் மேலே செல்ல
உழைக்கின்றோம் படிகளாகக் கிடக்கின் றோம்யாம்

வர்க்கமூலக் கணக்குகளும் வறுமைக் கோட்டில்
வாடுவோரும், வரலாற்று யுத்தத் தோடு
தர்க்கமெல்லாம் எங்களுக்கு வாய்ப்பாட் டாகும்;
தரைவிளக்கப் புவியியலே வாத்ய மாகும்;
கர்ப்பூரம் எம்வாழ்வு; ஊது வத்தி
கறைபடாமல் உலவுகின்ற குருக்கள் நாங்கள்;
அர்ப்பணித்துக் கொள்ளுகின்ற கல்வி வேள்வி
ஆசிரியர் நோக்கெல்லாம் நாட்டு யர்வே!

விதைக்குள்ளே தூங்குகின்ற மரம்போல், எங்கள்
வினைக்குள்ளே அறிவியலும் கலையும் தூங்கும்;
புதையல்போல், வேர்போல் இருக்கும் நாங்கள்
பூசொர்க்கம் படைப்பதற்கே முயலு கின்றோம்;
விதைக்காமல் களையெடாமல் அறுவ டையா?
வேண்டுமட்டும் அறிவுவளம் பெறுதற் காக
விதைக்கின்றோம் உழைக்கின்றோம்; கிட்டும் வெற்றி
விழுச்செல்வத் தால்வையம் செழிக்கும் வாழி!



# நாங்கள் அரசியல் வாதிகள்

நாங்கள் அரசியல் வாதிகள்— எங்கள்
நாக்கு நடனந்தான் நீதிகள்!
தூங்கா துழைப்பதெம் பணியாகும்— ஆளும்
துரைத்தனம் எமக்குக் கனியாகும்.

கலவரம் அடிதடி கல்வீச்சு— எந்தக்
கட்சிக் கு'மது'தான் உயிர்மூச்சு;
நிலவர மறிந்தே பிடிகொடுப்போம் - எந்த
நிமிடமும் எதையும் முடிவெடுப்போம்.

எங்கள் பேச்சே கல்வெட்டு— பிறரை
இழித்துப் பேசினால் கைதட்டு;
எங்கும் தாவுவோம் நலஞ்சேர்க்க— நீங்கள்
இருப்பதோ எங்களை வளமாக்க!

உற்ற தோழனே ஒலிபெருக்கி— சோடா
குடித்துப் பேசுவோம் நிலைவிளக்கி
கற்றவர் அறிஞர் எல்லார்க்கும் - குரலால்
கவன ஈர்ப்பைக் கொணர்வோமே!

நாங்கள் அரசியல் வாதிகள்— எங்கள்
நாக்கு நடனந்தான் நீதிகள்!
தூங்கா துழைப்பதெம் பணியாகும்— ஆளும்
துரைத்தனம் எமக்குக் கனியாகும்.

அரசியல் மேடையில் கலையுண்டு— குடும்ப
அன்பும் பிடிப்பும் மிகவுண்டு;
சரசர வெனயாம் படங்களிலே - கொள்கைச்
சரக்கை விரிப்போம் மனங்களிலே.

தேர்தல் திருவிழா நடத்துவோம்— எந்தத்
தெருவையும் அலங்கா ரப்படுத்துவோம்
ஊர்வலம் உண்ணா விரதங்கள்— மக்கள்
உளத்தைப் பிடிக்கும் தூண்டில்கள்!

புயலிற் குடிசைகள் அழிந்தாலும்— எந்தப்
போதையில் மக்கள் இறந்தாலும்
அயரா தோடி வந்திடுவோம்— மக்கள்
அவலம் கண்டுளம் நொந்திடுவோம்!

உணவுப் பொட்டலங் கள்வழங்குவோம்— நாட்டு
ஒற்றுமைக் காகவும் முழங்குவோம்
பணத்தால் வாக்கை யும்வாங்குவோம்— பின்பு
பதவிக் கட்டி லில்தூங்குவோம்.

நாங்கள் அரசியல் வாதிகள்— எங்கள்
நாக்கு நடனந்தான் நீதிகள்!
தூங்கா துழைப்பதெம் பணியாகும்— ஆளும்
துரைத்தனம் எமக்குக் கனியாகும்.

சாதியை எதிர்ப்போம்; சமமென்போம்— புரட்சி
சடுதியில் வருமென் றெச்சரிப்போம்
சாதிக் கஞ்சாச் செடிவளர்ப்போம்— எல்லாச்
சமயங் களுக்கும் கைகொடுப்போம்.

விசாரணைக் குழுக்கள் வந்தாலும்— நாட்டை
விழுங்கியே விட்டதாய்ச் சொன்னாலும்
அசாத்தி ம யுயிர் பிழைத்திருப்போம்— எல்லா
அரசு நிலத்தையும் வளைத்திருப்போம்.

சட்ட சபையிலே மல்யுத்தம் — நாட்டு
ஜனங்கள் மத்தியில் சொல்யுத்தம்
ஒட்டா திருப்போம் துருவங்களாய் — ஏனோ
ஒட்டியும் கிடப்போம் கருமங்களால்

நாங்கள் அரசியல் வாதிகள் — எங்கள்
நாக்கு நடனந்தான் நீதிகள்
தூங்கா துழைப்பதெம் பணியாகும் — ஆளும்
துரைத்தனம் எமக்குக் கனியாகும்.

ஆட்சியைப் பழிப்பதே எதிர்க்கட்சி — எதிர்ப்பை
அடக்கி நிமிர்வதே பெருங்கட்சி
காட்சிக் கிவையெலாம் புதிர்க்கட்சி — எம்நலம்
காப்பதில் இருவரும் ஒரேகட்சி!

மெய்யே விளக்கு; குறள்வாக்கு — தொண்டர்
மெய்யெரி யூட்டுதல் உயர்நோக்கு
மெய்யாற் செய்பணி உரமூட்டும் — கட்சி
மேன்மை இதனாற் சிரங்காட்டும்.

வேட்டி சேலைகள் கொடுத்திடுவோம் — தேர்தல்
விழாவின் அறிக்கையை விடுத்திடுவோம்
பாட்டியைத் தொட்டும் வணங்கிடுவோம் — செய்திப்
பத்திரிக் கையில்வரப் பெருக்கிடுவோம்.

வான வீதியில் அடுக்குமாடி — கட்டி
வழங்குவோம் உங்களைத் தேடிநாடி!
தானாய் நலமெலாம் தேடிவரும் — எல்லாம்
தாய்க்குலம் சொன்னால் ஓடிவரும்!

நாங்கள் அரசியல் வாதிகள்— எங்கள்
நாக்கு நடனந் தான்நீதிகள்!
தூங்கா துழைப்பதெம் பணியாகும்— ஆளும்
துரைத்தனம் எமக்குக் கனியாகும்.

எங்களை விட்டாற் கதியேது?—கிடைத்த
சுதந்தரம் காக்க வழியேது ?
இங்குள வறுமையை விரட்டிடுவோம் —நாங்கள்
எல்லார்க் குமெல்லாம் கொடுத்திடுவோம்.

மலிவு விலையிலே சொர்க்கமுண்டு— எல்லா
மகளிர்க் குந்திருமணத் திட்டமுண்டு
தொழில்கள் செய்யா திருந்தாலும்— ஊதியத்
தொகைவந் துசேர்ந்திடும் உங்களுக்கு.

உங்கள் வீட்டுப் பிள்ளைகளை – ஆள
உத்தர விடுங்கள்; வாருங்கள்!
எங்களுக் குங்கள் வாக்களித்து –கையில்
இம்முறை ஆட்சியைத் தாருங்கள.

நாங்கள் அரசியல் வாதிகள்— எங்கள்
நாக்கு நடனந் தான்நீதிகள்!
தூங்கா துழைப்பதெம் பணியாகும் – ஆளும்
துரைத்தனம் எமக்குக் கனியாகும்.

ஆட்சியைக் கொடுத்துப் பாருங்கள்— நிலைமை
முன்னே றாவிடின் கேளுங்கள்!
காட்சிக் கினிமை யாக்கிடுவோம் – எங்கும்
கல்விச் சாலைகள் பெருக்கிடுவோம்.

போக்கு வரத்திலும் சொகுசுண்டு—இங்கு
புதுத்தொழிற் சாலைகள் மிகவுண்டு
ஆக்கம் நிறையும் எலாமின்பம்! — உங்கள்
ஆதர வொன்றே தேவையினி!

வெளிநாட் டிற்கும் போய்வரலாம்— 'சின்ன
வீட்டை'யும் அமைத்துக் குடிபுகலாம்.
களிப்புடன் வாழவும் வசதிவரும் - எங்கள்
கட்சியால் நாடும் திருத்தமுறும்.

வருகிற தேர்தலில் எங்களுக்கு— நீங்கள்
வாக்களித் தால்நலம் உங்களுக்கு
உருகினோம் மக்களின் நிலைகண்டு— நெஞ்சில்
உதிரம் கொட்டுதே யலையுண்டு.

நாங்கள் அரசியல் வாதிகள்— எங்கள்
நாக்கு நடனந்தான் நீதிகள்
தூங்கா துழைக்கவே வருகின்றோம்— மக்கள்
தொண்டுக் காகவே விரைகின்றோம்!



# புதிய தீர்மானம்

பருத்தி புடவையாய்க் காய்க்காது — எந்தப்
பயிரும் தோசையாய் விளையாது
தெருவிலும் புதையல் கிட்டாது இவற்றைத்
தேடிக் கொள்ளவும் முடியாது!

அறிவை மாத்திரை வடிவாக்கி — மக்கள்
விழுங்கக் கொடுக்கவும் தெரியாது
முறியும் நெஞ்சை ஊக்குவிக்க — வேலை
முயற்சி யிலாமல் கிடைக்காது!

கோலார் வயல்களோ பொன்னகையை — தானாய்க்
கொண்டு கொடுக்கத் தெரியாது!
காலால் இட்ட பணிமுடிக்க — அலாவுதீன்
காலத்துப் பூதமும் கிடையாது!

சும்மா இருந்து சோறுண்ண — இந்தச்
சுதந்திர நாட்டில் வழியில்லை.
அம்மா! சுயதொழில் செய்தற்கும் — எத்தனை
ஆயிரம் தொல்லை... என்செய்ய?

கிணற்றைத் தோண்டிப் பார்க்காமல் — பூமிக்
கீழுள தண்ணீர் கிடைக்காது!
கணக்கிலாக் கனிப்பொருள் யந்திரமாய் — மக்கள்
கைக்கு வந்தும் சேராது.

மூச்சை அடக்கி மூழ்காமல் — கடலே
முத்தைக் காணிக்கை யாக்காது
பூச்சு வேலையைச் செய்யாமல் — வீடும்
பொலிவாய்த் தானே விளங்காது!

அப்பாவி மக்களுக் கெதிராக— நாங்கள்
ஆயுதம் தாங்கப் போகின்றோம்
எப்போ தென்றது சொலமாட்டோம் — அடடா
என்ன சுதந்திரம் நிலைகெட்டோம்!

இந்திய நாட்டிலே எதுவுமில்லை— எங்கள்
இதயத் தேட்டில் பெருங்கவலை.
சிந்தனை செய்தும் பார்த்திட்டோம் — இனிமேல்
செயலில் இறங்கப் போகின்றோ.



# வறுமைப் பேயே ஓடிவிடு !

வறுமைப் பேயே ஓடிவிடு — பூசாரி
வருகிறார் ஒழுங்காய் வழியைவிடு!
பொறுமையா யிருந்து பார்த்துவிட்டோம்— எல்லாப்
பொழுதையும் வீணாய்க் கழித்திட்டோம்!

மங்கையின் வாழ்வைக் கெடுக்கின்றாய்— எங்கள்
மாபெரும் வெற்றியைத் தடுக்கின்றாய்
எங்கோ நடத்திச் செல்கின்றாய் —இவளின்
எலும்பை உருக்கிக் கொல்கின்றாய்.

யந்திரத் தகட்டையும் அணிவித்தோம்— இன்னும்
இங்குள சக்தியைக் குளிர்வித்தோம்
மந்திர வெழுத்திற் குமஞ்சாமல் — தொடர்ந்து
மாயமா வேலைகள் செய்கின்றாய்!

கொலைவெறி யுன்றன் கண்களிலே— மாறாக்
குருதிக் கறையுன் பற்களிலே
மலையாய்ப் பெருத்த வயிற்றினிலே — மக்கள்
மாய்ந்து தொலைந்தனர் கணக்கின்றி.

ஒளியைக் கண்டால் பிடிக்காது— கல்வி
உயர்வையும் உன்மனம் பொறுக்காது.
வெளியெலாம் பலரைத் திருடவிட்டாய்— உன்றன்
வெறியினால் அறிஞரை மருளவிட்டாய்!

அன்பை, பண்பைக் குதறிவிட்டாய்! — பலரை
அடிமைச் சேற்றில் மூழ்கடித்தாய்
துன்ப நெருப்பாய்ச் சிரிக்கின்றாய் — இந்தத்
தாயவள் கழுத்தை நெறிக்கின்றாய்

கொள்ளை யடிக்கிற காட்டேறி— வறுமைக்
கொடுஞ்சினப் பேயே ஓடிவிடு
வெள்ளையர் ஆட்சியை வேரறுத்தோம்— அதோ
வீரன் இலக்குவன் வருகின்றான்.

ஆட்சி மந்திரக் கோல்தூக்கி – ஆள்வார்
அதிகாரப் புன்னகை யாவெரிப்பார்;
காட்சிக் கெளியவர் செயல்வீரர்— உன்னைக்
காகித வெடிகொண் டழித்திடுவார்.

மெத்தப் படித்தோர் வருகின்றார்— நாட்டின்
மேட்டுக் குடியினர் வருகின்றார்,
செத்துப் போவாய் அறிவிலியே— அதனால்
சீக்கிரம் இவளைவிட் டோடிவிடு.

வறுமைப் பேயே ஓடிவிடு— பூசாரி
வருகிறார் ஒழுங்காய் வழியை விடு.
மறுத்தால் மந்திரக் கோபம்வரும்— பாராள்
மன்றமும் பேசிப் பார்த்துவிடும்!



# இந்திய மயக்கம்

இத்தனை காந்திகள் மந்திரித்தும்— தாயே
ஏனுன் மூர்ச்சை தெளியவில்லை...?
சித்தம் கலங்கியேன் தூங்குகிறாய் – உன்றன்
சேய்களை எண்ணியா ஏங்குகிறாய்...!

எங்கோ எரிமலை வெடித்துவிட்டால்— பாரதம்
இங்குநீ உண்ணா நோன்பிருப்பாய்!
வங்களா நாட்டிலே தீப்பிடித்தால்— உன்றன்
வயிற்றில் அடித்துக் கொண்டெழுவாய்!

விரிகுடாப் பகுதியில் போரெழுந்தால்— வரும்
வேதனை தீர்க்கவே குரல்கொடுப்பாய்
நரிகளார் எங்கோ ஊளையிட்டால்— நெஞ்சம்
நடுங்கா துரைத்தொரு முடிவெடுப்பாய்!

அமெரிக்க மண்ணில் மழைபொழிந்தால்— முதலில்
அம்மா நீதான் குடைபிடிப்பாய்!
இமயத்திற் கப்பால் வெயில்காய்ந்தால்— உன்றன்
இதயம் தாங்கா தழுதிடுவாய்!

சொந்த நாட்டிலே அகதிகளாய்— இங்கு
சோர்ந்து திரிவோரைப் பாராமல்
சிந்தை மயங்கிக் கிடப்பதென்ன?— இந்தச்
செய்வினை வைத்தவர் யாரம்மா?

அருகில் இருப்பவர் தெரியவில்லை— மக்கள்
அவலக் குரல்களும் கேட்கவில்லை!
திருமிகும் செல்லப் பிள்ளைகளை - உன்னால்
சினந்து கொள்ளவும் முடியவில்லை!

போதை மயக்கமா? கோமாவா— எங்கள்
புனிதமே விழித்துப் பாரம்மா!
மேதையர் நாற்காலி வேட்டையிலே – விளைந்த
மேன்மைச் சுகங்களைக் கேளம்மா!

ஊரார் பிள்ளைக் குணவளித்தால் – ஓகோ
உன்றன் பிள்ளைகள் வளருமென்ற
சீரார் மொழிமேற் கொண்டாயோ?— உன்றன்
சிந்தை யறிந்தேன்... தூங்கம்மா.. !



# சிருங்காரச் சென்னை!

சிருங்காரச் சென்னையிது! செல்வர் கைக்குள்
சிக்கிக்கொண் டிருக்கின்ற யோக பூமி;
வருவோர்க்கும் செல்வோர்க்கும் பயன்கொ டுக்கும்;
வறியவர்கள் பிழைப்பதற்கும் இடங்கொ டுக்கும்
தெருவெங்கும் அடுக்கிவைத்த கட்ட டங்கள்
தெருவிளக்கோ மிகப்பழுத்து, ஒளியைக் கக்கும்;
பெருங்கடலில் கரைத்துவிட்ட பெருங்கா யம்போல்
பீடுறுநற் குணங்களெல்லாம் வலுவி ழக்கும்.

சல்லடைக்கண் ஓட்டைகளே மிகுந்த போதும்
சளைக்காமல் இயங்குநுரை யீர லைப்போல்,
சொல்லமுடி யாப்பிணிகள் இருப்ப தாலே,
சோர்ந்தயர்ந்து நீதிசொலும் மன்றம் உண்டு;
சொல்லம்பு விடுவீரர் சிலம்ப மாடும்
சுகமான கோட்டையுண்டு; கொடியு முண்டு;
எல்லையிலாக் கடல்வந்து தரையைத் தொட்டோர்
இனியகலிப் பாவிசைக்கும் கரையும் உண்டு.

வங்கத்துக் கடல்மேலே மிதந்து சென்று
வலைவீசி மீன்குவிப்பார் பல்லோ ரிங்கே;
நங்கூரம் போட்டிருந்தும் யானை யைப்போல்
நளினமுடன் அசைந்துகொண்டி ருக்கும் கப்பல்,
அங்கங்கே சிறுநகர்போல் காட்சி நல்கும்;
ஆகாயம் தொங்கவிட்ட ஏணி யைப்போல்
இங்குகலங் கரைவிளக்கம் உயரம் காட்டும்
எழில்மெரினா கடற்கரையோ அழகு கூட்டும்!

கல்விக்கண் திறக்கின்ற முயற்சி யுள்ள
சென்னைப்பல் கலைக்கழகம் சிலிர்த்து நிற்கும்
வெல்லச்சொல் உரையறிஞர் அண்ணா வாழ்வை
விருத்தியுரை யாக்குகிற சமாதி, காண்போர்
கல்நெஞ்சை உருக்கிவிடும்; சரிதம் சொல்லும்!
கர்ணமகா ராசனைப்போல் வாழ்ந்த வள்ளல்
கல்வெட்டாய் நிற்பதுவும் பேழைக் குள்ளே
கண்ணயர்ந்து துயில்வதுவும் யிங்கே தானே!

கற்பரசி கண்ணகிக்கும், பாடும் ராம
காதையினைத் தந்துயர்ந்த கம்ப ருக்கும்,
பிற்பகுதிப் பாரதிக்கும்– பாவேந் துக்கும்,
பெண்ணாசை முதல்துறந்த இளங்கோ விற்கும்,
சொற்களஞ் சியந்தந்த முனிவ ருக்கும்,
சுதந்திரத்திற் காயுழைத்த காந்தி யார்க்கும்
சிற்பிகளின் படைப்பான சிலைக ளுண்டு
சீர்திருத்தப் பெரியார்க்கும் படிமம் உண்டு;

வான்வெளியில் ஒலியனுப்பும் நிலையத் தோடு
வளர்கின்ற தொலைக்காட்சி நிலைய முண்டு;
கூன்விழாத குறள்தந்த வள்ளு வர்க்கோர்
கோட்டமுண்டு பலசிறப்பும் ஆங்கே யுண்டு;
மேன்மைதரு கல்விக்கூ டங்கள் உண்டு
மின்னுகிற மாம்பலமும் இங்கே யுண்டு.
மீன்சந்தை போலிலங்கும் கோடம் பாக்கம்
மேதைகளும் பேதையாகும் டெல்லாப் பூமி!

நெஞ்சத்தைப் பிளந்தோடும் கூவம் ஆறு!
நினைத்தற்கும் மறந்துவிட்டு நகரை யாளும்.
அஞ்சாமா நகராட்சி யெலாம்சி றப்பாம்;
ஆகாகா என்னென்பேன் தொழுநோய் போலே
அஞ்சவைக்கும் சேரிக்குள் ஆட்சிக் கட்டில்
அமர்தற்குக் கட்சியெலாம் விதைதெ ளிக்கும்;
பஞ்சம்வரும் தண்ணீர்க்குப் பட்டி னத்தில்
பானவகைக் கெந்நாளும் பஞ்ச மில்லை!

திரையரங்கே சென்னைக்குச் சொர்க்க மாகும்
திருட்டுக்குக் கலைமேடை யாய்வி ளங்கும்;
இரைதேடும் சினவேங்கை சைவம் பேசும்;
இதயத்தோ டிருப்பவரை உறிஞ்சிப் பார்க்கும்.
தரைக்கனியாய் வாழ்ந்தவர்கள் இந்த ஊரைத்
தர்மமிகு சென்னையெனச் சொன்ன போதும்,
புரையோடிக் கொண்டிருக்கும் புண்ணே யீது;
பொன்னகரம் சிலபேரின் வேட்டைக் காடே!



# அண்டங் காக்கா பாடுது

அண்டங் காக்கா பாடுது— அதைக்
கேட்கக் கூட்டம் கூடுது!
கையால் தாளம் போடுது— அங்கு
காசும் புகழும் சேருது!

குயிலைக் காகம் பழிக்குது— அந்தக்
குணத்தை உலகம் மெச்சுது!
மயிலின் ஆட்டம் வெறுக்குது— புத்தி
மயங்கிப் போய்த்தா னிருக்குது!

உண்மை, நஞ்சாய் தெரியுது—பொய்கள்
ஊரில் சுற்றித் திரியுது!
பெண்மை அசிங்கம் ஆகுது— அதைப்
பேச நாவும் கூசுது!

பரத நன்னம் கசக்குது!— காட்டுப்
பன்றி யாட்டம் இனிக்குது.
நரக வாழ்வே ஓங்குது— உலக
நயன்மை எங்கோ தூங்குது...

அறிவும் அடிமை யாகுது— நாட்டை
அற்பத் தனங்கள் ஆளுது
குறிக்கோள் முறிந்து போகுது— எங்கும்
குற்றம் பெருகி வருகுது!

கூழாங் கற்கள் விற்குது — வைரம்
கொள்வா ரின்றி நிற்குது!
பாழாப் போன உலகிலே — நல்ல
பண்பும் கெட்டுக் கெடக்குது.

பயிரை வேலி மேயுது — நீதி
பலமிழந்தே துடிக்குது!
உயிரைப் போன்ற சத்தியம் — நாட்டில்
ஓங்க வேண்டும் நித்தியம்!



# பெரிய சீட்டுங்க

அச்சடிச்ச பச்சைநோட்டுங்க — பணம்
ஆளைக்கூட விலைக்கு வாங்கும் பெரியசீட்டுங்க!

உச்சியிலே குப்பயையும் தூக்கி நிறுத்தும் – அடா
உண்மையையும் குற்றமாக்கிப் பிடித்துக் கொடுக்கும்!
பச்சையில் பெண்களையும் கொண்டு நிறுத்தும்
பாதாளத்தில் இருப்பதையும் எடுத்துக் கொடுக்கும்!

தாயைக்கூடத் தள்ளிவைக்கும் தலையை எடுக்கும்
தந்திரத்தின் உதவியோடு பதவி யளிக்கும்!
நோய்களையும் தீர்த்துவைக்கும் ஞானமும் பேசும்
நூதனமாய்ச் சாதனைகள் செய்து முயர்த்தும்.

சிலரிடத்தில் கோபங்கொண்டு ஓட்டம் பிடிக்கும்
சில்லறையாய்க் கைநழுவி வாட்டம் கொடுக்கும்;
கலகத்திற்கு விதைவிதைக்கும் நரகமும் ஆக்கும்
காருமேலே காருவாங்கி நன்மையும் சேர்க்கும்!

மேதையிடம் சினந்துகொண்டு பேதை யாக்கிடும்
பேதையிடம் காதலாகி அடிமை யாகிடும்!
கீதையுரைக் கிழவரையும் சுற்ற வைத்திடும்
கெட்டவர்கள் கையிருந்தால் நாட்டை யழித்திடும்.

அப்பனையும் பிள்ளையையும் பிரித்து வைத்திடும்
அவர்களுக்குள் குறுக்குச்சுவர் ஆகிக் கெடுத்திடும்
குப்பனுக்குக் கடனுமாகிச் சுருக்கு மாட்டிடும்
கொடுப்பவரின் கையிருந்தால் வள்ள லாக்கிடும்!

அச்சடிச்ச பச்சை நோட்டுங்க — பணம்
ஆளைக்கூட விலைக்குவாங்கும் பெரியசீட்டுங்க!

# தொழு நோயாளர்கள்

இஞ்சியின்மேல் தோலுரியும்; எங்கள் கைகால்
இருக்கின்ற விரல்களிலும் தோலு ரிந்து
கொஞ்சமாய்க் குறைந்துவரும்: அழுகிப் போகும்
கொடியதொரு நோய்க்குப்பேர் தொழுநோ யாமோ?
நெஞ்சுபடும் துயரத்தைச் சொல்வ தற்கு
நேரான சொல்லில்லை; தொழுநோ யாளர்
செஞ்சவினை யொன்றுமிலை பாவ மூட்டைச்
சேமிப்பின் பாதிப்பும் இந்நோ யில்லை;

வேற்றுமையாய்ப் பார்க்கின்ற உலகை, நாங்கள்
வெறுக்காமல் வலம்வந்து உழலு கின்றோம்;
நேற்றைக்கு எமைமதித்த உரோமம் கூட
நிற்காமல் எமைவெறுத்து உதிர்ந்து போகும்;
ஆற்றல்மிகு சமூகத்தில் மதிப்பி ழந்து
அவமானச் சின்னமெனத் திரிகின் றோமே!
தூற்றுகிற மனிதர்க்குச் சாட்டை வீச்சாய்
தொழுநோயா ளரெல்லாரும் திரள வேண்டும்.

வியர்வைமலக் கரியமிலம் மயிர்க்கால் தள்ளி
விடுவதனால் அவைகூடக் 'கரித்து வார்கள்'!
உயர்மேக நிறச்சாம்பல் உடல்ப டர்ந்தும்
ஒளிகுருதிக் குங்குமமும் கலந்த தாலே
நயக்கமென்ன அர்த்தநாரி யென்ப தற்கு
தடையென்ன? எங்களையும் புரிந்து கொள்வீர்.
மயக்கமிலை உறவுறுதி தனைச்சோ திக்கும்
மாசக்தி உடையதனால் பெருநோ யாமோ?

தொட்டுணரும் உணர்ச்சிக்கு உடம்பே சாட்சி
    தொடுவுணர்ச்சிக் கெம்முடம்பே சமாதி யாகும்;
கட்டுடலைக் குலைக்கின்ற இந்த நோயைக்
    கன்மவினை. பாலுறவுத் தொற்றென் பார்கள்;
விட்டதில்லை இக்கரகம்; வியாதி வந்தால்
    வீட்டிலுள்ளோர் எல்லாரும் அந்நி யர்கள்;
குட்டத்தை ஒழிக்கவழி தேடா விட்டால்
    கோடிநலம் காட்டிருந்தும் பயனுண் டாமோ?



# பெருமைக்குரிய பேனாக்களே...

கூர்வேலும் ஈட்டிகளும் தோற்கும் வண்ணம்
கூர்மிகுந்த பேனாக்கள் நீங்கள்; இன்றோ
நீர்வற்றிப் போனதொரு காட்டா றாக
நிலைகெட்டுத் தலைதாழ்ந்து கிடப்ப தென்ன?
யார்வந்து வாய்ப்பூட்டு போட்டா ரிங்கே
அடிமைகளாய், அலிகளென வாழ லாமோ?
போர்ப்பரணி பாடுகின்ற கூர்நாக் காலே
பொய்யெழுதி விலையாகி வீழ லாமோ?

வெடிகுண்டைப் போன்றதுங்கள் வீச்சென் றெண்ணி
விழித்திருந்தேன்; படித்திருந்தேன்; பாதை மாறி
நடிகையரின் மேடுபள்ளக் கதையை வார்த்து
நச்சுவிதை மனங்களிலே விதைக்கின் றீர்கள்;
முடிசூட்டிக் கொண்டிருக்கும் பேனா வென்றே
முழங்குதற்கு வாய்ப்பேது? இடமும் ஏது?
நடிப்பதற்கா கத்தான்முக மூடி போட்டு
நல்லவர்கள் இடையினிலே சுழல்கின் றீர்கள்;

உங்களுக்கும் இதயமுண்டு மனச்சான் றுண்டு
ஒவ்வொன்றை யுமெழுதும் போது நீங்கள்
செங்கோல்போல் திமிராமல், தலைகு னிந்தே
செயல்பட்டு வாழ்ந்துகொண் டிருக்கின் றீர்கள்;
பொங்கிவரும் கங்கையெனப் பார்த்து நின்றால்
புழுமிகுந்த கூவமெனப் பாய்கின் றீர்கள்;
உங்களொற்றைத் தனப்பாலைக் குடித்த சேய்கள்
மஞ்சள்நோய் மயக்கத்தில் கிடக்கின் றார்கள்.

வறியவர்கள், வஞ்சிக்கப் பட்ட மக்கள்
வாழ்விழந்த அபலைகளின் சார்பில் நின்று,
குறிபார்க்கும் பிர்மாத்திரம் என்றி ருந்தேன்
கொக்கோக விருத்தியுரை யாய்விட் டீர்கள்;
நெறியிழந்து, அதிகாரக் கட்டி லுக்கு
நீங்களுந்தான் பாவைகளாய்ப் போய்விட்டீர்கள்
அறிஞர்களின் கையிருந்தும் தப்புத் தாளம்
ஆடையவிழ்க் கின்றசெயல். வெட்கம்! வெட்கம்!

ஆள்வாரின் சின்னவீட்டுப் பந்துக் கிண்ண
அழகினையும். அந்தரங்க சப்தத் தையும்
தாள்களிலே பதிவதுதான் பணியென் றிட்டால்
தயைசெய்து சிதைமூட்டி யதில்வீ ழுங்கள்;
தாள்களையும் பிடித்துலுக்கும் இந்த நாட்டுத்
தலையான பெண்ணெழுத் தாளர் தங்கள்
தோள்களிலே இருக்கின்ற கதாய்த மாகி
தொடரெழுத்தாய்ப் பிரசவித்துத் திரிகின் றீர்கள்.

எச்சரிக்கை செய்தறிக்கை விடுகின் றேன்நான்
இச்சமுகத் தீமைகளைச் சாடும் போது
அச்சத்தால் நாணலாகி விடுகின் றீர்கள்;
அழும்மக்கள் கண்ணீரைத் துடைப்ப தற்கு
நிச்சயமாய் வரமறுக்கும் நீங்கள் எல்லாம்
நீலப்பட வர்த்தகர்கள்; ஆகை யாலே—
உச்சிவெயில் இறங்கும்முன் தீயில் வீழ்ந்து
உலகிருந்து விலகுங்கள் வழிவி டுங்கள்!

# வாழ்க்கையில் மிச்சம்

வாழ்க்கையிலே வருவதெலாம்
மிச்சம் ஆகுமா— மனிதா
வான்பொருளால் உலகிருக்கும்
துயரம் போகுமா?

பொன்பொருளை யெடுத்துக் கொண்டு
போனவன் யாரு...?— அடா
பிறக்கும் போதே செல்வத் தோடு
பிறந்தவன் யாரு...?

மாட்டுக் கொட்டில் தனிற் பிறந்த
இயேசு நாதரும்
ஆட்டுப் பாலைக் குடித்து வளர்ந்த
மனுஷர் காந்தியும்
சத்தியத்தின் நெறியுணர்த்திச்
சிறப்படைந் தார்கள்— புவி
மெச்சும்படி மனிதர் வாழ
வழியுரைத் தார்கள்!

பாதைமாறி நாமெல்லாரும்
நடக்க லாகுமா...?— நெல்லின்
பதரைப் போல நெறியைக் கூட
நினைக்க லாகுமா...?

ஓட்டை வீட்டில் இருக்கும் ஆவி
ஓடிப் போகலாம்... நீ
ஈட்டி வைத்த செல்வ மெல்லாம்
இழந்தும் போகலாம்...!
கூட்டுக் குள்ளே இருப்பதாலே
பெரியவனில்லே... —அடா
குடல்பெருக்கி வாழ்வதாலே
நன்மையும் இல்லே!

ஆட்டிவைக்கும் சூத்திரத்தை
நினைத்துப் பாரடா—அந்த
ஆற்றலிலே பல நடக்கும்
வழியைத் தேடடா...!



# திரைப்பாடல் ஆசிரியர் தில்லானா

கம்பன்சேக் கிழான்கூட எனக்குத் தூசு
    கற்பனையில் நானரக்கன்; உலகே என்னை
நம்பித்தான் இருக்கிறது காற்றைப் போல
    நல்லகவி தைகொடுத்துச் சுற்று கின்றேன்;
கொம்பனெவன் என்முன்னே பேனா தூக்கிக்
    கொண்டிங்கே பாட்டெழுதத் துணிவான் இன்றும்?
செம்பெல்லாம் பொன்னாமோ? நான்மட் டுந்தான்
    சிறப்பாகப் பாவெழுதிப் பொருள்சேர்க் கின்றேன்.

பாரதிக்குப் பாட்டெழுதத் தெரிய வில்லை!
    பாவேந்தர்க் கென்னைப்போல் ஞானம் இல்லை;
சீரதிகம் பெற்றாரா சுரதா? முன்னாட்
    சிலம்பென்ன குறளென்ன படைப்புப் பூமி?
தோரணையில் சிந்தனையில் என்னைப் போலே
    சொல்லுதற்கு யாருண்டு மண்ணா கத்தில்?
சாரதிநான் என்பாட்டுச் சத்தி ரத்தில்
    சாப்பிட்டுக் கொண்டிருக்குந் திரைப்பட் டாளம்!

நாக்கெனக்கு நடனமயில்; அதனா லேதான்
    நான்வென்றேன் திரைவானில் பாதி யானேன்;
மூக்குமுட்டத் தின்றுவிட்டு துயிலு வோர்க்கு
    முன்னேற்றம் கிடைத்திடுமா வியர்வை யின்றி?
தேக்கத்தைப் போக்கியவன் தமிழ்மொ ழிக்குத்
    திசைகாட்டிக் கருவியும்நான் போக்கும் நானே!
சீக்கிரமாய் எனைத்தூக்கிக் கொண்டா டுங்கள்
    சினிமாவின் ரேலிந்த உலகம் என்னாம்?

பாட்டெழுத இப்பக்கம் வருவோ ரைகான்
பதம்பார்த்துக் கால்களிலே கடித்து வைப்பேன்
வேட்டுவைக்கும் இடக்கான தோடம் பாக்கம்?
வேந்தனுக்கு நிகராகக் கிளம்ப லாமா?
நீட்டாலும் வேறொருவர் பாட்டு வந்தால்!
நிலவுலகக் கற்பொழுக்கம் கெட்டுப் போகும்.
ஆட்டுவிக்கும் கொட்டமைப்பிற் கேற்ற வாறும்
அருந்தப்பா எழுதுதற்கு நானே ராஜா!

புகைப்பாட்டுத் தனை,வாயால் ஊதி இன்றே
உருவாக்கப் போகின்றேன்; தீயில் வெந்து
தூளாகப் போகுமொரு மலையை யென்றன்
அங்கையால் மூடிவிடப் பார்க்கின் றேன்நான்;
விண்ணை முன்னவன்நான்; பூமி மேனி
மீதெங்கும் கால்வைத்துச் சுற்றி யுள்ளேன்;
அக்காலத் துக்கவிதை கள்பு ளிக்கும்
ஆனாலென் கவிதைகளோ மிகவி னிக்கும்!

பல்லெல்லாம் நஞ்செனக்கு; கண்ணில் கூட்டப்
பாம்பிரண்டு குடியிருக்கும் கடிப்ப தற்கு;
சொல்லெல்லாம் சுடுசரங்கள் மிருகப் போக்கு;
நிலவுலகில் எனைவிட்டால் கதிதான் ஏது?
வில்வளைத்தால் அம்பொன்று பாய்வ தைப்போல்
விதைத்தாலே பயிரெழுந்து வருவ தைப்போல்
நல்லசில புகலதும் ஒவ்வொர் நாளும்;
புலிபிர்ப்பு விசைப்புள்ளி போன்ற வன்நான்;

தலைமொட்டை இளந்தாடிக் கோலம் பூண்டால்
தவயோக மெய்ஞ்ஞானம் வாய்த்தி டாது;
கலையுலகில் துறவிகளுக் கென்ன வேலை?
காமகோட்ட லாவனியிற் துறவா வாழும்?
நிலைத்திருக்க வேண்டுமெனிற் படிக்க வேண்டும்
நிச்சயமாய் என்னால்தான் அவர்க ளுக்குத்
தலையெழுத்து மாறியது. வெளியிற் சொல்ல
தயங்குகிறார்; என்மேதா விலாசம் என்னே!

தெரியாத தொன்றுமில்லை ஏனென் றால்நான்
திரைப்படத்திற் கிசைப்பாடல் எழுது கின்றேன்!
புரியாத தேதுமில்லை ஏனென் றால்நான்
புரிந்துகொண்டேன் காதல்மணம் புரட்சி, யாக.
சரியான ராஜாக்கள் மேதை சூழ,
சல்லாபத் திரைவானைப் பட்டாப் போட்டு
பெரியவனாய் வாழுகின்றேன்; குருட்டுக் கூட்டம்
பிழைத்திருக்கும் வரையெனக்கும் ராஜ யோகம்.



# பொறாமைத் தீ

அழுக்காறு பொறாமை யாகும்;
அகத்தினிற் படுத்துக் கொண்டே
கொழுந்துவிட் டெரிநெ ருப்பு
கொடுப்பதைத் தடுக்கும் பாவி!
விழுப்புகழ் அடைவோர் தம்மை
விமர்சிக்கும் சண்டைக் காரி!
இழுக்கினைத் தேடி வைக்கும்
இதுகூட உடன்பி றப்பாம்.

அன்புதான் வாழ்க்கை யோங்க
அடிப்படைச் செல்வ மாகும்;
அன்புதான் புகழ்வி ளைச்சற்
காதார வித்து மாகும்;
அன்புதான் இறையைக் கூட
அடிமையாய்த் தளைக்கும்; அந்த
அன்பையே பொறாமை கொல்லும்
அழுக்காறு கொடிய தன்றோ?

உண்மையே நெஞ்சி ருக்கும்
உயர்வான விளக்க மாகும்;
உண்மையை அணைத்து விட்டவ்
உள்ளாட்சிக் கட்டி லேறும்
புன்மையாம் பொறாமைக் கிங்கே
போர்க்கால அவச ரந்தான்!
நண்பராய்ச் சினமும் வஞ்ச
நரிகளும்... என்ன நேரும்...?

தென்னையை வளர்த்தா லிங்குத்
தேங்காயும் பிறவும் கிட்டும்;
கன்னலை வளர்த்தோ மானால்
கவின்பொருள் மிகவுண் டாகும்;
பன்னறுங் கலைவ ளர்த்தால்
பாரெலாம் புகழ்ந்து பேசும்;
தன்னலப் பொறாமை போற்றின்,
தப்பாது நரகே கிட்டும்!

முகத்தையும் விகார மாக்கும்
மூச்சையும் கொதிக்க வைக்கும்;
அகத்தினில் இருக்கும் ஆற்றல்
அனைத்தையும் அமுத்தி வைக்கும்;
நகப்பேசு மாற்றல் தன்னை
நசுக்கிடும் பிறரைப் பார்த்து
முகத்தினில் சுடுசொல் வீசும்;
முன்னேற்ற வழித டுக்கும்.

காவியப் புலவர் முன்பு
கடிநாய்போல் கடித்துக் கொண்டு
தாவினார், குதித்தா ரென்றால்
தந்திரப் பொறாமை யால்தான்;
பூவினிற் போர்க ளுக்கும்
புன்மைகள் நிகழ்ந்த தற்கும்
சாவினும் தீமை யான
சண்டாளி யன்றோ வித்து?



# கட்டாயப் பாடமிது!

முகத்திற்கு விழியிரண்டே அழகு; எங்கள்
முப்பாலாம் திருக்குறளின் அடியி ரண்டும்
சுகமான நன்னெறியைச் சொல்லி வெல்லும்!
சோமனுடன், ரவிசேர ஒளி யிரண்டு;
பகலிரவாய் ஒருநாளின் பகுப்பி ரண்டு
பக்குவமாய் இலக்கணஞ்சொல் திணையி ரண்டு;
அகம்புறமாய்ப் பொருளிரண்டு; குடும்பத் திற்கும்
அறிவாற்றல் மிகுகுழந்தை இரண்டே போதும்!

தொழிற்சாலை பெருகுவதால், மக்கள் கூட்டம்
தொடர்ந்தங்கே உழைப்பதனால் செல்வம் சேரும்;
எழில்கூட்டும் மருதத்தில் கதிர்கள் முற்றி
ஏராள மாய்விளைந்து கிடக்கு மென்றால்,
கழிஉவகை கூத்தாடும்; நாட்டு மன்றில்
கலைகளெலாந் தலைதூக்கி நிமிர்ந்து நிற்கும்;
பழித்துரைக்கும் படியாகக் கணக்கில் லாமல்
குழந்தைகளைப் பெற்றெடுத்தால் நாடென் னாகும்?

கருத்துவிதை தூவுகின்ற நூல்கள் தோன்றின்,
காவியங்கள் பலதோன்றின் அறிவைக் காட்டும்;
பெருத்துவர அடிக்கடிதம் வயிற்றுக் குள்ளே
பெண்களிடம் கொடுத்துவிட்டால் நலமென் னாகும்?
குருத்துவாழை இலைபோன்ற பொன்னு டம்பு
குலையாதோ? இளம்பருவம் வீணா காதோ?
பெருக்கல்கூட் டல்கணக்கில் இருந்தால் போதும்
பெறும்பிள்ளை ஒன்றிரண்டே போது மென்போம்!

மண்ணின்மேல் சுகமாக வாழ்வ தற்கும்,
மக்களுக்குக் கல்விநலம் கிடைப்ப தற்கும்,
பெண்ணினத்தின் இடர்களிங்கே தீர்வ தற்கும்,
பெருந்திட்டம் எலாம்வெற்றி யடைவ தற்கும்,
புண்ணின்மேல் வந்துமொய்க்கும் . ஈக்க ளைப்போல்
பொலபொலவென் றேமக்கள் பெருகா வாறு
கண்ணியமாய்க் குடும்பநலம் காக்க வேண்டும்;
கட்டாயப் பாடமிது! படிக்க வேண்டும்!

ஈன்றெடுத்த பொழுதைவிட மகிழ்ச்சி காண,
இவன்தந்தை என்னோற்றான் என்று போற்ற,
சான்றோர்கள் அவையில்மகன் தலைமை யேற்க,
சரியான கல்விவளம் கொடுக்க வேண்டும்!
மீன்குஞ்சு கள்போல்நாம் கணக்கில் லாமல்
மேன்மேலும் குழந்தைகளைப் பெற்றுக் கொண்டால்
ஏன்வாழ்க்கை எனும்படியாய் வெறுத்துப் போகும்;
இல்லறமே பெருநரகாய்த் தோற்றம் காட்டும்.

குடியிருப்புக் கிடமில்லை கல்வி நல்கும்
கூடத்தும் இடத்தொல்லை; எங்கும் கூட்டம்;
படிக்கட்டில் தொற்றிநின்று பயணம் செய்யும்
பரிதாப நிலையிங்கே மக்கள் வெள்ளம்!
வடிகட்டி னாலன்றி, பிறப்பைக் கொஞ்சம்
வழிமறித்தா லன்றியிருந்தத் தொல்லை தீரா;
விடிவுவர வேண்டுமெனில்; போடுந் திட்டம்
வெற்றிபெறக் குடும்பநலம் பேண வேண்டும்!

பெண்ணுக்கும் ஆணுக்கும் உரிமை யென்றால்
பெண்ணைமட்டும் இழிவுசெயும் முறையெ தற்கு?
உண்மையிலே பெண்ணினத்தை மதித்தா லன்றி
உலகுய்ய வழியில்லை போக்கும் இல்லை;
கண்களிலே ஒன்றுமட்டும் தாழ்வா? இன்னும்
காலாவதி கோட்டுகளை வைத்துக் கொண்டு
புண்பட்ட நெஞ்சத்தைக் கிள்ள வேண்டாம்
புவியோரே! குடும்பநலம் காக்க வேண்டும்!



# எழுத்தறிவு பெருகவேண்டும்

மயக்குகிற இருள்விலக வெளிச்சம் வேண்டும்
    மண்மங்கை வண்ணவண்ண ஆடை கட்டி,
கயல்விழியைப் புரட்டுதற்கும் கதிர்நீர் வேண்டும்;
    கருங்குயில்கள் பாடுதற்கு வேனில் வேண்டும்;
புயவலிமை இருந்தாலும் வெற்றி வந்து
    புல்லுதற்கு நுண்ணறிவும் இருக்க வேண்டும்;
வயலுக்குத் தண்ணீர்போல், மனித வாழ்வு
    வளத்திற்கு, நலத்திற்குக் கல்வி வேண்டும்!

மனக்குகையில் படுத்திருக்கும் இருட்டு நீங்கி
    மதிவெளிச்சம் பரவுதற்கும், மனித நேயம்
தனக்கெனவே வாழாமல் பிறரைப் பேணும்
    தகுதிமிகும் பேரன்பு பெருகு தற்கும்
இணக்கமுறும் கல்விவளம் வேண்டும்; மாந்தர்
    இன்னுயிரை வளர்ப்பதுவும் கல்வி தானே!
மனக்கவலைக் கொருமருந்து! மக்க ளுக்கும்
    மாக்களுக்கும் வேறுபாடே கல்விக் கண்தான்;

பறிமுதலாய் எவராலும் பறித்துக் கொள்ளாப்
    படிப்பறிவு, மனிதருக்கு இயற்கை வள்ளல்
நெறியாக அளித்தகொடை! அழியாச் செல்வம்;
    நிம்மதிக்கும் எழுத்தறிவே அத்தி வாரம்;
பொறிகளையும், புதியபல ஊர்தி, இன்னும்
    பூசொர்க்க நிலையினையும் படைத்த தெல்லாம்
அறிஞர்களின் மதிநுட்பம்; அந்த நுட்பம்
    அடைதற்கும் எழுத்தறிவே பரவ வேண்டும்!

எழுத்தறிவே கருவாகும்: எல்லா ஞான
இயக்கத்திற் கெழுத்தறிவே விதையு மாகும்!
பழுத்துநிற்கும் மரந்தேடிப் பறவைக் கூட்டம்
பறந்தோடி வருவதைப்போல் மக்கள் கூட்டம்
விழுச்செல்வ எழுத்தறிவைத் தேட வேண்டும்
வேலைதரும் கல்வியையும் கற்க வேண்டும்;
பொழுதெல்லாம் அறியாமை இருட்டில் போக்கி
பொலபொலென உதிர்வதனால் நன்மை இல்லை!

தண்ணீரின் மட்டத்தில் தலையைக் காட்டும்
தாமரைப்பூப் போலவேநம் அறிவும் ஆகும்;
உண்ணுதற்கும் உணவன்றோ வேண்டும்? வாழ்வில்
உயிர்க்காற்றே கல்வியெனின் மிகையா காது;
பெண்களுக்கும் ஆண்களுக்கும் கல்வி கற்றல்
பிறப்புரிமை; இதிலெவர்க்கும் பேத மில்லை;
பண்பாட்டை வளர்ப்பதுவும், ஆய்ந்து பார்க்கும்
பகுத்தறிவைத் தீட்டுவதும் படிப்பே யாகும்!

நாட்டிலுள்ள மக்களெல்லாம் படிக்க வேண்டும்
நன்னூல்கள், கலைநூல்கள் பெருக வேண்டும்;
வீட்டுக்குள் இருட்படலம் ஆட்சி செய்தால்,
வெளியுலக ஒளியாலே கிடைப்ப தென்ன?
ஏட்டைத்தொட் டறியாத ஏழை மக்கள்
இன்னேதம் அகக்கண்ணைத் திறப்ப தற்குப்
பூட்டிவைத்த மனந்திறந்து, உழைக்க வேண்டும்;
புதியதொரு உற்சாகம் பிறக்க வேண்டும்.

படிப்பறியா மக்களெல்லாம் விலங்கைப் போல
பலவகையில் சீர்கெட்டு வாழ்கின் றார்கள்;
கொடியமதுப் பழக்கத்திற் சிக்கிக் கொண்டும்
கொள்கையிலாத் தீநெறியில் அமிழ்ந்து கொண்டும்,
முடியாத நெடுங்கதையாய் வளர்கின் றார்கள்;
மூளைபலம் இல்லாமல் சுழல்கின் றார்கள்;
விடியாதா... அறியாமை...? நிலவும் சாதி
வேற்றுமைகள் விலகுதற்கும் கல்வி வேண்டும்!

தவஞானச் செருக்கோடு நரையைக் காட்டி
தலைநிமிர்ந்து நிற்குமலை: பாயும் கங்கை;
தவறாத விளைச்சல்சீர் கொடுக்கும் பூமி,
தாய்ப்பாலைப் போன்றகனி வளங்கள் யாவும்
நவநாட்டில், பாரதத்தில் இருந்து மென்ன?
நளிகடல்கள் வளங்கள்பல கொடுத்தும் என்ன?
கவனத்தைக் கல்வியிலே வைக்கா விட்டால்,
களர்நிலம்போ லாகிவிடும் நாடும் காடாம்!

கண்ணுக்கு ஒளிவேண்டும்; கவிதா தேவி
களிநடம்செய் திருப்பதற்கும் எழுச்சி வேண்டும்;
மண்ணுக்கு நதிவேண்டும்; மக்க ளாட்சி
மாட்சிபெற மனத்தூய்மை இருக்க வேண்டும்;
பெண்ணுக்கு, அறிவழகு திட்பம் வேண்டும்
பேச்சினிலே உறுதியோடு சுத்தம் வேண்டும்;
எண்ணஞ்சொல் செயலில்நாம் உயர்ந்து நிற்க
எழுத்தறிவு மிகவேண்டும்; கல்வி வேண்டும்!

வறுமைத்தீ இளமையிலே சுட்ட தாலே
வடுப்பட்ட நெஞ்சோடு கல்வி கற்க
சிறுவயதை இழந்தவர்கள், செல்வத் தாலே
செருக்குற்று வழிதவறி வாழ்வோ ரெல்லாம்,
பொறுமையுடன் இன்றேனும் கற்க வேண்டும்.
புத்தகத்தை அளந்தறிந்து படிக்க வேண்டும்.
முறுக்கவிழ்ந்த மலர்மணம்போல், கல்வி யாலே
முதிர்ச்சிமணம் நாடெங்கும் கமழ வேண்டும்!

உடல்வளர்க்கச் சுவையுணவை உண்ணு கின்றோம்
உடல்மறைக்க நல்லாடை உடுத்து கின்றோம்;
தடபுடலாய்ச் செயல்கள்பல ஆற்று கின்றோம்
தாகத்தைத் தீர்க்கநன்னீர் அருந்து கின்றோம்.
நடமாடும் பொம்மைகளாய் வாழ்கின் றோமே
நாளெல்லாம் கல்விகற்று உயர்ந்திட் டோமா?
நடமாடும் கோவில்நாம், ஜீவன் பற்றி
நவில்எழுத்தைக் கற்றுய்யச் சிந்தித் தோமா?

எழுத்தினிலே உயிருண்டு; மெய்யு முண்டு
எதிர்த்துநிற்க ஆய்தமுண்டு; ஓசை யுண்டு;
அழுத்திச்சொல் வலியுண்டு; மென்மை யுண்டு;
அழகுமிகும் இடையுண்டு; அணியு முண்டு;
பழுத்தபலாச் சுளையைப்போல் இனிமை யுண்டு
பலசுவையும் மொத்தத்தில் கிடைப்ப துண்டு;
அழுக்ககற்றும் சத்தியப்பா வகைக ளுண்டு
அவனிக்குப் படிப்பறிவே ஆணி வேராம்;

அச்சாலும் உச்சிநிற்கும் கலசத் தாலும்
அழகுத்தேர் சிறப்படையும் உண்மும் உண்டி,
நிச்சயமாய் நெய்யாலே சிறக்கும்; நன்செய்
நிலத்தாலே ஊர்சிறக்கும்; வறுமை போகும்;
உச்சியிலே கைகுவித்து வணங்கத் தக்க
உயர்வெல்லாம் எழுத்தறிவால் பிறக்கும் உண்மை;
அச்சமின்றி வாழ்வதற்கும் அகில மெல்லாம்
அன்பாலே இணைவதற்கும் கல்வி தேவை!

உண்பதற்கும் உறங்குதற்கும் உடுப்ப தற்கும்
ஒவ்வொருவர் மனத்தேயும் ஆசை யுண்டு;
பண்பாட்டை வளர்க்கின்ற கல்வி கற்கப்
பருவந்தான் வேண்டுமென்றி ருக்க வேண்டாம்!
எண்எழுத்தை வாலிபத்தும் நரைக்கா லத்தும்
ஏன்கற்கக் கூடாது? மனமி ருந்தால்
கண்திறக்கும் வழியுண்டு; கபாலத் திற்குள்
கனல்மூட்டி உய்வதற்குப் பொழுது முண்டு.



# ஒரு மேல் முறையீடு

வேலிகளைப் பயிர்காக்க(க்) கட்டி வைத்தோம்
விளைகதிரின் அறுவடைக்கு மகிழ்ந்து வந்தோம்
வேலிகளே பயிர்மேய்ந்து விட்டதம்மா!
வெள்ளாடு காவல்வேலி ஆனதம்மா!

பயிர்வளரக் களையெடுத்தோம்; மருந்த டித்தோம்.
பலசாதி கோபழிய மந்தி ரித்தோம்;
பயிர்களையே களையென்று பறித்தோ மம்மா!
பாவிகள்சா திக்களைசா விளைத்தோ மம்மா.

உத்தமரைத் தேடியோடி வாக்க ளித்தோம்;
ஊராளும் உரிமைக்குத் தூக்கி வைத்தோம்.
புத்தர்களாய்த் தெரிந்தவர்கள் புலிக ளம்மா!
பொன்வயலாய்க் கண்டதெல்லாம் மயக்க மம்மா.

மாப்பிள்ளை யைத்தேர்ந்து பொருள்வ ழங்கி,
மகளையவன் கைகொடுத்து மகிழ்ச்சி யுற்றோம்!
தீப்பந்தத் திருடனிடம் தானா எங்கள்
திருமகளை ஒப்படைத்தோம்? போன தம்மா !

சித்திரத்தில் மயங்கிப்போய் வாங்கி வந்தோம்,
சீர்திருத்த விழிவிற்றா படத்தைப் பெற்றோம்?
அத்திரத்தைப் பெற்றுவிட்டோம்- புயமி ழந்தோம்.
அறச்சாலை வெடிக்கிடங்காய் ஆன தம்மா!

கோயில்களைக் கட்டுவித்தோம் யாகம் செய்தோம்;
கூலிப்பேய் கொலுவிருந்து அதட்டு தம்மா!
வாயில்களைச் சுத்திசெய்ய நூல்கள் செய்தோம்.
வந்ததெல்லாம் நாற்றமாகிக் குமட்டு தம்மா!

பாஞ்சாலிக் குதிட்டிரனும் தூரியன் ஆனான்!
பள்ளிகளும் உவர்நிலமாய்ப் போன தம்மா...
தீஞ்சுவைசேர் அமுதமெல்லாம் திரிந்த தம்மா
தேவிசக்தி மக்கள்திறன் காண்பா யம்மா!



# முயற்சி திருவினையாக்கும்!

தொடுவானம் கைக்குவரும் எனநி னைத்துத்
தூங்காதே உழைப்பதற்குப் பயந்தி டாதே!
அடுத்தடுத்து முயன்றாலுன் வீட்டைத் தேடி
ஆள்உரிமை கூடவந்து கதவைத் தட்டும்;
உடுத்ததற்கும் உண்ணுதற்கும் தங்கு தற்கும்
ஒருவாய்ப்பும் இல்லாமல் உழல்கின் றாயா?
தடுக்கிறதா மலைவந்து...? சோர்ந்தி டாதே
தக்கபடி சிந்தனைசெய் செயல்ப டுத்து.

சிற்றுளியால் மலைதகரும்; கடல்க டக்க—
சிறுதெப்பம் இருந்தாலும் போதும்; உன்னால்
வெற்றிமங்கை தனைமணக்க முடியும் தோழா!
வீண்காலம் போக்குவதால் நன்மை யில்லை;
தற்காலப் படைப்பெல்லாம், கருவி யெல்லாம்
தளராத முயற்சிபெற்ற சேய்க ளன்றோ?
கற்கோட்டை தானாக முளைத்த துண்டா?
கடினஉழைப் பிருந்தாலே எல்லாம் உண்டாம்!

வீசுதென்றல் உலாவருதல் உழைப்பா ளர்தம்
வேர்வையினைத் துடைத்துவிடக் கருதி யேதான்!
பேசுதற்கும் உதவுதற்கும் யாரு மில்லாப்
பிறவியென்றா நீநினைத்து வாடு கின்றாய்?
மாசுபடா வழியொன்றைத் தேர்ந்தெ டுத்து
மனவூக்கத் தோடுழைத்து நிமிர்வாய் தோழா!
பாசுபத அத்திரமும் உனக்குக் கிட்டும்...
பகலிரவு பாராமல் உழைக்க வேண்டும்.

மலர்க்காவில் சுற்றுகின்ற தேனீ யைப்பார்!
மடியிலாமல் உழைக்கின்ற எறும்பை யும்பார்
கலங்காமல் இமயத்தில் ஏறி வெற்றி
கண்டடென்சிங் கிலாரியினைச் சிந்தித் துப்பார்!
அலக்சாந்தர் முயன்றடைந்த சரிதத் தைப்பார்
அகத்தெழுச்சி தானுன்றன் வெற்றி யாகும்!
பலத்துடன்நீ எழுந்துநின்றால், தடைகள் எல்லாம்
பாதத்தை முத்தமிட்டு விலகிப் போகும்!

அறிவுக்கு வேலைகொடு; இயற்கை தந்த
ஆற்றலையும் உடலையும்நீ பயன்ப டுத்து;
சிறியவுடற் கரையான்கள் புற்றெ ழுப்பும்
செயல்கண்ட பின்னருமேன் மயங்கு கின்றாய்?
குறிக்கோளை அடைவதற்கு உனையே நம்பு
குறைகூறிக் கொண்டிருந்து வீணா காதே!
நெறியுணர்ந்த முடியுமுன்னால் பிறகும் வாழ
நிலத்தில்நீ ஆலமரம் ஆக வேண்டும்!

மண்மேனி யைக்கீறி விதைத்தால், நாடு
மங்கலமாய்ப் பொங்கிவழிந் திடாதோ செல்வம்?
கண்களுக்குத் தெரியாத கனிவ ளத்தைக்
கண்டெடுத்துச் சாலைகளை இயக்க லாமே!
எண்ணரிய கைத்தொழிலைச் செய்து, வேலை
யில்லாத குறையினையும் போக்க லாமே!
திண்ணியநன் னெஞ்சுவேண்டும் முயற்சி செய்தால்
திருவோங்கு சொர்க்கமுன்றன் அடியில் ஆகும்.

# கொதிக்காதே, சிந்தனை செய்!

சூரியக் குடும்பந் தன்னைச்
சொற்களாய் உலையில் ஏற்றி
ஊரினில் வடித்துக் கொட்டும்
உயர்கவிக் கொம்பன் நீயே
வீரிய விருத்தி யாலே
விதைக்கின்றாய் படப்பாட் டுக்கள்;
கூரிய பற்க ளாலே
குதறாதே! பிறரை யெல்லாம்.

சிறுநீரைக் கழித்தால் கூட
சினிமாவின் மெட்டில் கொட்டும்
கிறுக்கலால் கூடக் கம்பன்
கீழாகி வீழ்ந்தே போவான்;
உறுப்படி யான வன்நீ
உன்மலக் கழிப்பி லேயும்
முறுக்கான சந்தம் கொட்டும்
முயலாதே பிறரைத் தின்ன.

கடுவிடம் கொடுக்கில் உண்டு
கருந்தேள் செந்தே ளுக்கு;
பிடுங்கிடும் நாகத் திற்கோ
பல்லின்தான் நஞ்சி ருக்கும்;
கொடுக்குடன் கோரப் பல்லும்
கொண்டிலாய் என்ற போதும்
கடுவிடம் பொழிகின் றாயே...
கவிஞனே! கடித்தி டாதே!

பெருந்தளக் காரப் பெண்கள்
பின்தொடர்ந் துன்னைப் போற்றி
வருவதும் சத்தி யந்தான்;
வரலாற்று நாய கன்தான்;
கரும்போடு மின்னற் பூவும்
கவிதையாய் வருதல் மெய்தான்;
இருந்தாலும் கூவச் சேற்றை
ஏனுண்டு மகிழ்கின் றாய்நீ!

கொலைகாரப் பாவி கூடக்
குபேரனாய் உலவும் நாட்டில்,
கலைத்தொழில் திரைப்ப ரத்தை
கட்டிலில் கிடக்கும் உன்னை
தலையிலே சுமந்தி ருத்தல்
தகும்தகும்; மயக்கத் தால்நீ
குலைந்துபோய்த் தாயின் கற்பைக்
குதறுதல் முறைமை யாமோ?

அதிகாரக் கவிஞர் கூட்டம்
அரசவைக் கேற்றும் உன்னை;
விதியிலார் உன்றன் காலில்
வீழ்ந்துமே துதிக்கக் கூடும்!
புதியவன் என்ற ரற்றிப்
பொட்டைகள் சுமக்கும் உன்னை;
நிதியமும் குவியும்; ஆனால்
நிலைக்குமோ இவைகள் எல்லாம்?

வணங்காத கொம்பன் நீதான்
　　　　வளர்ககவித் துறையும் நீதான்;
பணங்காசு உந்தும் சேர்த்த
　　　　படைப்பாளி பிர்மன் நீதான்;
கணக்கிலாத் தொகைக்கு ஞானி
　　　　கைத்தாளப் பாட்டும் நீதான்;
குணமுள்ள மனிதன் தானா?
　　　　கொதிக்காமல் சிந்திப் பாய்நீ!



# சமத்துவம் காண்போம்

சாதி மதங்கள் இனத்தாலும்— பலரின்
சகுனியின் துரோகக் குணத்தாலும்
வீதியில் பிணங்கள் உருளுவதோ— இந்த
வேதனை யாற்புவி கருகுவதோ?

ஆயிரம் சாதிகள் எதற்காக?— நம்மை
அழித்துக் கொள்வதோ இதற்காக;
நோயினைத் தீர்ப்பதற் கார்வருவார்?— இந்தக்
கொடுமைக் கென்னதான் வேர்தருவார்?

தீண்டத் தகாதவர் என்பதென்ன— உங்கள்
திருமந்திர முக்கியச் சூத்திரமோ?
ஆண்டாண் டாய்சாதிச் சேற்றினிலே— மூழ்கி
அமிழ்ந்து கிடந்தும் எதுகண்டீர்?

சாதிக் குதிரை மீதேறி— வெற்றிச்
சவாரி செய்யும் சமர்த்தர்களே,
நீதியைக் கொன்று குவிக்காதீர்— மனித
நேயந்தனைச் சுட்டழிக் காதீர்!

பேரோ டொட்டிக் கொள்ளுகிற— சாகாப்
பேயின் சாகஸம் அறியீரோ?
வேரோ டன்பை அழிக்கிறது— வாழ்வில்
வேற்றுமை நஞ்சைப் படைக்கிறது!

சாதிக் குட்டையில் ஊறியதால்— சமூகம்
ஏற்றத் தாழ்வாய் மாறியது!
வீதியில் ரத்தம் நாறியது— ஆட்சி
வேட்டைக் காடாய் மாறியது.

சிலுவைக் கோலைக் கையெடுத்து— நெஞ்சைச்
செதுக்கும் வதையைச் செய்யாதீர்.
வலுவாய் இருப்பதால், குறள்தந்த— தெய்வ
வள்ளுவனைக் கிறித்தவ ராக்காதீர்!

அல்லா தந்த கூன்பிறையை— வெட்டும்
அரிவா ளாய்க்கை தூக்காதீர்!
எல்லாம் அறிந்த தாயெண்ணி— மற்றோர்
எரியத் தீயை மூட்டாதீர்.

அன்பே சிவமென் றுரைத்திட்டீர்— ஆடும்
அரியின் மெய்ப்பொருள் கண்டீர்கள்
பின்பேன் ஜாதிப் பிரிவினைகள்?— பாட
பேதங்கள் மனிதரில் எதற்காக?

கேட்டை ஒழிக்குமாம் வேல் சூலம்— உங்கள்
கிறுக்குத் தனத்தால் இழிவாகி,
நாட்டை அழித்தல் நலமாமோ?— இந்த
நாசச் செயல்மங் கலமாமோ?

நெற்றியில் நீறு பூசியதால்— மார்பில்
நீண்டதோர் பூணூல் போட்டதனால்
முற்றாய் உங்கள் போதனைகள்— நாட்டை
முன்னேற் றத்திற் செலுத்திடுமோ?

மண்டைக் காடுகள் இனிவேண்டாம்— எந்த
மசூதிக் குள்ளும் சிலைவேண்டாம்.
சண்டைகள் எதற்கு நமக்குள்ளே— இனி
சமத்துவம் காண்போம் நொடிக்குள்ளே!



# சுதந்திரக் காற்று

சுதந்திரக் காற்றைச் சுவாசித்தோம்— நாங்கள்
சுகந்தத் தென்றலாய் நேசித்தோம்
காற்றுப் பட்ட இடத்திலெல்லாம்— இங்கே
கடத்தல் பிளவைகள் கிழம்புதடா!

பாட்டி மருத்துவம் பார்த்தாச்சு— தேர்ந்த
பண்டிதரும் வந்து போயாச்சு
ஊட்டச் சத்தும் கொடுத்தாச்சு— ஆனால்
உடலம் மட்டும் துரும்பாச்சு!

வெள்ளைக் கொக்குகள் இங்கில்லை— ஏனோ
விடிந்தும் தொடருது பகற்கொள்ளை
உள்ளமும் கறுப்பாய்ப் போனதடா— செல்வ
நதியோ மேட்டுக் கேறுதடா!

கவசம் அணிந்தோம் காப்புக்கு— நல்ல
காவலும் அமைத்தோம் தோப்புக்கு
கவசம் உடம்பைத் தின்றதடா— மெய்க்
காவலும் தோப்பைக் கொன்றதடா!

திட்டக் குதிர்களில் பெருச்சாளி— இருந்து
தின்று தீர்க்கும் விருந்தாளி
பட்டப் பகல்களே இருட்டாகும்— எல்லாம்
பலரும் அறிந்த திருட்டாகும்

வற்றா தோடும் ஜீவநதி— ஒருநாள்
வாக்கை அளிப்பதே எங்கள்விதி
மற்றவை கறுப்புப் பணத்துமதி— பாராள்
மன்றத் தாட்டம் எல்லாம்சதி.

தங்கப் பதக்கம் கிடக்கட்டும்— இன்று
தாமிர மாவது கிடைக்கட்டும்
பொங்கிடும் ஆவலிற் பார்க்கின்றோம்— ஒன்றும்
புரியா மல்நாம் விழிக்கின்றோம்!

பந்தயத் தலைவர் நின்றுகொண்டே— ஒடும்
பாவனை செய்கிறார் தின்றுகொண்டே
இந்திய நாட்டுச் சுதந்திரந்தான்— ஆகா!
எல்லாம் கொடுத்தது சிலபேர்க்கு.



# உழைக்கத் துடிக்கும் உரமிகு தோள்கள்

அலைச்சதங்கை கட்டிக்கொண் டாடு கின்ற
ஆழிஅணி செய்துநிற்க, நீரா காரம்
மலைக்குடுமி யில்லிருந்து நதியென் றோட,
மருதவயல் நெற்கதிரால் கவரி வீச,
கலைத்தொட்டி லாய்விளங்கும் பார தத்தில்
கணக்கற்ற இரத்தவடு; பெருங்கா யங்கள்;
வலைவிரித்த வெள்ளையனின் கையிற் சிக்கி,
வலியிழந்த கதையறிவோம் நாமெல் லாரும்.

விடுதலைக்குப் பின்வளர்ச்சி தாழ்ச்சி என்ற
விவாதங்கள் குடுமிபிடி சண்டைக் காட்சி;
முடுகடியாய் நடப்பதையும் காண்கின் றோம்நாம்
முன்னேற்றம் முயற்கொம்பென் பாரு முண்டு;
தொடுவானம் கடல்மகளைத் தழுவி னாற்போல்
தூரத்தே தெரிந்தாலும் அதுவா உண்மை?
நெடுங்கால மாயுறங்கி வந்த வர்க்கு
நித்திரையை உதறிவிட மனந்தான் இல்லை.

கண்ணுக்குள் அகப்பட்ட வானம் என்றன்
கைக்குள்ளே வாராதா என்றி ருந்தால்,
மண்மங்கை நமைப்பார்த்து நெஞ்சிற் குள்ளே
மரியாதை கொள்வாளா? நலஞ்செய் வாளா?
புண்ணுக்கு மருந்தன்றோ வேண்டும்? பூசும்
புனுகாலே புண்ஆறிப் போவ துண்டோ?
விண்சுமக்கும் சொர்க்கத்தைக் கொணர்வ தற்கு
வீறார்ந்த தோள்களிங்கே உழைக்க வேண்டும்

வானோடு கைகுலுக்க நிமிர்ந்த மாடம்,
வயிற்றுக்குள் புதையுண்ட வைரக் கற்கள்
தானாக வந்ததுண்டா? உழைக்கும் தோள்கள்
தந்தவையே இவையெல்லாம்; ஆகை யாலே
தேனாறு பாலாறு ஒடு தற்கும்
திருநாட்டில் செல்வவளம் கொழிப்ப தற்கும்
கூனாத மனத்தோடு உழைத்தற் காகக்
குன்றொத்த உரமிக்க தோள்கள் வேண்டும்.

நிலவில்லா வானத்தால், மழைகொ டுக்க
நீரில்லா மேகத்தால் பயன்தா றுண்டோ?
புலமிருந்தும் நதியிருந்தும் பயனதான் என்ன?
புயவலிமை உடையவர்கள் உழைக்கா விட்டால்,
நிலமெல்லாம் பாலாகிப் போய்வி டாதோ?
நேற்றின்று நாளைக்கும் உழைப்பே மூலம்.
உலகத்தில் துடிப்புடனே உழைக்கும் தோள்கள்
உருவாக்கிக் காப்பாற்றும் முழவுத் தோள்கள்.

இதுவரையில் என்செய்தோம்? பேசக் கற்றோம்;
எப்படியும் குடல்கழுவி வாழக் கற்றோம்;
புதுப்பொருள்கள் எனச்சொல்லி வேற்று நாட்டுப்
போதையிலே மயங்குதற்கும் கற்றுக் கொண்டோம்;
சதுரங்கத் தாட்டம்போல் சமுதா யத்தில்
சங்கடத்தை உருவாக்கக் கற்றுக் கொண்டோம்;
மதுரமொழி பேசுதற்கும் நேயத் தோடு
மக்களுக்கு, உழைப்பதற்கும் முன்வந் தோமா?

வந்திருந்தால், இந்நேரம் கங்கை யாறு
வறண்டுநிற்கும் பொன்னியோடு குலவி டாதோ?
நொந்துநிற்க வேண்டுவதோ? நிலத்தில் வெய்யில்
நோய்வருமோ? பயிர்செழித்து வளர்ந்தி டாதோ?
சந்தனத்தில் குளித்துவந்த மேனிப் பெண்கள்
சஞ்சலத்தை அடைவாரோ தண்ணீர்க் காக?
எந்தவித மானாலும் சரியென் றெண்ணி
இருக்குமிந்தத் தூக்கத்தால் அழிவுண் டாகும்!

வினாக்குறியாய் வளைந்தவனே! இருண்ட வீட்டில்
விளக்கேற்றத் துடிப்பவனே எழுந்து வா! வா!
கனாக்கண்டு திரைநீலப் பழத்தை உண்டு
களர்நிலம்போல் நிற்பவனே மயங்கி டாதே!
உனக்குள்ளே எரிஒளியை, வலியைக் கூட்டி
ஒன்றுபட்டு, உழைப்பதற்குத் திரண்டு வா! வா!
மனத்தினிலே உறுதியோடு எழுந்து வா வா
மறுஉதயத் திற்குளெலாம் மாறும் வா வா.

உருக்காலை நெருப்புவிழிப் பார திக்கும்
உன்மேல்தான் நம்பிக்கை: துடிது டிக்கும்
பெருங்குன்றே நீயெழுந்து நிமிர்ந்து நின்றால்
பேரண்டம் எல்லாமுன் பேட்டிக் கேங்கும்.
வருங்காலம் உன்கையில்... ஆனால் நீயோ
வரதட்சணைக் கன்றோ சுழலு கின்றாய்?
இரும்பாலைச் சக்கரங்கள் உன்றன் தோளால்
இனியேனும் சுற்றட்டும் வளம்பொங் கட்டும்.

வாழைதென்னை என்றுனக்கு நீர்வார்க் கின்றோம்—
வளமனையின் குரோட்டன்ஸாய் வளர்கின் றாய்நீ;
ஏழையரின் துயர்துடைக்க எழுவா யென்றால்
இப்போது பயனிலைஎன் றழுகின் றாயே!
பேழைக்குள் நிறைந்திருக்கும் மணியெ டுக்கும்
பெருமுயற்சி, உழைப்புரிமை எல்லா முண்டு;
கோழையெனக் கூண்டுக்குள் கிடந்தி டாதே
கொள்கைவெறி ஒளியோடு எழுந்து வா! வா!

அரையாடைப் பக்கிரியாய் அலைந்திட் டானே,
அடிபட்டும் அகிம்சைக்காய் உயிர்விட் டானே—
தரையளந்த மாமுனிவன்! அவனைப் போல
தாகத்தோ டுழைப்பதற்குத் திரண்டு வா! வா!
இரையாக்கிக் கொள்வதற்கு விரக்தி, வேலை
இல்லாமை, பற்றாமை எல்லா முண்டு;
விரைந்துவரும் கொசுக்களுக்குப் பயந்து கொண்டு
வீட்டையெரித் திடுவதுவா விவேக மாகும்?

அங்கேபார்! அகவிழியால் உற்று நோக்கு!
ஆகாயம் வெளுப்பதனை அறிந்திட் டாயா?
எங்கேயோ சிலரெழுந்து நடக்கும் ஓசை;
எல்லார்க்கும் வேலையென் றுரைக்கும் பேச்சு;
சங்கேத மொழியாக வருத லைக்கேள்.
சமதருமப் பூங்காற்று கொணரும் செய்தி
மங்கிவரும் திரையிருட்டு—இலைகள் எல்லாம்
மனத்திற்குத் தெம்பளிக்கும் எழுந்து வா! வா!

மனற்கபிறு திரிக்கமுடி யாது — தோன்றும்
மழைவில்லை நிலையாக்க முடியா தென்று
கணக்கிட்டு உனையழித்துக் கொள்ள வேண்டாம்.
காலத்தை யெதிர்கொண்டு அழைத்தற் காக
இணக்கமுடன் எழுந்துவாவா! உன்னை யீன்ற
இந்தியத்தாய் பெரிதுவக்க எழுந்து வா! வா!
பிணங்காதே! பெண்களுக்கும் வேலை வாய்ப்பு,
பிறப்புரிமை; மலர்களுக்கு மரியா தைசெய்.

செரிக்காத உணவாலே கேடுண் டாகும்.
செயலில்லா நாட்டினிலே அழிவுண் டாகும்;
தெரிந்திருந்தும் உழைப்பதுநம் உரிமை யென்று
தெளிவாக உணர்ந்திருந்தும்—தயக்க மென்ன?
வரிப்புலியே உரமிக்க தோள்க ளாலே
வரலாற்று நாயகனாய் நிலைக்க வேண்டும்;
திரிந்தலைந்த தெலாம்போதும், தேயத் திற்குத்
திருத்தொண்டு செயத்துடித்து—எழுந்து வா! வா!

உழைப்புரிமை எல்லார்க்கும் உண்டென் றாக்கி
உதயத்தின் அடையாளச் சங்கொ லிக்கும்
விறைவுவந்த துன்றனுக்கோர் வெற்றி யன்றோ?
விரக்திபெறும் போர்வைக்குள் உறங்க லாமோ?
உழைக்கும்தோள், துடிக்கும்தோள், பார தத்தை
உயரத்தே தூக்கும்தோள் கொண்ட வன்நீ;
பறையதிருள் மறைகிறது! பூபா ளப்பண்
பாடுவதுன் செவிப்பறையில் விழவில் லையோ?

துடிதுடிக்கும் உரமிக்க தோள்க ளெல்லாம்
தொடர்தொன்றாய் இணைந்து நிற்கக் கற்றுக் கொண்டால்
விடியாமல் சபிக்கின்ற நளாயி னிக்கு
வேலையில்லை; பரிதிகூட நேரங் கேட்கும்!
அடிக்கடிதன் செயல்காட்டும் அநீதி உன்றன்
அறத்தாயின் அடிவருடி அடங்கிப் போகும்;
இடிமுழக்கம் குரலமாற்றித் தவில்வா சிக்கும்
இல்லாமை எழுந்தோடும்; திருநே சிக்கும்.

நிமிர்ந்தவர்க்கு நெருப்பும்நி ராய்த பாணி!
நீயெழுந்தால் நம்பிக்கை ஒட்டிக் கொள்ளும்;
அமிர்தத்தை உண்பதற்குத் தேவர் கூட
அரியதிருப் பாற்கடலைக் கடைந்திட் டாராம்;
இமியேனும் சோராதே! உன்தோள் களுக்கு
இமமலையே குனிந்துநின்று மாலை போடும்;
திமிர்வாதம் பேசுவோரை வெற்றி கொள்ளத்
தினவெடுத்த தோளுடையாய் வாவா யிங்கே!



# குடிமக்கள் பெருமை!

குடியாட்சி கோலோச்சும் நல்ல நாட்டில்
குடிப்பழக்கம் குடிகெடுக்கும் என்று சொல்லி
அடிக்கடிதன் அறியாமை நெஞ்சைக் காட்டும்
அறிஞர்களே! உங்களுக்குச் சொல்லு கின்றேன்;
குடிக்காத மக்களெங்கே வாழ்கின் றார்கள்?
தேவர்களும் ஸோமபானம் குடிக்கின் றார்கள்;
முடியுடைய மூவேந்தும் குடித்த தாக
முற்கால இலக்கியத்தில் படித்தி லீரோ?

வள்ளுவரும் வள்ளலாரும் காந்தி யாரும்
வாழ்தற்கா பிறந்தார்கள் இந்த மண்ணில்?
கள்ளுண்ணத் தெரியாதோர் எதுவும் சொல்வார்;
கடலெனக்குக் காலளவே யென்றும் சொன்னார்.
பள்ளமெனும் சமுத்திரத்தேன் பயமில் லாமல்
பாதயாத் திரைநீங்கள் செய்ய வில்லை?
கள்மகிமை என்னென்பேன்— போட்டுக் கொண்டால்
கவிவெள்ளம் பெருக்கெடுத்துப் புரண்டி டாதோ?

உற்சாக பானமது; களைப்பை நீக்கி
ஊக்குவிக்கும் செயலூக்கி; வெற்றி ஜாக்கி;
முற்போக்குச் சிந்தனையும் கொடுக்கும் வித்து
முதுகெலும்பை நிமிர்த்துகிற பெரும ருந்து;
பொற்காசு கொடுத்தாலும் வெளிவ ராத
ரகசியத்தைச் சொல்லவைக்கும் சொல்வி ளம்பி,
அற்புதஞ்செய் மதுவைப்போல் பொருள்தான் ஏது?
அடடாவோ...! ஆனந்தம் ஆனந் தம்தான்!

சிந்தனைகள் ஏதுமற்று, சவத்தைப் போலே
செயலற்றுக் கிடப்பதுதான் சமாதி யென்பர்—
வந்தனைக்கும் உரியோராய் வாழ்ந்த சித்தர்;
வாய்க்காத சமாதியையும் கூட்டி வைக்கும்
செந்தேனை, காய்ச்சிவடித் தெடுத்த நீரை—
சீச்சீஎன் றிகழலாமோ உணர்ந்தி டாமல்?
இந்துமுஸ்லீம் ஏழைபணக் காரன் எல்லாம்
இணைகின்ற ஐக்கியசபை மதுக்க டைதான்!

'கூட்டுறவே நாட்டுயர்வு' சொல்கின் றீர்கள்...
குடிப்போரின் கூட்டுறவைக் குலைக்கின் றீர்கள்!
வீட்டிலுள்ள தண்ணீரைக் குடித்தால் கூட
விளைகிறது சுகமென்றால், சரக்கை ஊறப்
போட்டுவைத்துச் சுத்திசெய்த நீர்கு டித்தால்
போகாத நோய்களெல்லாம் போய்வி டாதோ?
நீட்டியளந் தேதேதோ சொல்ல வேண்டாம்.
நிலத்தினிலே சுகிப்பதற்கே பிறந்துள் ளோம்நாம்.

கண்ணதாசன் குடித்தாரே... பெண்கள் மெய்யில்
கப்பலைப்போல் மிதந்தாரே... அமிழ்ந்தா போனார்?
கிண்ணங்கள் கவலைகளை மறக்கப் பண்ணும்;
கிளர்ச்சிதரும்; நன்றாகத் தூங்க வைக்கும்.
புண்பட்ட மனத்தைமது தொட்டுப் பார்த்துப்
போதையினால் மகிழ்ச்சியிலே மிதக்க வைக்கும்.
எண்எழுத்து லட்சியங்கள் யார்க்குத் தேவை?
இங்கிலாந்தைப் பாருங்கள்! இனிச்சொல் லுங்கள்.

மனைவிமக்கள் சொந்தபந்தம் மாயை யென்று
மனமற்று வாழ்பவரே ஞானி யாவார்;
நினைவற்றுச் செயல்களிலும் நாட்டம் இன்றி
நிர்க்குணமாய் வாழும்எமைப் பழித்தல் ஏனோ?
பனைதென்னை மரங்களன்றோ மண்ணில் ஞானப்
பாலூட்டி வளர்க்கின்ற தெய்வத் தாயர்?
வினையென்றால் செயலாகும்; செயல்ந டக்க
வீறுதரும் மதுவையேன் பழிக்கின் றீர்கள்?

'ஊக்கமது கைவிடேல்' ஔவை சொன்ன
உட்பொருளை அறியாமல் அர்த்தம் சொல்லி,
காக்காயோர் விலங்கென்று கதைக்கின் றீர்கள்!
கடைதிறப்பு மலிவுவிலை மதுவாய் வந்தும்
தாக்குதற்குச் சொற்சரத்தைத் தேடு கின்றீர்...!
கனம்நீதி பதிகள்பலர் எங்கள் கட்சி;
வாக்கிற்கும் உழைப்பிற்கும் சொந்த முள்ள
வடிநீரைக் குடிப்பவர்க்கே விடிவு; காண்பீர்!



# உண்மையைத் தேடுகிறேன்

கேடிலாச் சத்தி யத்தைக்
 கெடுக்காமல் வாழ்வர்ர் தம்மை,
முடியாம் திரைபோ டாமல்
 முறையாக வாழ்வார் தம்மை,
நீடிய அன்பில் தோயும்
 நெஞ்சத்தார், நேயர் தம்மைத்
தேடினேன்! தேடு கின்றேன்
 தெருவெங்கும் திரிந்த லைந்தேன்!

ஆடைகள் பளப் ளக்க —
 ஆச்சாரம் மினுமி னுக்க,
வாடையை மறைக்கும் பூச்சும்
 வாய்வீச்சும் கொண்டா ருக்குள்,
கோடையின் வெயிற்கொ துங்கும்
 குளிர்நிழல் தருவை, நாட்டின்
மேடையில் தெருவில் தேடி
 மெலிகின்றேன் ஒவ்வோர் நாளும்!

எத்தனை முகங்கள் வாய்கள்
 எழிலான செல்வ வாழ்க்கை!
உத்தமர் போன்று சுற்றும்
 உயர்மக்கள், கல்வி வல்லார்,
பத்தர்கள், பதவி உள்ளார்
 பாவலர் போன்றோ ருக்குள்
சுத்திசெய் மனத்தர் தம்மை
 தொடர்ந்துநான் தேடு கின்றேன்.

செயற்கைக்கோள் சுற்ற விட்டார்;
செவ்வாயை ஆராய் கின்றார்;
வியப்பான கணினிக் காலம்
விஞ்ஞான வெற்றிக் கோலம்;
உயர்வமை நாட்டிற் குள்ளே
உள்ளத்தால் பொய்யார் தம்மை
பயன்மரம் போன்றோ ரைநான்
பார்த்திடத் தேடு கின்றேன்!

ஆயிரம் விளக்கில் கூட,
அலைமோதும் கூட்டத் திற்குள்,
பாயிரம் போன்றோர் தம்மை,
பண்பாட்டுக் காந்தி யாரை,
நோயிலா மனத்தர் தம்மை,
நுணுகியே தேடிப் பார்த்தேன்.
வாயினாற் சொல்வ தென்ன?
வன்பாற்கண் ஊற்றைக் காணேன்.



# பொழுது விடியப் போகிறதாம்!

பூபாளம் செவியில் கேட்கிறதாம் — இங்கே
பொழுதும் விடியப் போகிறதாம்!
பாவாணர் மந்திரக் கோல்தூக்கி — புரட்சிப்
பாடல் வீரியம் விதைக்கின்றார்!

அரையாடை மட்டுமே சிலருக்கு — சொன்னால்
அதுவும் இல்லை பலருக்கு.
குறையாடைப் பட்டத்து வெற்றிக்கு — தலைவர்
கூட்டமே போற்றித் துதிக்கிறது!

ராஜாக்கள் சிந்தனை வெளிச்சத்தில் — சொர்க்க
ராஜ பாட்டையே தெரிகிறதாம்!
வேஷங்கள் இனிமேற் கிடையாதாம் — நாட்டு
விஷங்களே அமுதாய் மாறிடுமாம்.

குபேர வனத்துப் போதைகளும் — நீண்ட
குடுமிக் குரோட்டன் இளசுகளும்
அபாரச் சிந்தனை செய்கிறதாம் — புரட்சி
ஆயுதப் படைகளும் இதுதானாம்.

நடிகையின் அங்க அசைவுகளில் — மேலை
நாட்டை வணங்கும் மன்மதர்கள்,
அடிக்கடி கேலிச் சித்திரத்தை — தெருவில்
அளிப்பவர் மந்திர வாதிகளாம்!

பரத்தையின் வீட்டு வாசலிலே — கறுப்புப்
பணத்தை எண்ணும் கவிஞர்க்கும்
சிரத்தையாய்ப் பெரும் பரிசளிப்பார் — இங்கே
சிருட்டிக் கருத்தா வானாராம்!

கிழக்கு வெளுத்து விட்டதுவாம் — விடியலைக்
கெடுப்பதே பக்தித் துறைதானாம்.
முழக்கி நீட்டி ஒலிக்கின்றார் — அவரே
முற்போக் காய்வுரை அளிக்கின்றார்!

கோயிலை இடித்துக் குளந்தூர்த்தால் — எல்லாக்
குறைகளும் பறந்து போய்விடுமாம்.
நோயினைத் தீர்க்கும் மருந்திதுவாம் — மக்கள்
நுண்ணறி வில்லாப் பேதைகளாம்!

மேலைத் திசையைச் சுட்டுகிறார் — ஏதோ
மினுக்கு மொழியும் கொட்டுகிறார்!
காலைக் கதிரை இழுத்துவரக் — கொஞ்சம்
கவிதை வெறியும் ஊட்டுகிறார்!

பொழுது விடியப் போகிறதாம் — காதில்
பூபாள ராகம் கேட்கிறதாம்
அழுதும் தொழுதும் கிடப்போரே! — இன்றே
அவரை ஆட்சிக் கேற்றுங்கள்.



# சொந்த நாட்டிலே அகதிகள்

என்னசெய்யப் போகிறாய் நீ
இளைஞர் கூட்டமே...!
எழுந்துவாவா புதியலோகம்
காண்போம் இனிய திட்டமே!

சுதந்திர நாட்டினிலே
வறுமைவந்த தேனடா...
சுரண்டலோடு கொள்ளைலாப
அரசியலைச் சொல்லடா...
படிப்பதற்கும் வசதியில்லா
ஏழைகளைப் பாரடா... ஐயோ
படித்தாலும் வேலை
தருவதாரடா...?

தலைவர்கள் எல்லாருக்கும்
வசதிவாய்ப்புப் பெருகுது!
தண்ணீர்க் கேங்கும் குடங்களெல்லாம்
வீதியிலே உருளுது!
விலைவாசி மேலேமேலே
விஷமாக ஏறுது !
வீதியெங்கும் மதுவோட
சாக்கடையும் நாறுது.

சொந்தநாட்டில் உரிமையில்லா
அகதிகளாய் ஆனார்கள்—சிலர்
சொர்க்கவாழ்வு வாழுகின்ற
குபேரராகிப் போனார்கள்!
மக்கள்தொகை பெருகிப்போச்சு
யந்திரமயமாய் ஆச்சு
விக்கலுக்குத் தண்ணி யில்லே
வீணாக ஏன் பேச்சு?

# எந்தப் பக்கம்?

பகலுக்கு மறுபக்கம் இரவாம்; இன்பப்
பாட்டுக்குக் கால்பக்கம் துன்ப மாகும்;
இகலென்னும் பகைக்கெதிர்த்த பக்கம் நட்பு
இசைமுடியும் அடுத்தபக்கம் வசையென் பார்கள்;
அகத்திற்குப் புறமெதிர்த்த பக்க மாகும்!
அருளொளிக்கோ எதிர்ப்பக்கம் மையி ருட்டு;
முகமலர்ச்சி தருநகைக்கு மாற்றுப் பக்கம்
முற்றிவரும் சினந்தானே...? தவிர்க்க வேண்டும்.

அறம்உலகத் தச்சாணி; அதற்குக் கூட
அடுத்தபக்கம் மறமாகும் அழிவைச் சேர்க்கும்;
பறம்புமலைப் பாரிக்கு மாற்றுப் பக்கம்
படைநடத்தி வந்தவராய்க் காண்கின் றோம்நாம்;
சிறப்புக்கு மறுபக்கம் இழிவு— நல்ல
செயல்களுக்கு மறுபக்கம் சோம்ப லாகும்.
மறதிக்கு அடுத்தபக்கம் நினைவின் தேக்கம்
மயக்கத்தின் எதிர்ப்பக்கம் தெளிவ தாகும்!

உண்மைக்கு மறுபக்கம் பொய்மை யாகும்
உதயத்தின் மறுபக்கம் மறைவாய் நிற்கும்;
பெண்மைக்கு மறுபக்கம் ஆண்மை யென்போம்
பிணக்கின்றி இணைந்தால்தான் சொர்க்க மாகும்.
மென்மைக்கு வன்மையதே அடுத்த பக்கம்.
மேலோர்க்குக் கீழோரே எதிர்ப்புப் பக்கம்;
நன்மைக்குத் தீமையொன்றே கெடுக்கும் பக்கம்;
நாடுநலி வுற்றால்நம் நெஞ்சில் துக்கம்.



கவிஞர் கபிலவாணன்

படக்காட்சித் தேவதைகள் உடைகு றைத்துப்
பருவத்தின் இளசுகளை பாழ்ப டுத்தும்
நடைமுறைதான் பண்பாட்டின் எதிர்ப்புப் பக்கம்;
நடைபாதை வாழ்மக்கள் குலேசர் பக்கம்;
விடைகாண முடியாத ஒழுக்கக் கேட்டை
விதைத்தவர்கள் வாழ்வதெலாம் எந்தப் பக்கம்?
கடைந்தெடுத்த தீமைகளே உலவும் பக்கம்
கள்ளநட்போ யாவருக்கும் சந்தைப் பக்கம்?



# காலமடா காலம்!

காலமடா காலம்— தர்மம்
கண்கலங்கும் காலம்!
கோலமலங் கோலம்— இன்று
கொடுமைக்கனு கூலம்!

பகட்டுமிக்கக் காலம்— இன்று
பணத்தின்கையில் ஞாலம்
குருட்டுத்தன வேழம்— நின்று
குலைக்கின்றது சீலம்.

மூர்க்கருக்கே யோகம்— நீதி
முறையுங்கூடச் சாகும்
பார்ப்பதெல்லாம் வஞ்சம்.. ஐயோ
பாழானதே நெஞ்சம்!

வேலிபயிரை மேயும்— நல்ல
வெள்ளாடுகள் சாயும்.
காலிகளின் வேலை— நாடே
கண்ணம்வைக்கும் சாலை.

நல்லவர்க்குக் கண்ணீர்— நய
வஞ்சகர்க்குப் பன்னீர்.
கல்விக்கில்லை மதிப்பு— இங்கு
கயமைபுதுப் பதிப்பு.

பணபலத் தினாட்சி—அதுவே
பண்புநல வீழ்ச்சி!
இனங்கள் வெறியாட்டு— செல்வர்
இருப்பார்விளை யாட்டு

ஆட்சியிற் கையூட்டு— நல்ல
அறிஞர்க்குவாய்ப் பூட்டு!
மாட்சிமைக்கு வேட்டு— எங்கே
மனிதநேயம் காட்டு?

கற்பிலாத பெண்கள்— சுற்றும்
கருப்புமனத் தாண்கள்;
குற்றவாளி வெளியே— நாட்டில்
குலைந்ததொளி விழியே!

பொருள்களுக்கே பஞ்சம்— வீணாய்
பொழுதுபோக்கும் நெஞ்சம்.
பெருவிழாக்கள் எங்கும் மேடைப்
பேச்சுமட்டும் பொங்கும்.

ஆள்வார் திருக் கூட்டம்— அவர்க்
கானந்தத்தில் நாட்டம்.
நாள்முழுதும் தேட்டம்— குண
நலங்களுக்கே வாட்டம்!

பரத்தைக்கிங்கு மணிமுடி— வீரப்
பத்தினிக்குக் கெடுபிடி!
தரங்களுக்குத் தடியடி— கைத்
தாளத்திற்கே பணமுடி!

போதைதலைக் கேறுது— ஏதும்
புரியாமலே சீறுது!
பேதைத்தனம் நாறுது— எல்லாம்
பின்னலாக மாறுது!

நாடுகெட்டுப் போனது— மேலோர்
உழைப்புவீணா யானது.
ஈடுகட்ட முடியுமோ— ஐயோ
எப்போதிங் கேவிடியுமோ?



# தமிழ்த் தாயே

முச்சங்கம் வளர்த்த தமிழ்த்தாயே!
முப்பால் அமுதூட்டி வளர்ப்பாயே...

மருதக் கரும்பே! செந்தேனே...
மதுர முதுரை அறிவொளியே...
விழிவரிக் காவியம் நீயம்மா
தென்மொழிக் கெல்லாம் தாயம்மா!

முச்சங்கம் வளர்த்த தமிழ்த்தாயே
முப்பால் அமுதூட்டி வளர்ப்பாயே!

பாண்டியன் வளர்த்த பூங்கொடி... ஆ... ஆ...
பாவைஆண்டாள்நீ தனிமொழி!
வள்ளுவர் காப்பியர் நாவசைத்தாய்
வரலாற்றில் புகழாகிப் பாவிசைத்தாய்...

முச்சங்கம் வளர்த்த தமிழ்த்தாயே
முப்பால் அமுதூட்டி வளர்ப்பாயே...

சொல்நிதிச் செல்வியே, செந்தமிழே
நிம்மதிக் கல்விநீ நல்லமுதே!
சன்னதி தரும்மதி நிம்மதியே...
தமிழர்க்கு உன்னடி நற்கதியே!

முச்சங்கம் வளர்த்த தமிழ்த்தாயே!
முப்பால் அமுதூட்டி வளர்ப்பாயே.

# மாமழையே, வா!

மாமழையே வாமழையே— இந்தப்
பூமகள் மூர்ச்சை தெளிந்திட வாமழையே!

வானத்தை விட்டிறங்க மனமில்லையா?
காற்றுக் குதிரையங்கு வரவில்லையா— உன்
ஈர மனத்திலென்ன பெருந்தொல்லையா?
இயற்கைஉனைக் கட்டிக்கொண்டு விடவில்லையா?

மாமழையே வாமழையே! —இந்தப்
பூமகள் மூர்ச்சை தெளிந்திட வாமழையே!

மந்திர விரல்பட்டால் பூமலருமே!
மலையெல்லாம் நதியாதி அலைவீசுமே!
கடல்பெற்ற மேகராஜா சினமென்னடா—உன்
கால்பதியப் பூமியிலே விளையாடடா!

மாமழையே வாமழையே!—இந்தப்
பூமகள் மூர்ச்சை தெளிந்திட வாமழையே!

பூமேனி இளம்பிஞ்சு வாடுகின்றது...!
பொன்வயலில் வெப்புநோயே ஆடுகின்றது!
தானதவம் தலைகீழாய்ப் புரளுகின்றது?
தண்ணீர்க்கு உயிரெல்லாம் அலைகின்றது!

மாமழையே வாமழையே!— இந்தப்
பூமகள் மூர்ச்சை தெளிந்திட வாமழையே!

மின்னல்விழி நீதிறந்தே இடியொலித்தே
மேகமெனும் காவலனே ஓடிவருவாய்!
மண்மகளின் தாகந்தீர அமுதாகுவாய்— நல்ல
மக்கள்மனம் குளிர்விக்க மனம்இறங்குவாய்...

# தமிழ் என்தாய்

பைந்தமிழ் நாயகியே — என்னைப்
பாலூட்டி வளர்த்தவளே!
ஐந்திணை தந்தவளே — உன்றன்
ஆதரம் என்ன சொல்வேன்?

ஈரடி நான்கடியாய் — அன்பாய்
எனக்கடி தந்தவளே!
நேரடி அளவடியாய் — என்னை
நிலைக்கவும் வைத்தவளே!

பொதிகை மலையிருந்து — வேந்தர்
போற்றிடப் பிறந்தவள்நீ!
மதுரக் களஞ்சியம்நீ — தூய
மேகலைச் சிலம்பரசி!

அகர நெடுங்கணக்கை — முதலில்
அன்பாய்க் கொடுத்தவளே!
முகவரி எனக்களித்தாய் — உன்றன்
முதுரைப் பொருளுரைத்தே.

பிழைகள் எலாம்பொறுத்து— வேளிர்
பெருங்கதை யால்வளர்தாய்!
உழைத்திட ஊக்குவித்தாய்— என்றன்
உடலுயிர் செழிக்கவைத்தாய்!

பத்துப் பாட்டிருக்கும்— மதுரைப்
பாண்டியன் பூங்கொடிநீ!
எத்தனை நோன்பிருந்தாய்— என்னை
இப்படி வளர்ப்பதற்கு?

காப்பியன் தனையனுப்பி— நன்னூல்
காண்டிகை தேடவைத்தாய்!
மூப்பிலாப் பேரழகே— எட்டுத்
தொகையோ டிருப்பளித்தாய்.

பாட்டியல் காரிகையும்— கீழ் மேல்
பதினெண் கணக்குகளும்
நீட்டி யளந்தளித்தாய்— தாயே
நெடுந்தொகை நிதியளித்தாய்!

விருந்தினர் வந்துவிட்டால்— நெஞ்சம்
விரும்பி உபசரிப்பாய்!
மருந்தால் மனந்திருத்தும்— உன்றன்
மாண்புகள் பெரியதம்மா!

கவிதைக் கண்ணசைவால்— நெஞ்சம்
கனிந்துநான் மயங்கியதால்
கவிதையைக் கொண்டுவந்தாய் — என்னைக்
காரிகை யோடிணைத்தாய்!

சித்தர் களாகவந்தென்— தாயே
சிந்தை குளிரவைத்தாய்;
முத்தமிழ்க் கன்னியம்மா— வாழ்க்கை
முழுதுமுன் வயத்திலம்மா!



# தமிழ்க் காதலியே!

வஞ்சிக் கொடியுனைக் காதலித்தேன்— என்றன்
வாழ்க்கை முழுது மாராதித்தேன்;
கொஞ்சிக் குலவுவோம் கூட்டுறவில் — கவிதைக்
குழந்தை களாமடி நம்முறவில்.

காரிகை தண்டி யலங்காரம்— உயர்
கம்பன் காவியச் சிங்காரம்
பூரித்த கொங்கை மேகலையே— என்றன்
புறமகப் பாட்டுத் தேவதையே!

ஆறுதொகை அள்ளித் தருபவளே— சிலம்பை
அணிந்திடும் பாண்டியன் திருமகளே,
ஊறுமுன் வாய்த்தேன் உண்பதற்கு — செல்வி
உன்மத் தமாகுதே வெட்கமின்றி!

அரசியற் காளைகள் மிகநடிக்கும்— உன்மேல்
ஆவியை வைத்ததாய்க் கூத்தடிக்கும்;
வரம்பினை மீறியே தேன்குடிக்கும்— ஆட்சி
வந்ததும் யாரையும் கைப்பிடிக்கும்.

உனக்கா கந்தான் பிறந்துவந்தேன் — முற்றாய்
உலகத் தையும்நான் மறந்திருந்தேன்
இணக்கமாய்க் குறிஞ்சிக் கலிபடிப்போம் — முல்லை
இல்லறத் தேரையும் வடம்பிடிப்போம்!

எட்டுத் தொகையுள பேரழகே— நான்
எட்டுந் தொகையாஞ் சீரழகே,
தொட்டுத் தழுவலாம் சிந்தாமணி! —உன்றன்
தூய்திரு வாசகம் தருவாயடி!

நாடி தளர்ந்துநான் தள்ளாடினும்— இந்த
நாடெனை எதிர்த்துப் போராடினும்,
மாடி மனைதிரு வளர்ந்திடினும்— தமிழ்
மங்கை யுனைநான் பிரியேனடி!

கள்வெறிக் கவிதைகள் பாடிடுவேன்— உன்னைக்
கண்களில் வைத்துநான் காத்திடுவேன்!
வள்ளுவன் வாய்மொழி ஒப்பளிப்பாய்— நெஞ்சில்
வளையாத பாரதி தேவையடி.

காவியக் கண்கள் சமுத்திரமோ?— உன்றன்
காலணி ஓசை ஏழ்சுரமோ?
மேவிடத் தயக்கமேன் பொற்கொடியே— மலர்
மேனியென் செப்பேடு எழுதிடுவேன்.

வாசகம் கேட்டதாற் கற்சிலைக்கும்— முன்பு
வாய்பேசு மற்புதம் வந்ததடி!
பேசுவோம் ஊஞ்சலில் ஆடிடுவோம்— இந்தப்
பேரண்ட மெங்கணும் சுற்றிடுவோம்.

வாலைக் குமரிநீ பழுத்திருக்க — என்ன
வந்தது நானுனைப் பிரிந்திருக்க?
வேலை எடுத்தவன் தந்தமகள் — இந்த
வேளையே வந்திடு சொந்தமாக!

பார்வையில் நெஞ்சினைப் பற்றவைத்தாய் — காதற்
பைத்திய மாகவும் சுற்றவைத்தாய்.
யார்வந் துடைப்பராம் நம்முறவை — தேவி
ஆறுமுகன் ஒன்றாய்ச் சேர்த்தானடி!



# தமிழ் என் மனைவிளக்கு

உன்னை மணந்ததனால்— தமிழே
உள்ளொளி பெற்றேனடி!
மன்னு புகழ்பெறவே— நீயென்
மனையாளாய் வந்தாயடி!

ஆடை யணிகளுக்கு — என்றும்
ஆசைநீ வைத்ததில்லை.
மேடையில் நானுயர — உன்றன்
மேதைத்தனம் கொடுத்தாய்!

பாடிக் களித்திடவும் — காதற்
பார்வையால் தூண்டிவிட்டாய்;
தேடித் தெரிந்தெடுத்த— தமிழ்த்
தேவியென் மாமயிலே!

வீட்டை அலங்கரித்தாய்— நெஞ்ச
வேட்கையைத் தீர்த்துவைத்தாய்;
பாட்டுக் குருவளித்தாய்— நம்பண்
பாட்டுத் திருவளித்தாய்.

ஊக்கம் இழந்தபோது— என்னில்
ஊக்கமாய் வீற்றிருப்பாய்;
பூக்களை நான்தொடுத்தேன்— உனக்குப்
போட்டு மகிழ்வனடி!

கோவை இதழ்கொடுத்து— நெஞ்சக்
கோடை வெயில்தடுப்பாய்!
சேவைக் கிலக்கியமாய்— வந்தென்
சிந்தையைக் கிளறுகிறாய்!

பாண்டிய நாட்டினிலே— ஆடிப்
பாடித் திரிந்தவளே!
வேண்டி யடைந்ததனால்— கண்ணே
வெற்றிநீ கண்டதென்ன?

பட்டின வாழ்க்கையிலே— காதற்
பகிர்வுக்கும் நேரமில்லை;
கட்டின தாலியன்றி— பொன்னைக்
கண்ணிலும் காட்டவில்லை.

எத்தனை இன்னல்களில்— அன்பே
ஈடு கொடுத்து விட்டாய்;
சித்தம் கலங்குதடி— உன்றன்
சேவை நினைக்கையிலே!

குண்டல மணிந்தவளே— நீதிக்
குறள்மொழி யில்திளைத்தேன்
ஒண்டொடி வளையாபதி— நாம்
உமைசிவன் ஆனோமடி!

ஆங்கிலத் தோழிவந்து— கொஞ்சம்
அரட்டை அடிப்பதனால்,
பூங்குழல் மாதரசே— நெஞ்சம்
புழுங்கிட வேண்டாமடி..

காப்பியர் இலக்கணத்தில்— சங்க
காலத் துநூற்பரப்பில்,
தோப்பிற் களித்திருந்தோம்— அந்தத்
துய்ப்பினைச் சொல்வதுவோ?

பைந்தமிழ் உன்வரவால்— இந்தப்
பள்ளியில் வேலையடி!
நைந்துநான் வீழ்ந்திருப்பேன்— உன்றன்
நன்பொருள் இலாதிருந்தால்.

குறுமுனி யின்மகளே— வேந்தர்
கோட்டையில் வாழ்ந்தவளே,
பொறுமைக் கிலக்கியமே— இந்தப்
புலவனை வாழவைத்தாய்.

எங்குநான் சென்றபோதும்— உன்றன்
எண்ணில் உறவினரால்,
தங்கமாய்த் தாங்கவைத்தாய்— மேலோர்
தத்துவம் பேசவைத்தாய்!

எனக்கும் முருகனுக்கும்— இடையே
இணைப்பா னபூங்கொடியே!
தினமுமுன் தீண்டுதலால்— அன்பே
திருவருட் பேறடைந்தேன்!



# மோகன கல்யாணி

மனமோகன கல்யாணி— நீ
மதுரமாய்க் கனிந்திடும் இசைவாணி— நீ
மனமோகன கல்யாணி...

அஞ்சனக் கடல்விழி நீலாம்பரி— நீ
அம்ருத வாகினி (ஸ்)வேதாம்பரி!
மஞ்சள் பொன்முக ரூபாவதி...! நீ
மயூர நர்த்தகி ஹேமாவதி!

மனமோகன கல்யாணி— நீ
மதுரமாய்க் கனிந்திடும் இசைவாணி— நீ...

கருங்குழல் முகிலால சிந்தாமணி!— நீ
கல்லையும் கரைத்திடும் அம்சத்தொனி
பெருநதி அருளான கருணாகரி— குழலில்
பேசிடும் தயாநிதி வாகீஸ்வரி!

மனமோகன கல்யாணி— நீ மதுரமாய்க் கனிந்திடும்

வைகறைப் பூபாள நாராயணி— நீ
மழையெனப் பொழிந்திடும் சுரபூஷணி
மங்கள கௌசிக தர்மாவதி— ருத்திர
தாண்டவம் புரிந்திடு(ம்) பெரும்பைரவி... நீ...

பொருப்பை இடித்து—
நெருப்பை யெரித்துக்—
கடல்கள் குடித்துன்— நளின
உடலை நெளித்து— ருத்திர

தாண்டவம் புரிந்திடும் பெரும்பைரவி...! நீ

# வான்புகழ் வள்ளுவர்

அளவடியை ஆனென்றும், மூன்று சீரில்
அடுத்துவரும் சிந்தடியைக் கோதை யென்றும்,
கொளவைத்தார் குடும்பநலக் குறிப்பும் காட்டிக்
குறளாலே உலகாளும் செந்நாப் போதார்!
வளங்கொடுக்கும் கங்கைநதி! சொல்லச் சொல்ல,
வாய்மணக்கும் கர்ப்பூரக் கவிதைச் சொற்கள்;
உளவிகாரந் தனைநிமிர்த்தி வாழ்வில் வெற்றி
உலாச்செல்ல திருக்குறள்தான் சட்ட நூலாம்;

வள்ளுவரின் அதிகாரம் எந்த ஆட்சி
வந்தாலும் மாறாத— வதைப டாத
தெள்ளுதமிழ்ச் சொல்லதிகா ரம்-ந மக்குத்
தேடிவந்த பெருஞ்செல்வம்; அமுத ஊற்று;
அள்ளஅள்ளக் குறையாத ஞான ஆழி;
அணுவுக்குள் கடல்காட்டும் விந்தை ஆடி;
எள்ளிருக்கும் நெய்யைப்போல் இரண்ட டிக்குள்
எரிமலையும் படுத்திருக்கும். என்ன விந்தை?

அறஞ்செய்ய வேண்டுமென்றால், ஆமை யைப்போல்
ஐந்தடக்கி இனியனவே சொலவி ழைந்தால்,
புறங்கூறா மைவேண்டும்; வாய்மை வேண்டும்;
பொய்முகங்கள் கொண்டிலங்கும் மாந்த ருக்கு,
அறத்துப்பால் பொழிந்தார்நம் வளர்ச்சிக் காக;
அற்புதமாய்ப் பொருள்தந்தார் செலவு செய்ய;
புறவுலகை உணர்ந்துகொள்ளப் புலமை தந்தார்;
போய்ச்சேர வேண்டுமிடஞ் சுட்டிச் சொன்னார்.

அனிச்சமலர் காம்புகொய்யா தணிந்து கொண்ட
ஆடைகட்டி வந்தநிலா— அடையப் போகும்
தனித்துயரைச் சொல்லாலே வரைந்து காட்டி,
தருகாமத் துப்பாலில் இன்பம் தந்தார்!
வணிலைதவாய்த் தேன்மருந்தும் களவு கற்பு
வாழ்வுநெறி யும்தந்தார் முப்பா லாக;
கனிக்கொடியும் மகனுமுயிர் மெய்யும் போலக்
காற்றிடையில் புகாமுயக்கும் விளங்க வைத்தார்.

ஆயிரத்து முந்நூற்று முப்ப தாக
அரியமுத்து களைக்கோத்து மாலை யாக்கி,
பாயிரம்செய் புலவரெலாம் போற்றும் வண்ணம்
பைந்தமிழுக் கணிவித்தார் புகழைச் சேர்த்தார்;
கோயிலுக்குக் கோபுரந்தான் அழகு! நீதிக்
குறள்கொடுத்த வள்ளுவரோ இலக்கி யத்தின்
வாயிலைப்போல் சிறப்புற்றார்; அழகு மானார்.
வான்-புகழை அடைந்ததுவும் இவரா லேதான்!

இல்லாத தெதுவுமில்லை; வானில் நின்று
இரங்கிவரும் மழைபோல இரக்கம் கொண்டு,
சொல்லாலே கருத்துமழை பொழிந்தார் தேவர்;
சுகமான சிந்தனையில் அமுதம் தந்தார்.
வெல்லாத கருத்துகளை— செல்லாச் சொல்லை
விதைக்காமல், மெய்க்கீர்த்தி விதைவி தைத்தார்;
முல்லைப்பூச் சரம்போல சிறப்பு வாய்ந்த
முப்பாலைக் கொடுத்தவர்க்கு நிகர்தான் உண்டோ?

# தங்கக் கலசமாய் வென்றவர்

தேமா புளிமா கருவிளங்காய்— இன்பத்
தென்றமிழ்க் கூவிளம் ஸாஸஸரீ
மாமா நேருவை நாம்விளம்ப— நெஞ்சம்
மகிழ்ந்து மிகத்துளளும் பாமகரி

வெள்ளையர் ஆட்சியை ஓட்டுதற்கே— அந்த
வீரத் திருமகன் பாடுபட்டார்!
கள்ளமில் லாஉள்ளம் கொண்டவராம்— அண்ணல்
காந்தியின் நெஞ்சையும் தொட்டவராம்!

வேங்கைபோல் வீரமும் வாய்த்தவராம்— நாட்டில்
வெற்றி விளைச்சல்கள் கண்டவராம்!
தூங்காமல் நாட்டுக் குழைத்தவராம்— தேயத்
தொண்டுக்குச் சன்னையே தந்தவராம்!

அறிவியல் முன்னேற்றம் கண்டவராம்— வைய
அமைதிக்கும் ஆசானாய் நின்றவராம்
பொறியியல் பல்தொழில்வ ளர்த்தவராம்— நேரு
புத்தகம் போல உயர்ந்தவராம்!

பொன்னிற மேனியே கொண்டவராம்— ரோஜாப்
பூவையும் நேசிக்கும் மந்திரியாம்!
உன்னத மாய்ப்பேசும் நாவலராம்— நேரு
உலகமே போற்றிடும் காவலராம்!

மருதத்தில் பெய்மழை போன்றவராம்— நல்ல
மனிதருள் மாணிக்க மானவராம்!
விருத்தப்பா போலுளம்வி ரிந்தவராம்— பஞ்ச
சீலக்கொள் கையைப் படைத்தவராம்!

வறியோரை வாழ்விக்கத் திட்டமிட்டார்— மக்கள்
வாழ்வுக்கும் ஆலைகள் கூட்டுவித்தார்.
அறிஞர்கள் போற்றிடும் நேருபிரான்— நாட்டில்
சமதர்ம மாக்கவே பாடுபட்டார்!

புன்னகை மன்னர் குழந்தைகளை— என்றும்
போற்றி மகிழ்ந்துமே வாழ்ந்தவராம்
தன்னான தானன ஞாலத்திலே— நேரு
தங்கக் கலசமாய் வென்றவராம்!



# அமரகாவியம்

பாரதம் காத்த
இந்திரா அன்னையே!
உன்னைப்
பதினாறு குண்டுக்குப் பலியாக்கி விட்ட
பாவச் சேய்களைப் பெற்றதற்காகப்
பாரதமாதா

தன் கர்ப்பப்பையையே
கழற்றி எரிய வேண்டும்!

● ●

எழுபது கோடி
இதயங்களைச் சுட்டதற்குக்
கழுவாய்— இனிக்
கங்கையிலா கிடைக்கும்?

● ●

நாங்கள் காட்டை அழித்து
நகராக்கிக் கொண்டோம்!

காட்டு விலங்குகள் எங்கே போகும்?

மனிதச் சட்டையை மாட்டிக் கொண்டு
விலங்குக் கூட்டம்
வீட்டுக்கே வந்து விட்டது.

காரணம் அறிந்துதானோ
அம்மாநீ
காடுகள் வளர்க்கக்
கட்டளையிட்டாய்?

● ●

சத்திய கீர்த்தியே...!
உன் உபதேச மொழிக்கு
உயிரையே கொடுத்தாய்!

ஒரு நாளைக்கு முன்னரே
மக்களின் செவிச் செப்பேட்டில்,
மரண சாசனத்தைச்
செதுக்கிய பாவையே!

உன்னை இழந்துதான்
நாங்கள் உலகப் பள்ளியின்
அரசியல் பால பாடத்தையே
படித்துக் கொள்கிறோம்!

● ●

கவிதையைப் போன்ற
கிராமத்து அழகிகள்,
பொழுது புலருமுன் பூமி மேனியில்
சாணநீர் தெளித்து,
புதிய விடியலைப் புகழ்வது வழக்கம்...

நீயும் உன்
செந்நீரைத் தெளித்து
பூமியை மெழுகிவிட்டாய்...

எந்த விடியலை
எதிர்பார்த்து— உன் ஆவி
இப்படி ஆனதம்மா!

● ●

அந்நிய மந்திரவாதிகள்
உச்சாடனம் செய்தனுப்பிய
ஐந்தாம் படைமயக்கத்தில்-
மூர்ச்சையாகி விட்டாளோ
பாரதத் தாய்?

உனது இரத்தத்தையே,
பாரத தேவியின் முகத்தில் தெளித்து—
மூர்ச்சை தெளிவித்த முதல்வியே
நீ அமரகாவிய மாகிவிட்டாய்!

ஆனால் அன்னையே,
நாங்களல்லவா இசைக்கப்படாத
தேசிய கீதமாகிவிட்டோம்!

● ●

தாயே, மறைந்தது
உன் பூத உடல் மட்டுந்தான்!
உனது மீத உடல் நாட்டில்
எழுபது கோடியாய்
எழுகின்ற தம்மா!

உனது, ஆவிக் கேதம்மா அழிவு?
சதிசெய்யும் பாவியர்க் கல்லவா
இது இழிவு?

● ●

அணு ஆயுதங்களால்
உலகத் தாய்க்கு
ஊறு வந்த போதெல்லாம்,
நேருவின் மகளைத்தான்
நெஞ்சில் நினைப்பாள்;

ஆர்யப் பட்டாவின் வெற்றி விழாக்களும்,
ஏழைகளுக் கான இருபது அம்சமும்,
கூட்டுச் சேராக் கொள்கை உறுதியும்,
சோவியத் நாட்டின் நட்புக் கரமும்,
நீ பெற்றுத் தந்த வரப்பிரசாதங்கள்!

உன் மரணம் எங்களை உலுக்கி விட்டது.
ஆமாம் எங்களை உசுப்பியும் விட்டது!

நீ விட்டுச் சென்ற பணிகளைத்
திட்டமாய்ச் செயல் முடிப்போம்!



# தமிழ்த் தென்றல் திரு. வி. க.

வெண்பாவைப் போல மேன்மை;
வேற்றுமை காட்டா நெஞ்சம்
பெண்மையின் சிறப்பைப் பற்றிப்
பேசியே முதிர்ந்த நாக்கு,
அண்ணலார் காந்தி யைப்போல்
அழுக்கிலா வொழுக்கம்; சங்கம்
கண்டதால் உயர்ந்த கீர்த்திக்
கலைவதான் திரு. வி. க. வாம்.

உரைநடை எழுத்தில் வேகம்
உள்ளத்தில் தொண்டின் தாகம்
இரையாத கலிப்பாப் பேச்சு,
இலக்கிய ஞானம் கொண்டார்,
அரைகுறை யாயில் லாமல்
அசலாக வாழ்ந்து வந்தார்;
உரையைவிட் டெழுந்த வாள்போல்
ஒளியாலே சிறந்து நின்றார்!

அழகிலே முருகைக் கண்டார்!
அறிவையே வேலாய்க் கொண்டார்;
பழகினார் ஞானம் பெற்ற
பாம்பனூர்த் தாச ரோடு;
வழக்கினை அறிந்த மேதை
வடலூரார் ஈரத் தோடும்
முழக்கினார் மேடை தோறும்
முதுரை விருத்து வைத்தார்!

கல்யாண சுந்த ரர்க்குக்
கல்விக்கண் ணொளிச்சி றப்பால்
நல்லன தெரிந்த தாலே
நாட்டிற்குத் தனைக்கொ டுத்தார்;
முல்லைப்பூப் போன்று வாழ்ந்த
முதல்தரத் தலைவர். மக்கள்
தொல்லையைத் துடைப்ப தற்குத்
தொண்டாற்றி நிமிர்ந்து நின்றார்.

துறவியும் போற்றும் தூய்மை
துங்காமை, கல்வி, வாய்மை,
அறத்தினில் ஆழ்ந்த பக்தி
ஆயவை கொண்ட மைந்தார்-
இறவாத புகழைப் பெற்றார்;
எந்தமிழ்த் தென்றல் ஆனார்;
சிறந்தவர் பாதை பற்றிச்
செயல்பட்டால் மேன்மை யன்றோ?



# பூபாளப் பாவேந்தன்

பூக்களிலே தாமரைப்பூ அரசி யாகும்,
புலவர்களில் வள்ளுவனார் சிறந்த மேதை;
பாக்களிலே வெண்பாவே கட்டுக் கோப்புப்
படைப்பாகும்; குறிஞ்சித்தேன் சிறந்த தாகும்!
ஏக்கமுற்றுச் சமுதாய விழிப்புப் பாடல்
எழுதிநின்ற கவிஞர்களில் பாவேந் தைப்போல்
நோக்குடையார் யாருமில்லை; குன்றம் நூறு
சேர்ந்தாலும் இமமலையாய் ஆவ துண்டோ?

கங்கையினைக் கவிதைச்சொல் லாக்கித் தீயைக்
கக்குகின்ற எரிமலையை நெஞ்சில் தேக்கி,
வெங்கொடுமைச் சீர்கேட்டை எதிர்த்தான்; சாதி
வேற்றுமையை — பிளவுகளை எழுத்தால் சுட்டான்!
இங்கிருக்கும் புலிகளெலாம் உழைத்துத் தேய்ந்து
இருக்கையிலே பெருச்சாளிக் கேன்வாழ் வென்று
பொங்கியெழும் கனலானான்; வாதப் போரில்
புயலாகி மடமைகளைக் குலையச் செய்தான்.

வர்க்கமூலக் கணக்குகளைப் புரிய வைத்தான்
வளைந்திருந்த எலும்புகளைத் தமிழ்மை பூசி,
தர்க்கஞ்செய் மானுடராய் நிமிர்த்தி வைத்தான்;
தலையாட்டிப் பொம்மைகளை ஆய்த மேந்தும்
துர்க்கைகளாய் உலவுதற்கு மந்தி ரித்தான்!
தோகையரின் உரிமைக்கும் முழக்க மிட்டான்!
நிர்க்கதியாய் நிற்கும்கைம் பெண்ணிற் காக
நீண்டகவி வேள்விசெய்தான் இப்பா வேந்தன்!

மட்டையடி யாயடித்த கவிதைப் பந்து
மார்பில்பட, மூச்சடைத்து வீழ்ந்து போனார்,
குட்டைமனம் கொண்டவர்கள்; மதம்பி டித்தார்
கொதிகலத்தில் வீழ்ந்துவிட்ட ஈக்க ளானார்;
விட்டுவிட்டுப் பெய்யாமல் தொடர்ந்து பெய்யும்
விண்ணைப்போல் கவிதைமழை பெய்த தாலே,
தொட்டுக்கொண் டிருந்தசில சமுகக் கேடு.
தொலைந்துபுதுச் சிந்தனைகள் முளைத்த திங்கே.

உலகப்பன் பாட்டுக்குள் வறுமை தீர்க்கும்
உத்தியுண்டு பொதுவுடைமைப் பதிய முண்டு;
கலகங்கள் அடங்குதற்கு வழியு முண்டு;
கவியெங்கும் தமிழ்மணந்தான் நிரம்ப உண்டு;
பலஜாதிக் கலவரங்கள் மானு டத்தைப்
பற்றிக்கொள் ளாதிருக்க, குறிஞ்சிக் காதல்
நலஞ்சேர்க்கும் மருந்தென்று தந்த துண்டு-
நல்லதமிழ் இயக்கத்தால் மீட்சி யுண்டு.

சாம்பல்தோல் வளர்த்திருக்கும் நெருப்பைப் போல,
ஆழ்துயிலில் வீழ்ந்திருக்கும் சிங்கம் போல,
கூம்பிக்கொண் டிருக்கின்ற தமிழ கத்தை
கோமாவில் வீழாமல் விழிக்க வைத்தான்!
சாம்போதும் தமிழ்படித்துச் சாக வேண்டும்;
சாம்பலெலாம் தமிழ்மணந்து வேக வேண்டும்!
தேம்பாதே, முறுக்கேற்றித் திரள்வாய் என்று
தெரிவித்தான்; இவன்தானே கிழக்கு வானம்?

பாட்முத லாளியிவன்! புதுவை தந்த
பைந்தமிழ்ப்பாண் டியன்பரிசு; குறிஞ்சித் திட்டு;
கூட்டுறவை வளப்படுத்திக் கொடுக்க வந்த
குடும்பவிளக் கிசையமுதம்; தமிழின் சொத்து.
ஆட்டிவைக்கும் வர்க்கத்தை அடக்கி வைக்க
அவன்தமிழச் சியின்கத்தி எதிர்ப்பு சக்தி;
கூட்டிருந்த சிறுத்தைகளைத் திறந்து விட்டு,
குளிர்தமிழால் நல்லதீர்ப்புத் தந்த மேதை!

சூரியனுக் கறிமுகமே தேவை யில்லை.
சுடரெழுத்துப் பாவேந்தர் பற்றிக் கூறி,
பாரிலவர் நிமிர்ந்தபுகழ் பெறுவா ரன்றிப்
பகுத்தறிவுச் சுடர்க்கொன்றும் லாப மில்லை;
வாரியென்னும் கடல்தானா நதியைத் தேடும்?
வங்காளக் கடலைப்போல் இவன்சி றந்தான்.
கூரியசொற் கலப்பையினால் உழுது வித்து
குறையாத கவிதைமக சூலைப் பெற்றான்!

கலப்புரம்போல் இவன்கவிதை சமுகத் திற்குக்
கருத்துப்புரட் டின்விளைச்சல் பெருகு தற்கு,
வலஞ்சேர்க்கும்; மனநிலத்திற் காக்க மாகும்!
வாட்படையும் கேடகமும் போல்ந மக்கு;
உலவுதென்றல் போல்குளிரும்; மின்னல் பாய்ச்சி
உள்ளுருக்கும் எதிர்பாரா முத்தம் தந்து;
குலவிமகிழ் பாஅழகின் சிரிப்பில் தோய்ந்தால்
''கூட்டுறவு நித்திரையும்'' கசந்து போகும்!

வியர்வைவிதை யாலுலகம் செழித்த போதும்,
வேலைசெய் துடலந்தான் நொந்த போதும்,
வயிற்றெரியும் பசிக்குணவு கிட்டா தாராய்-
வறுமையிலே உழல்கின்றார் உழைக்கும் மாந்தர்!
அயலாரின் உழைப்பினிலே வாழ்வா ரெல்லாம்
ஆனந்த பவனத்தில் திளைக்கின் றார்கள்;
சுயநலத்தைத் தகர்த்தெறிய வாளைத் தூக்கச்
சொன்னவனே கனகசுப்பு ரத்தி னந்தான்!

எச்சிலுக்கு வெண்பாக்கள்; இரவு நேரத்
திராணிகளின் மேடுபள்ள விளக்கச் செய்யுள்;
உச்சமான நேரத்தில் கட்டில் செய்த
ஒலிநுணுக்கச் சிந்தென்று பாடிப் பாடித்
துச்சாதனப் பண்டிதர்கள் கவிதைத் தாயை
துகிலுரிந்த நேரத்தில், இவன்மட் டுந்தான்
எச்சரிக்கை யோடுபுதுப் புடவை தந்தான்!
இருட்டுக்குள் இருந்தவளை வெளிக்கொ ணர்ந்தான்!

பதிவிரதைத் தனம்பாடி, வீட்டுக் கூண்டுப்
பறவைகளாய்ப் பெண்ணினத்தை நடத்தி வந்த,
அதிவீர ஆணினத்தைக் கவிதை வீச்சால்,
அறிவுநலம் பெருகுதற்கு அடித்துச் சொன்னான்!
மதிவெளிச்சம் பெறப்பெண்கள் படிக்க வேண்டும்
மகளிருந்தன் மானமுடன் வாழ வேண்டும்;
புதியதொரு விடியல்வர வேண்டு மென்றே
பூபாளம் பாடியவன் இவன்தான் சொன்னேன்!

பாரதியின் கவிதைகளில் புதுமை உண்டு;
பலசந்தம் திருப்புகழில் சிறப்பா யுண்டு;
ஈரமிகும் இராமலிங்கர் அருட்பா விற்குள்
இரக்கமுண்டு செந்தேனின் இனிப்பு முண்டு;
ஈரோட்டுப் பெரியாரின் கருத்தைக் கொண்ட
இனியதமிழ்ப் பாவேந்தர் பாக்க ளுக்குள்,
ஊரதிகம் எதிர்பார்க்கும் புரட்சி யுண்டு;
உணர்ந்துகொண்டால் பிரச்சினைக்குத் தீர்வு முண்டு!

குறிப்பு : பாவேந்தர் நூற்றாண்டு விழாவில், தமிழக அரசின் பரிசு பெற்று முதலிடம் பெற்ற கவிதை.



# பெரியார் என்னும் பேரொளி

தாடித் தலைவனே தமிழ்த்திரு மங்கையின்
நாடியோட்டத்தை நாடி யறிந்தவனே!
வீதி விளக்குகள் விடப்புகை உமிழ்ந்ததால்
ஆதிநாள் தொட்டே அந்தகர் நாங்கள்.
நிறநோய் படர்ந்து சாதிச் சோகையில்
மரணப் படுக்கையில் விழுந்து கிடந்தோம்;

புத்தக அட்சய பாத்திரத் திருந்து
புத்தமுதம் வராமல் புழுக்களே பிறந்தன;
சுவாசப்பை சுருங்கி விரிந்த பொழுது,
சுகத்தைக் கெடுக்கும் சோம்பல் கருத்துகள்
மனத்தையே மாளிகை யாக்கிக் கொண்டன.
சினந்தெழு பேரொளி தந்தைநீ விதைத்த
அக்கினி யாவியை அழியத் தொடங்கின.
தக்கநல் திருப்பமே தந்தீர் ஐயா!

வியர்வை விதைதரும் வெள்ளிப் பணத்தை
அயராது சுரண்டும் உயர்சாதி வர்க்கம்,
சூத்திரத் தளையால் கொத்தடிமை யாக்கிட
சாத்திர கோத்திரச் சடங்குகள் காட்டி-
தீண்டாமை முலநோய் வளர்த்து வந்தது;
ஆண்டவன் பெயரால் மதம்பிடித் தலைந்தது.

வண்டிவைத் தேற்றிடும் அளவிற் சாதிகள்
குண்டு குண்டாய்க் கொலுவீற் றிருந்தன;
குருதிச் சிவப்பில் ஒற்றுமை காண்பவர்
பறையன் பள்ளன் வலைஞன் எனப்பல
விகார வேற்றுமை விளைத்து வைத்தனர்;
அஃறிணைக் களித்த உரிமைகள் கூட
உயர்திணை மக்கட் கொளிக்கப் பட்டது.
பயனிலா உவர்நில மானதச் சமுகம்;

தாழ்ந்த மக்களின் செந்நீர் எண்ணெயில்
ஆழ்கடல் உலகம் சுழன்றுகொண் டிருப்பினும்
கல்விக் கன்னியைக் கலக்கும் உரிமையும்
நல்லாலயத் திற்குள் செல்லும் உரிமையும்
மேல்சாதிக் காரரால் பறிக்கப் பட்டன;
நூலறி மேதையே! உனது வருகைதான்
தடையுத் தரவை உடைத்தெ றிந்தது!
நடைமுறைச் சிக்கலை நாளியில் தீர்த்தது.

நீயளித்த அதிர்ச்சி வைத்தி யத்தால்
மூடத் தனத்தின் மூலலே கழன்றது!
உன்வினா வொளியில் காய்ந்த மக்கள்
தன்மானச் சூட்டுடன் தலைநிமிர்ந் தெழுந்தனர்.
கூட்டுப் புழுக்களாய்க் குறுகிய மக்கள்,
தோட்டாவைத் தூக்கும் தோள்வலி பெற்றனர்!
கந்தகச் சொற்களால் கண்களைத் திறந்து
சிந்திக்க வைத்தநீ ஈரோட்டுச் சிங்கம்;
பச்சையம் இல்லா மனிதத் தாவரங்கள்
பச்சையம் அடையநீ பரிதியாய் வந்தாய்!

படுக்கை விதைப்பிற்கும் குழந்தைப் பயிர்க்கும்
எடுத்த அவதார நாற்றங் காலெனப்
பெண்களைச் சமூகம் எண்ணி யிருந்தது.
கண்ணைக் கண்ணே கல்லாய் நினைத்தது.

அணியினம், ஆடை, அழகிய புனைந்துரைச்
சலுகையாற் பெண்கள் நிரந்தர அடிமையாய்
சமூகக் கல்வெட்டில் சாசனம் ஆனார்கள்!
குமுத நங்கையர் கூண்டுக்கிளி யாயினர்;
வழக்காடு திறத்தால், வைக்கம் வீரனே!
உழைத்துப் போராடி, உரிமை வழங்கினாய்;
அகலியைக் கல்லாய்ச் சமைந்தபெண் கல்வியை
அறிவுப் பாதத்தால் உயிர்க்க வைத்தாய்.
பகுத்தறி வென்னும் பார்வைக்குப் பிறகே
மகளிர் மனத்தின் அச்சக் கடிவாளம்
அகற்றப் பட்டது அறிவொளி பிறந்தது.
தகத்த காய கதிரே, தந்தையே
விதவை மறுமணம்- மணவிலக் குரிமை
முதலிய நன்மையைப் பெண்குலம் பெற்றது.

போராட்ட வியூக முறைகளைக் கொண்டு
நேரியர்க் கெல்லாம் சொத்துரிமை யுடனே
பதவியும் வழங்கிய புரட்சிக் கதிருனை
மதவெறி மாக்கள் கல்லால் அடித்தனர்!
அவர்எறி கற்களை, வெற்றிக் கோட்டையின்
சுவராய்ப் படைத்தது கட்டி முடித்தாய்.

அடிமைத் தனத்தின் ஆணிவேர்ப் பக்கம்,
தடி-கை வைத்துள தலைவ!நின் ரேடியப்
பார்வை பட்டதால் பழம்பெரும் போகிகள்
கூர்மிகு சொற்களால் குத்தத் தொடங்கினர்...

குத்தூசி கொண்டுன் கறுப்புச் சட்டையைக்
சிக்கன மாகவே தைத்துக் கொண்டாய்!
அதிகாரக் கொசுக்கள் சட்ட நச்சுடன்
சுதிகூட்டிக் கடித்துனைச் சுற்றியே திரிந்தன;

வெண்தாடி வலைநீ அசைத்த பொழுது
கண்மூடிக் கொசுக்கள் சிக்கி அழிந்தன;
வெற்றிக் கோள்களுனை வலமாய் வந்தன!
ஒற்றையடிப் பாதையில் உலகைநீ இழுத்தாய்.

நாட்டெரி பசியை அணைக்கும் வர்க்கம்
நாட்டுக் கப்பலை வியர்வை நதியிலே
நகர்த்திப் பெருமைகள் கூட்டிய பொழுதினும்-
வறுமைக் கல்லறையில் வாழ்ந்துகொண் டுள்ளது.
செழிப்பு மங்கையின் சிங்காரப் புன்னகை-
சுரண்டிக் கொழுப்பவர் அரண்மனை யுள்ளதால்
தொழிலாளர் கிளர்ச்சியைத் தொடங்கி நடத்திய
சகாப்தத் தலைவனே நீயொரு சரித்திரம்!

ஆதிக்க இந்தியின் ஆட்சியைத் தடுத்தாய்;
சாதனை ஒளிநீ கலப்பு மணத்திற்கு,
கருத்து விதைதூவி கதிர்வரை வளர்த்தாய்!
திருத்த மேதையுன் கருத்திற் கேங்கியோ
கணக்கிலா முறையில் சிறையுனை அடைத்தது?
தனக்கென வாழாப் பெரியார் பேரொளி
தெற்குவான் வெளியில் உதித்து வந்ததால்,
பொற்றாமரைப் பூக்களும் உயிர்களும் விழித்தன;
எழுத்துத் திருத்தமும் இயக்கக் கொள்கை
அழுத்தமும்- பிறந்ததப் பேரொளி வாழ்கவென்!

# சரித்திரத் தலைவன்

சந்தன மரத்தை வெட்டி,
கரியாக்கிப் பார்க்க லாமோ?'
சந்தத வீணை தன்னை,
அடுப்பிலே எரிக்க லாமோ?
சுந்தர ராஜீவ் உன்னைச்
சோரர்கள் சிதைக்க லாமோ?
இந்திய மக்கள் கண்கள்
எல்லாமே கரைந்த தையா...!

எழுதியே பார்த்தி ருக்கும்
எழில்வடி வுன்னைக் கொல்ல
அழுகிய உள்ளங் கூட
அரற்றுமே... செய்தி டாதே...?
கழுகுகள் திட்டமிட்டுக்
கருமத்தைச் செய்த தாலே,
விழுமிய தலைவன் இன்றி
விதவைபோல் ஆனோம் ஐயா!

ஆயிரம் ஆண்டு கட்டும்
அப்பாலே நாட்டைத் தூக்க,
ஆயிரம் சிந்தித் தாய்நீ.
அசலையே சிதைத்து விட்டால்,
பாயிர வட்டி யேது?
பழிகாரர் சிதைத்தா ரம்மா!
கோயிலை இடித்து விட்டுக்
குளத்தையும் தூர்த்தா ரம்மா!

தென்னாட்டின் அறத்தைக் கொன்றார்
திருக்குறள் நெறியைக் கொன்றார்!
மன்னிய நேயம் கொன்றார்
மானுடப் பண்பைக் கொன்றார்!
தன்னையே தின்று கொண்டார்:
தலையில்மண் போட்டுக் கொண்டார்;
உன்னையே கொன்ற தாலே,
உலகத்தாய் தவிக்கின் றாளே...!

நம்பிக்கைக் குகந்த மண்மேல்
நடந்தாய்நீ குழந்தை யைப்போல்;
தும்பிக்கை யானை யார்க்குத்
தோண்டிய குழிபோ லிங்கே
வம்பர்கள் பெருமத் தூரில்
வழிவகை செய்த தாலே,
அம்மியில் அரைக்கப் பட்ட
அகமுடன் துடிக்கின் றோமே...!

சிங்கமே! தலைநி மிர்த்திச்
செம்மாந்து பேசு வாயே...
எங்குனைக் காண்போ மையா?
இப்பழிக் கென்ன செய்வோம்?
தங்கத்தேர் எரிந்த தாலே
தரித்திரர் ஆகி விட்டோம்!
இங்குனை இழந்த போதே
இருள்கப்பிக் கொண்ட தையா...!

தாயினைக் கொன்ற பாபம்,
தருமனை அழித்த தோஷம்,
வாயிலை அடைத்த மோசம்,
வந்தாரைக் காவாச் சோகம்
யாவுமிந் நாட்டிற் காகும்;
யாரிதைத் தடுக்க வல்லார்?
காயினில் எட்டிக் காய்போல்
கவின்தேயம் ஆகிற் றந்தோ...!

வளைகுடாப் போரைப் பார்த்து
வார்த்தையால் கண்டித் தாய்நீ;
களைகளை யெடுப்ப தற்குக்
கங்கணம் கட்டிக் கொண்டாய்;
விளைபயிர் முளைக்கும் முன்பே
வெறியர்கள் சிதைத்திட் டாரே!
இளைஞனே, நம்பிக் கையே,
எப்படிச் சிதைத்தார் ஐயா..!

இந்திராக் காந்தி தந்த
இமயமே! வெடிகுண் டுக்குச்
சந்தன உடம்பைத் தந்த
சரித்திரத் தலைவா! உன்னை
எந்தநாள் காண்போம் ஐயா?
எப்படி மறந்தி ருப்போம்!
சிந்திடும் கண்ணீர் முத்தைத்
துடைத்திட வரமாட் டாயோ?



# தமிழகத்துப் பெண் முதல்வர்

பரிதிவிளக் கெழுந்துவிட்டால் வான வீட்டில்
பலமீன்கள் ஒளியிழந்து வீழ்வ தைப்போல்,
உரியதொரு நேரத்தே உதய மாக
ஒளியிழந்து பலபேர்கள் வீழ்ந்திட் டார்கள்;
அரியாசனத் திருந்துமக்கள் குறையைக் கேட்கும்
அம்மைஜெய லலிதாவே, நீங்கள் இன்று
சரித்திரத்தில் தென்னாட்டு ஜான்சி ராணி!
சால்புமணி மேகலைபோல் புதுத்தி ருப்பம்!

காலதேவன் அருள்பெற்று வந்த தாலே
கல்லடிக்கும் சொல்லடிக்கும் பயந்தி டாமல்-
ஆலகால நச்சாற்றில் நீச்சல் போட்டு,
அமைச்சரவை அமைத்திங்கு நிமிர்ந்திட் டீர்கள்;
'மூலபலம் மக்கள்நலம்!'— என்று ணர்ந்த
முதல்தலைவி மிகப்பேசா தமைந்த செல்வி;
காலகால மாய்வந்த வழக்கை மாற்றிக்
காவிரிக்கும் அணிசேர்க்க வாய்த்திட் டீர்கள்!

எச்சில்நீர் விழுங்குவதால் வயிற்றுக் குள்ளே
எரியும்தீ அணைவதில்லை; வெறும்பேச் சாலே,
உச்சானிக் கிளையிலுள்ள மாங்காய் கூட
உதிர்ந்துவிழப் போவதில்லை; செயல்தான் தேவை.
நிச்சயித்த செயலாளர் உங்க ளுக்கோ,
நிலைத்துநிற்கும் வழிதெரியும் தொடர்ந்தி டுங்கள்!
குச்சுவீடும் மச்சாகச் செயலாற் றுங்கள்;
குபேரர்களை எம்ஜிஆராய் வடிவாக் குங்கள்!

திருவருளைச் சிந்தைசெய்யா நாடு தேயும்!
தீயகுடிப் பழக்கத்தால் அறமும் மாயும்!
பொருள்மிகவாய்க் குவிந்தாலும் கடத்த லாலே
பொல்லாத தீங்கெல்லாம் வருமென் றிந்த
இருள்விலக நடவடிக்கை எடுக்கின் றீர்கள்!
எஃகுமனத் திட்பத்தை என்ன சொல்வேன்?
அருட்செல்வ மழைபொழிய ஆல யத்திற்
காரளித்தார் பெருநிதியம் உங்க ளைப்போல்?

நெருப்பாறு, மயிர்ப்பாலம் என்ப தெல்லாம்
நீங்கள்நடை போட்டுவந்த பாதை தானோ?
திருப்பங்கள் எத்தனையோ...? தாண்டித் தாண்டித்
தேயத்தைத் தன்பக்கத் திழுத்துக் கொள்ள
குருவாக வாய்த்தவர்யார்? எம்.ஜி.யாரோ?
கோட்டைக்கு வந்திதிருக்கும் உங்கள் தொண்டு
வருத்தமுறும் பெண்களுக்கு மருந்தா கட்டும்.
வஸந்தங்கள் இனிவரட்டும் மக்க ளுக்கு!

உண்பதற்கும் உடுத்துதற்கும் வந்தா ருண்டு;
ஊர்சுற்றிப் பார்ப்பதற்கும்- மகிழ்ச்சி யான
பண்கேட்டு, கூத்தாட்டுப் பார்ப்ப தற்கும்
பலபேர்கள் பதவிக்கு வருவ துண்டு;
கண்கெட்ட பிறகவர்கள் சூரி யர்க்குக்
காலையிலே நமஸ்காரம் செய்வ துண்டு;
பெண்குலத்து நாயகியே! உங்க ளைப்போல்
பேரிடரைத் தவிர்ப்பதற்கு வந்தா ருண்டோ?

பாரதியார் புரட்சிப்பெண் பற்றிச் சொன்னார்
பாவேந்தர் பெண்குலத்தை நிமிரச் சொன்னார்;
ஊரறிய, உலகறியப் பெண்கள் இன்று
உயர்நிலைக்கு வருவதைநாம் பார்த்த போதும்,
தீரமிகும் பெண்முதல்வர் என்று மக்கள்
தேர்ந்தெடுத்து அனுப்பியதே உங்க ளைத்தான்!
வீரவாளை யேந்திநின்ற மங்கம் மாபோல்
விவேகமுடன் செயலாற்றி வெல்க நாட்டில்!

நேற்றிருந்தார் இன்றைக்கு மாய்ந்தா ரென்ற
நிலையாமை நிலைத்திருக்கும் வைய வாழ்வில்,
ஆற்றல்செல் வாக்கெல்லாம் நிலைப்ப தில்லை;
அதிகாரம் நெடுங்காலம் வாழ்வ தில்லை;
ஊற்றுநீராய்ப் பிறர்க்குதவி வாழ்வ தொன்றே
உயர்ந்தவர்கள் செல்நெறியாம். ஆகை யாலே
ஆற்றல்மிகு தமிழகமாய்ப் புதுக்கி டுங்கள்
அருள்ஞானம் ஒளிவீச வழிசெய் யுங்கள்!



# காந்தியை மறக்கலாமோ?



இந்திய நாட்டிற் காக
இடர்பல அடைந்த காந்தி,
வந்தாரை ஓட வைத்தார்;
வரலாற்றில் நிலைத்து நின்றார்;
சிந்திய குருதிக் கெல்லாம்
சிறப்பையே தேடித் தந்தார்;
முந்தையோர் பிழைதி ருத்தி
முன்னேற்ற மாக்கி வென்றார்!

காந்தியென் றுரைக்கும் போது,
கருணைக்கோர் வடிவம் தோன்றும்!
காந்தியை நினைக்கும் போதே
கலங்காத வலிமை சேரும்;
காந்தியே எளிமை சாந்தம்
கடவுள்நம் பிக்கை யாகும்!
காந்தியை மறக்க லாமோ?
கண்மூடித் தனந்தான் ஏனோ?

வள்ளுவர் குறளுக் காக
வந்தவோர் இலக்கி யத்தை,
உள்ளத்தால் பொய்யில் லாமல்
உயர்ந்தவோர் மேதை தன்னை
வெள்ளையர் ஆட்சி வேரை
வீழ்த்திய அண்ண லாரை—
உள்ளத்தால் துதித்தா லன்றோ
ஒற்றுமை ஓங்கும் தேங்கும்!

கவிஞர் கபிலவாணன்

# பூக்களின் புதிய பிரகடனம்

ஆண்டாண்டாய்க் கொத்தடிமைக் கூட்டம் ஆனோம்
அறியாமை யால்பிள்ளைப் பூச்சி யானோம்;
வேண்டாத பழக்கத்தால் கிளிகள் ஆனோம்;
வீட்டுக்குள் ளேகிடக்கும் கைதி யானோம்.
பாண்டவரின் பத்தினிக்கும், நளாயி னிக்கும்
பாராண்ட சீராமன் திருத்தே விக்கும்-
வேண்டாத துன்பங்கள் மலிந்த தற்கு
விபரீத ஆண்களன்றோ பொறுப்பா ளார்கள்?

மலரென்றும் மானென்றும் கிளிகள் என்றும்
மனைவிளக்கு, நிலாவென்றும் போற்றக் கேட்டு,
பலமிழந்து போய்விட்டோம் அந்நாள் தொட்டு
பலியாகி வருகின்றோம் நீதி யின்றி;
கலகலெனச் சிரித்தாலும் ஞானத் தோடு
கம்பீர மாய்நடந்து திரிந்திட் டாலும்,
உலகிலுள்ள கண்கொத்திப் பாம்புக் கண்கள்
உறுத்துறுத்துப் பார்ப்பதென்ன? கேலி என்ன?

அச்சம்மடம் நாண்பயிர்ப்பு தேவை யென்றார்;
அடக்கந்தான் பெண்களுக்குக் கவசம் என்றார்;
அச்சயபாத் திரமாகப் பெண்ணைச் சொன்னார்;
ஆதிசக்தி அம்சமென்றும் கதைய ளந்தார்!
பிச்சைப்பாத் திரமாகி, நாவ சைத்துப்
பேசுதற்கும் திறனின்றி ஆமை யானோம்!
மிச்சமீதி யிருப்பதனை உண்டு விட்டு
மின்சாரப் பொம்மைகளாய் வாழ லாமோ?

அரும்பாக வளர்கையிலே பெற்றோர் பேச்சுக்
கடங்கித்தான் நடக்கவேண்டும்; பூத்த பின்பு
கரும்பாக இனித்தாலும் கணவ னுக்குக்
கற்பகக்கா போற்செல்வம் அளக்க வேண்டும்!
இரும்பிளைத்தால் மனம்நோகும் இந்த நாட்டார்,
இருவிழியில் ஒருவிழியாய் விளங்கும் மாதர்
துரும்பாகிப் போனாலும் விடுவ தில்லை;
துயர்முட்டை சுமக்கின்ற கல்லோ பெண்கள்?

அடுக்களையில் நாளெல்லாம் வெந்து ழன்றோம்
அகமுடையான் ஆட்லுக்கும் இடம்கொ டுத்தோம்;
கொடுக்கில்லாத் தேளாகக் கொட்டும் மாமி
கொண்டுவந்த தென்னவெனக் குதறும் நாத்தி,
படுக்கைக்கு வருவாளா எனச்சி ரிக்கும்
பருவத்தின் இளம்விடலை— இவைகள் எல்லாம்
அடுக்கடுக்காய் எதிரில்வரும் தொல்லை யன்றோ...?
ஆண்கள்செயும் ஆதிக்கம் ஒய்வ தென்றோ?

ஆண்களுக்குப் பெண்களென்ன போதை யூட்டி
அந்தரத்தில் மிதக்கவைக்கும் அபினா, கள்ளா...?
வீண்கதைக்கும் கேலிக்கும் வசைமொ ழிக்கும்
விளைநிலமா, யந்திரமா பெண்கள் கூட்டம்?
ஆண்களெல்லாம் பெண்வயிற்றில் இருந்து தானே
அண்டத்திற் கோடிவந்து வாழ்கின் றரர்கள்;
மாண்பிருந்தால் பெண்ணினத்தை வஞ்சிப் பாரா?
மரியாதை யாய்ச்சமுகம் திருந்த வேண்டும்!

பணியகத்தும் ஆடவர்க்குச் சபல புத்தி!
பழங்கள்ளைக் குடித்தமந்தி போல்ந டிப்பு;
துணிநழுவி விட்டாலும் துளைக்கும் பார்வை;
தூக்கத்தும் ஆண்களுக்குப் பலர்நி னைப்பு;
பிணிநீங்கி நலமடைவ தெப்போ திந்தப்
பெண்களுக்கு விடுதலைதான் கிடைப்ப தென்றோ?
அணிமணிகள் பெண்களுக்கு, ஆணா திக்கம்
அளித்தஅடி மைச்சின்னம் பொறுக்க மாட்டோம்!

நகங்களெல்லாம் கத்திகளாய் மாறும்; எங்கள்
நாவமுதும் கொல்லுகின்ற நஞ்சாய் ஊறும்;
முகமதியும் நெருப்புமிழும்; வளைக்க ரங்கள்
முட்டியினைப் பேர்த்தெடுக்கும் கருவி யாகும்;
அகப்பொருள்சொல் இலக்கியங்கள் குறைந்து போகும்
அர்த்தமிலாச் சொல்லாகும் வாழ்க்கைப் பாதை!
இகசுகங்கள் இல்லாத பாலை யாகும்;
இல்லறத்தில் பிழைநேர்ந்தால் எதுதான் வாழும்?

பெண்கொலையை அஞ்சாமல் செய்தான் நன்னன்!
பெருந்தீங்கு விளைவித்தான் செழிய மன்னன்;
கண்ணொத்த சந்திரமதி தன்னை விற்றுக்
கடன்தீர்த்தான் சரித்திரத்தை வென்ற வள்ளல்!
பண்பட்ட நிலவைநளன் காட்டில் விட்டான்;
பாண்டுமகன் தன்துணையைப் பணயம் வைத்தான்;
விண்ணிருந்து இரங்கிவந்த ராமன், தீயில்
விழுந்தெழுந்து வருமாறு கூச்ச லிட்டான்!



ஆடவரைத் தண்டிக்க
மார்கம் இல்லை
ஆயிரந்தான் இருந்தாலும்
குற்றம் இல்லை;
கூடலுக்கும் வாடலுக்கும்
மட்டுந் தானா
குடஞ்சுமக்கும் பூங்காக்கள்
தேவை யிங்கே?
பூடகமாய்ப் பேசவில்லை;
நீதி கேட்டுப்
போர்க்கொடியை உயர்த்துகிறோம்
வெல்வோம் நாங்கள்;
ஆடல்களை நிறுத்துங்கள்;
வர்க்க பேதம்
அமைதியினை விழுங்கிவிடும்;
திருந்திப் போங்கள்.

# அப்பா வாங்கிய தலைவரடி!

மங்கள வாத்தியம் முழங்குதடி— அதோ
மாப்பிள்ளை ஊர்வலம் பாருங்கடி!
தங்க ரதமான அக்காளுக்கு— அப்பா
தேடியே வாங்கிய தலைவரடி!

பட்டப் படிப்புடன் வேலையுண்டு— நல்ல
பண்புடன் வாழ்ந்திடும் நெஞ்சமுண்டு!
கட்டுடற் பாண்டிய ராசனைப்போல்— பார்க்கக்
கம்பீர மானவர் உண்மையடி!

மாத வருமானம் மெத்தவுண்டு— தாயை-
மனத்தால் வணங்கிடும் சித்தமுண்டு!
ஆதர வானவர் மற்றவர்க்கு— நாட்டின்
அரசியல் தெரிந்தவர் சீரரடி!

காவலர் போலவே பேசிடுவார்— அவர்
தீயவை செய்யவும் கூசிடுவார்!
யாவரும் மகிழ்ந்திடச் செயல்புரிவார்— கொடுத்த
யானை விலையை யார்அறிவார்...

ஐம்பது சவரன் பொன்னகைகள்— மேலும்
ஐம்பது கையிலே, பாத்திரங்கள்
ஐந்தாறு வகையிலே ஆடைவகை— நல்ல
அழகிய வாகனம் சலவைப்பொறி!

யந்திர ஆடுகல், தொலைக்காட்சி— பெரிய
வானொலிப் பெட்டியும் சேர்த்தளித்தோம்
தந்தச் சிலையவள் கொண்டுவரும்— மாதச்
சம்பள முமிவர் பையினுக்கே!

கலைபல கற்ற மாப்பிள்ளையின்— அறிவுக்
கலைமிகும் முகத்தைப் பாருங்கடி!
விலைதான் கொஞ்சம் அதிகமடி— இதனை
விட்டால் பெண்களுக் கென்னவிதி?

மங்கள வாத்தியம் முழங்குதடி— அதோ
மாப்பிள்ளை ஊர்வலம் பாருங்கடி!
தந்த ரதமான அக்காளுக்கு— அப்பா
தேடியே வாங்கிய தலைவரடி!



# பொன்மகள் நான்...!

குவளை மலர்விழிகள்— சிவப்புக்
கொவ்வைக் கனிஇதழ்கள்
கவலையை மாற்றுகின்ற— அன்பு
கனிந்திடும் அழகுமுகம்!

அமுதம் கலந்திருக்கும்— சின்ன
அடிதொடை இடைநுணுக்கம்
குமுத இதழுக்கஞ்சும்— பழக்
குதிகாலைக் கொண்டவள் நான்!

வார்த்தையின் வார்ப்படமாய்— இங்கு
வந்து நடைபயில்வேன்!
சீர்தளை அறிந்தவர்கள்— பெற்ற
சிந்தனைப் பொன்மகள்நான்

வரிவிழி வாயிலாக— சான்றோர்
வந்தார் மனங்கவர்ந்தார்;
உரிமையாய் மலர்கொடுத்தார்!— பாவை
உள்ளம் பறிகொடுத்தேன்...

கற்பியல் வாழ்க்கையிலே— இன்பக்
கலக்கம் நானடைந்து
பொற்புறு புகழுக்குநான்— பெற்ற
பொன்னான அன்னையாவேன்?

# ஏனம்மா குனிகின்றாய் நீ!

பொன்னகைக் கேங்கா தேநீ!
புத்தாடைக் கலைந்தி டாதே!
என்னதான் துயர்வந் தாலும்
இதயத்தை விட்டி டாதே!
மென்மையாய்ப் பேசும் போதும்
மேதையாய் விளங்கு வாய்நீ;
துன்பத்தை விலைக்கு வாங்கித்
துவண்டுபோய் அழுதி டாதே!

கல்வியே உனக்குக் கண்கள்.
கலைசில கற்றுக் கொள்வாய்!
பொல்லாதார் தாக்க வந்தால்.
புத்தியைக் கருவி யாக்கு;
மெல்லினப் பெண்ணே உன்னால்
மிகுமானத் தோடு வாழ—
எல்லாமே அமைந்தி ருக்க
ஏனம்மா குனிகின் றாய்நீ?

பெண்ணாகப் பிறந்த தால்நீ
பேதையாய் மடிய லாமோ?
கண்களில் ஒளியை ஏற்றுன்
கால்களால் நடந்து செல்வாய்!
விண்ணிலே மிதப்ப தாக
வீண்கோட்டை கட்ட வேண்டாம்!
திண்ணிய நெஞ்சம் மட்டும்
தேவையுன் வெற்றிக் கெல்லாம்!

பேச்சினைக் குறைத்துக் கொண்டால்,
பெண்மையின் சிறப்பை ஓர்ந்தால்,
ஆச்சர்யப் படத்த குந்த
அளவிற்கே உயர்ந்து போவாய்!
பூச்சியாய் நினைக்கு மாறு
பொழுதைநீ கழித்தி டாதே!
தீச்சுடர் நீயென் றெண்ண,
திட்பத்தை வளர்த்துக் கொள்வாய்!

வாழ்க்கையின் திறவு கோலும்
வஸந்தமும் உன்றன் கையில்!
பாழ்பட்ட சமூகம் உன்னைப்
பாவையாய் நினைத்துப் பார்க்கும்;
தாழ்வுறா துயர்வ தற்குத்
தடைகளைத் தகர்க்க வேண்டும்!
ஆழ்கடல் தந்த முத்தே
அளவையால் உலகை வெல்வாய்!



# உடைந்த கப்பல் அதிகாரி

கண்ணீரே கங்கை யாகிக்
கவலையால் பெருக்கெ டுக்க,
பெண்மகள் தேய்ந்து போனேன்
பிறைநிலாக் குறைபோ லானேன்!
வண்ணப்பூச் சூடு தற்கும்
வாய்விட்டுச் சிரிப்ப தற்கும்,
எண்ணமே இல்லா மல்நான்
எரிதீயில் புழுவாய் ஆனேன்!

தலையிலே சுமந்தி ருந்தார்
தரையில்விட் டுருட்ட லாமோ?
அலையிலே உடைந்த கப்பல்
அதிகாரி தனைப்போல் நானும்
குலைந்துபோய் வீட்டுக் குள்ளே
குமைகிறேன். சமூகத் தாரோ...
மலையையென் மேலெ றிந்து
மனநலம் கெடுக்கின் றார்கள்!

வெளியில்நான் வந்தால் போதும்
வினைத்தொகை என்கின் றார்கள்;
புளித்தவர்— என்னைப் பார்த்தால்,
போஞ்செயல் நிறையா தென்றும்
உளிகொண்டென் மனத்தைத் தாக்கி
உழல்கிறார்; பேசு கின்றார்.
நெளிகிறார் என்னைக் கண்டு
நிலையைநாம் வெல்வ தெங்ஙன்?

குழந்தையைத் தொடுதல் கூடக்
குற்றமாம்; கொள்ளிப் பேயாம்!
வழக்கமாம்; மணவீட் டிற்கு
வருவதும் குறையாம்- கேடாம்.
'இழந்தவள்' 'பீடை' என்றும்
எரிக்கின்றார் சொற்க ளாலே;
வழக்காடிச் சிலபேர் என்னை
வளைக்கவும் நினைக்கின் றார்கள்!

கொக்கைப்போல் தவறா மல்நான்
கொழுநனைத் தின்றிட் டேனாம்!
செக்கினை இழுக்கும் மாடாம்;
செய்தவம் செய்யாப் பெண்ணாம்;
எக்காலும் பார்க்கக் கூடா
இழிவாம்நான்— சொல்லித் தூற்றி
அக்கினித் திராவ கத்தால்
அபிஷேகம் செய்கின் றார்கள்!

வேலியொன் றிருக்கும் போதே
வெள்ளாடு துள்ளிப் பாயும்;
தாலியை இழந்த பின்னர்
தவிபயிர்க் கேது காப்பு?
காலிகள் கைக்குத் தப்பிக்
காலத்தைக் கடக்க வேண்டும்;
ஆலிலைச் சருகாய்க் காற்றில்
அகப்பட்டேன் கரைசேர் வேனோ?

# மணமகன் உறுதிமொழி

கரும்பினைச் சுவைப்ப தற்குக்
கட்டாயக் கூலி கேட்டால்,
விரும்பியே கொடுப்பா ருண்டோ?
விலைப்பொருள் கொடுத்து வாழ்வை
இருளாக்கிக் கொள்ள மாட்டேன்.
இதயத்தை உணரார் வந்தால்,
திருமணம் செய்து கொள்ளேன்
தெரிந்துகொள் அம்மா என்னை...!

குளிர்காவில் உலவு தற்குக்
கொடைபல கேட்டு வந்தால்,
தெளிவேது வருவா ருக்கு?
தேவையா அடிமை வாழ்வு?
குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்
கொள்வது முறையா கும்மோ?
நளினத்தை உணரார் வந்தால்
நற்றாயே மணக்க மாட்டேன்..!

சந்தனம் பூசிக் கொள்ள-
சர்க்கரைப் பொங்கல் உண்ண
வந்தவர் வரிசை கேட்டு
வதைத்திட நினைத்தா லம்மா
சிந்தையை இழக்க லாமோ..?
செம்பொன்னை அளக்க லாமோ?
மந்திரி யானா லும்நான்,
மணந்திட ஒப்ப மாட்டேன்!

வாழ்க்கைத்தேர் வடம்பிடிக்க
வருவாரைக் கூலி கேட்டல்
கீழ்த்தர மானோர் போக்காம்!
கேட்டால்ஏன் கொடுக்க வேண்டும்?
சீழ்மனம் படைத்தோ ரென்னைச்
சிறப்பிக்கப் போவ தில்லை...
வாழ்வியல் நெறியைத் தேரார்
வந்தால்நான் மணக்க மாட்டேன்.

அன்பெனும் ஊற்றில் லாதார்,
அறநூலிற் பயிற்சி யில்லார்,
பெண்மையின் செவ்வி தேரார்
பெருஞ்செல்வர் என்ற போதும்-
என்னையே மணக்க வந்தால்
இடமில்லை என்றன் நெஞ்சில்;
என்தமிழ் நாட்டைப் பற்றி
எண்ணாரை மணக்க மாட்டேன்.



# கோணல் மனக் குறிப்பு

விளம்பரங்கள் அச்சடிக்கும் வணிகர்கும்பலே
வேதனையில் பெண்களிதை வெளியிடுகிறோம்!
களங்கமென எண்ணாமலே பெண்க ளுடம்பைக்
காட்டுகிற பாவனையில் தீட்ட லேனையா...?

உறித்தகோழி கடைகளிலே தொங்குதல் போல
உடைகுறைத்துப் பெண்கள்படம் போட லாகுமா?
வெறித்துநோக்கும் ஆடவரின் விகாரப் பேச்சையே
வேதனையாய்க் கேட்டுநாங்கள் துயரப் படுகிறோம்!

அறிவிலாத பிண்டங்களாய்ச் சித்திரிக்கிறீர்
அலங்காரப் பொம்மைகளாய் எழுதிப் பார்க்கிறீர்;
நெறிபுரண்டு அலைவதாகக் கதையும் சொல்கிறீர்
நீண்டதொண்டு செய்பவரை இழிவு செய்கிறீர்...

பெண்களென்றால் கிள்ளுக்கீரை யாகிவிட்டதோ?
பேசிப்பேசி பெண்களையே பழிக்க லாகுமோ?
உண்மையினை நீங்கள்எல்லாம் எண்ணிப் பாருங்கள்
ஒருகண்ணைக் கீறுவது தர்மம் ஆகுமா?

கணவனைப்பெண் அடிப்பதாகத் துணுக்கெழுதினால்
காசுவரும்; படிப்பவர்க்கு உண்மை தெரியுமா?
குணங்களையே மறைத்துவிட்டுக் கோணல் மாணலாய்க்
குறிப்பிட்டுக் காட்டுவதால் என்ன லாபமோ...?

# முதிர்கன்னியின் முன்னுரை

நிலவுக்குப் பின்பிறந்த தங்கை யாக
நிறத்தில்நான் தங்கநிறம்; பருவச் சிட்டு;
உலவுகிற தென்றலுக்கோர் வடிவம் போலே
ஒய்யார நடைநடந்து செல்லும் பாவை;
புலவர்களோ எனைக்கண்டால் சீதை யென்று
புதுராம கதையெழுத முயலு வார்கள்!
பலகலைசேர் பாரதிபோல் நளினத் தோடு,
பணியகத்திற் கேகுவேன்நான் ஒவ்வோர் நாளும்.

வண்ணமலர்க் கண்காட்சி என்று ரைக்கும்
வயிரத்தே ராயிருந்தும் மாப்பிள் ளைகள்,
பெண்பார்க்கும் படலமிங்கே ஓய வில்லை!
பிள்ளையார்க் களப்பதற்கும் கையில் இல்லை;
வண்ணவண்ணக் கனவுகளை விழியில் வைத்தே
வரலாற்றுக் கல்லறையாய் ஆகிப் போனேன்!
பண்ணெழுப்பும் வயலினொன்று இயக்க மின்றிப்
பரன்மேலே கிடப்பதைப்போல் கிடக்கின் றேன்நான்!

வாங்கிவரும் சம்பளத்தால் வீட்டில் உள்ள
வயிறெல்லாம் குளிரவேண்டும்; தம்பி தங்கை
ஏங்காமல் வளர்வதற்குத் தேவை யான
எல்லாமும் தரவேண்டும் தடையில் லாமல்
தாங்கிக்கொண் டிருக்கின்ற விழுதைப் போல
தலைமகள்நான் குடும்பத்தில் இருப்ப தாலே,
தூங்கிக்கொண் டுள்ளார்கள் கவலை யின்றி;
தொகைகாய்க்கும் மரத்திற்கே அதிகத் தொல்லை!

திருட்டுப்பால் குடிக்கின்ற பூனை யைப்போல்
தேடுகிற விழிகளுக்குள் — முதுகண் ணுக்குள்
பொருளுணர்ந்து காலமெல்லாம் போற்றி நிற்கும்
பொன்மகனை எதிர்பார்த்து அமுங்கு கின்றேன்.
பருந்துவந்து தாக்காமல், என்றன் நெஞ்சைப்
பதுக்கிக்கொண் டுலவுகிறேன் வட்டத் திற்குள்;
திருமணத்துச் சோலைமணி மேக லைநான்;
தேர்வில்வெற் றிபெற்றாலும் பதவி யில்லை;

பரம்பரையாய் வருகின்ற நோயைப் போல
பழக்கத்தில் இருந்துவரும் வழக்கம், மாற்ற
உரமில்லை ஓய்வுபெற்ற அப்பா விற்கு!
உயர்குலத்து மரபெல்லாம் வேண்டு மென்பார்;
வரவிலாத குடும்பத்தைச் சுமப்ப தற்கு
வழிவேறு காணாத அம்மா, பட்ட
மரமாக எனைப்பார்த்துப் புழுங்கிப் போவாள்!
பழையகதை இவையெல்லாம் மறந்து போனேன்!

குழந்தைகளை நேசித்துத் தூக்கு தல்போல்,
கோப்புகளைத் தூக்கிவைத்துச் சரிபார்க் கின்றேன்.
வழவழவென் றேதேதோ பேசி டாமல்,
வங்கிமிர் வாகியாகச் சுழலு கின்றேன்!
அழகென்ன இளமையென்ன பொருளி லார்க்கு?
அத்தனையும் வழக்கொழிந்த சொல்போ லாகும்;
முழம்போட்டுப் பார்க்கின்ற சாதி பேத
முறைதானே வாழ்வுக்கோர் முட்டுக் கட்டை?



# நான் வளர்ந்த சீமை இது!

## ஏனாதிகரம்பை

எண்ணெயிலாத் தலையைப்போல் வறண்டு நிற்கும்
இச்சிற்றூர் தனிலேதான் நான்பி றந்தேன்;
வண்ணமிகு கனவுகளைச் சுமந்து கொண்டு
வயிற்றுப்பிள் ளைக்காரி யைப்போல் நாளும்
மண்மீது பற்றுவைத்துச் சுற்றி வந்தேன்;
மனக்கோட்டை பலகட்டி வானைத் தொட்டு
வண்ணப்பா வடித்ததெலாம் இவ்வூர் மண்ணில்
வாய்க்காலில் வயல்வரப்பில் தோட்டக் காட்டில்;

பகலென்றும் பாராமல் பூமிப் பெண்ணை
பனைமரத்து நிழல்களெலாம் தழுவிக் கொண்டு
மிகமயங்கித் தூங்கிக்கொண் டிருக்கு மங்கே;
மேல்புறமாய்க் குளக்கரையில் இருந்து கொண்டு,
சுகமான கற்பனையில் சிறக டித்துச்
சொக்குதமிழ்க் கவிதைபல பெற்றெ டுத்தேன்;
அகத்திருக்கும் நினைவுத்தீ உடுத்தி யுள்ள
சாம்பலினை நீக்கிவிட்டுப் பார்த்தா லந்தோ!

இங்கேதான் ஆசைகளைப் புதைத்தேன்; ஏழ்மை
எரியாலே சுடப்பட்ட காயத் திற்கும்
இங்கேதான் எந்தையன்புத் தைலம் தேய்த்தார்;
இன்னல்களை எதிர்த்துநிற்க, முறிய டிக்க
இங்கேதான் யான்கற்றுத் தேர்ச்சி பெற்றேன்;
இனம்புரியாச் சுமையோடும் கவலை யோடும்
இங்கேதான் அடியளந்து நடந்தேன்; என்னை
எழுத்தீட்டிக் காரனாகச் செய்த திவ்வூர்!

வெயில்நோயால் வயல்மேனி காய்ந்து போகும்
வெற்றுடம்பாய்ச் சிலநேரம் இருக்கும் நன்செய்;
குயில்வாழ இடம்கொடுக்கும் மாம ரங்கள்
குமரியெனச் சிலநேரம் மின்னும் பூமி;
தயிர்பாலும் கிட்டாது; கூழுக் கேங்கும்
தரித்திரர்கள் வாழும்மூர்; என்னூர் சிற்றூர்
உயிர்மீட்டும் ராகத்தைக் கற்றுக் கொண்டு
உருவாகி வடிவாகி வளர்ந்தே னிங்கே!

அடுக்குமாடி வீடுகளோ வளத்தைக் காட்டி
அலங்கரிக்கும் வளமனையோ யிங்கே இல்லை;
படுத்திருக்கும் குடில்கள்சில; வானைப் பார்க்கும்
பலகண்கள் கொண்டசில கூரை வீடு;
நடுநடுவே தெருவிளக்கும் இருக்கும்; இன்று
நகர்வண்டி களுமிவ்வூர் வழியாய்ச் செல்லும்;
வீடுகளைபோல் புதிரான மக்கள் நல்ல
விவரமிலா திருக்கும்மூர் என்றன் ஊராம்!

காற்றடிக்கும் போதெல்லாம் தலையை ஆட்டிக்
கைக்கிளையின் இலையாலே தாளம் போடும்
ஆற்றோர மரக்கூட்டத் தணிவ குப்பில்
அதிசயித்து வெகுநேரம் நின்றி ருப்பேன்;
நேற்றைக்கு நிகழ்ந்தவற்றை நினைக்கும் போதென்
நெஞ்சினிக்கும் புதியதொரு தெம்பு மாகும்;
ஆற்றல்மிகு மகரந்தச் சேர்க்கைக் கென்னை
ஆளாக்கி விட்டதிவ்வூர் வளர்த்த திவ்வூர்;

சலங்கைகட்டி யாடுகின்ற நங்கை யைப்போல்
சதிராடும் சிலநேரம் பொன்னி யாறு;
கலங்கிப்போய் கணவனிலாப் பெண்ணைப் போல
கைம்மைதனை நோற்றிருக்கும் நீரில் லாமல்;
தலவிருட்சம் பெருங்கோயில் எதுவு மில்லை;
தஞ்சைமா வட்டத்துப் பேரா ஊர்ணி
நிலத்தருகே படுத்திருக்கும் என்றன் சிற்றூர்
நீண்டகவிக் கனவுகளை வளர்த்த துண்மை.

அல்லியர சாணிமாலை படிப்ப தற்கும்
ஆளில்லா ஊருக்குள் கல்வி வல்லார்,
நல்லறிஞர், கிடைப்பதெங்கே? செல்வர் எங்கே?
நலிந்தவர்கள் மெலிந்தவர்கள் என்னூர் மக்கள்;
எல்லையிலாப் பாடல்களை நெஞ்சிற் காத்த
என்தந்தை வாழ்ந்தோய்ந்த இந்த ஊரில்
சொல்லரிய துயரடைந்தேன் என்ற போதும்
சொந்தஊரே ஏனாதி கரம்பை மேலாம்.



# சின்னப் பாப்பா!

சின்னச் சின்னப் பாப்பா நீதான்
அழுது நிற்காதே...! உன்
வண்ண விழியில் இருக்கும் நீரை
சிந்தி வைக்காதே!

அழகு ரதமே! புல்லாங் குழலே!
அடம்பி டிக்காதே!
ஆனை யடிபோல் அதிரசத்தை
விட்டெறி யாதே...!

வளரும் பிறையே! அறிவு மலரே!
கோபம் கொள்ளாதே!
வாரி யணைத்துத் தூக்கிக் கொள்வேன்
என்னைக் கிள்ளாதே!

கள்ளமில்லாக் குழந்தை நீயும்
தெய்வந் தானம்மா— உன்னைக்
கண்டபின்னும் உலகிருக்கும்
கவலை தோன்றுமா?

கிளிகள் கூட உன்மொழியைக்
கேட்டு மகிழணும்— வான
நிலவு கூட உனக்குப் பந்தாய்
வந்து கிடக்கணும்!

குதிரை யானைப் பொம்மையெல்லாம்
வாங்கித் தருவேன்— இனிக்
கோபம் தீர்ந்து குழந்தை யம்மா
முத்தம் தருவாய்!



கவிஞர் கபிலவாணன்

# வாழ்க்கைக் கடலின் முத்து

வாழ்க்கைக் கடலில்
விளைந்துவந்த முத்து— அம்மா
வானத் திருந்தென்
கைக்குக் கிடைத்த சொத்து!

முள்ளில் லாத
ரோஜாப் பூவுன் மேனி— எந்தக்
கள்ளிலும் இல்லாப்
போதைக் காவியம் வாநீ!

வட்டக் கருவிழி
கட்டிப்பொன் னுன்அங்கம்— என்றன்
மொட்டுத் தொகையே
வாழ்க்கையில் நீயோர் அங்கம்!

கரும்பைப் பிழிந்து
கண்டுகலந்த துன்சொற்கள்— முல்லை
அரும்பைத் திருத்தி
அடுக்கிய வரிசைப் பற்கள்!

கோட்டைப் பொன்னை
உருக்கிவார்த்த விளக்கு— நல்ல
கொள்கையில் உயர்ந்திட
உன்னை நீயே பழக்கு!

மருண்டமா விழியினில்
அறிவுப் பேரொளி யேற்று— நெஞ்சில்
அச்சம் தவிர்த்து
மாதர் அடிமையை மாற்று!

வாழப் பிறந்த
மனிதகாவியம் வந்தாய்!— இன்ப
வானவில் வண்ணக்
கலவை மகிழ்ச்சியைத் தந்தாய்!



# என்ன செய்ய நினைக்கின்றீர்கள்?

விடுதலை பெற்று விட்டோம்
வெளியுல கெல்லாம் மெச்ச
குடியர சமைத்துக் கொண்டோம்
குறையிலா ஆட்சி யென்றோம்
விடுதலை அடைந்த பின்னும்
வெறித்தனம் மிருகத் தன்மை
கெடுதலை அடைந்த துண்டா?
கீழோர்க்கு நன்மை உண்டா?

சாதியும், மதமும் மூடச்
சண்டாள மரங்க ளெல்லாம்
வீதியில் வளர்தல் கண்டும்
வேருடன் களை வதற்கு
நாதிதான் நாட்டி லுண்டா?
நாவிலேன் புரட்சிச் சொற்கள்?
காதிலே பெரியார் சொல்லும்
கருத்துரை வீழ்ந்த துண்டா?

தெருவெலாம் கோயி லிங்கே
திருடர்கள் பதுங்கு தற்கா?
பெருமன்றம் நாட்டி லங்கே
பிழைசெய்வார் தப்பு தற்கா?
வருகிற கேடெல் லாமே
வாழ்வதா இந்த நாட்டில்?
சுரண்டுவோர் கொழுக்கின் றார்கள்
சொல்லுங்கள் நன்மை யெங்கே?

அறமுறைப் போரி னால்நாம்
அயலானை விரட்டு தற்குத்
திறமையைப் பணயம் வைத்தோம்
தீயினில் குளித்து வந்தோம்;
நிறவெறித் தீயர் சென்றும்
நிலைமைகள் தொடர்ந்து வந்தால்,
பெற்றகரும் பேறு பெற்றும்
பெருமையை அடைந்த தாமோ?

தனியொரு மனிதன் தன்னைத்
தலையினில் தூக்கிக் கொண்டே
இனியேனும் சுற்றி டாமல்
எல்லார்க்கும் எல்லா மென்ற
கனிவான கொள்கை ஏற்போம்;
கல்வியால் சந்திப் போம்நாம்!
மனிதருண் டாக்கிச் சென்ற
மதஞ்சாதி ஒழியச் செய்வோம்!

அண்ணலை மதிப்ப தென்றால்,
'அரிஜனே' இங்கு வேண்டா!
மண்ணிலே பரத நாடு
மதிப்புள தென்று சொன்னால்,
கண்ணீரைச் சிந்தும் மக்கள்
கட்டாயம் இருத்தல் வேண்டா;
எண்ணிலா வளங்கள் சேர்க்க
என்செய நினைக்கின் றீர்கள்?



# புள்ளி விபரங்கள்

வட்டவடி வாயமைந்த முற்றுப் புள்ளி,
வார்த்தையூர் வலத்தில்வரும் கடைசி ஆளாம்;
கட்டுக்கட் டாய்நீறு பூசும் சைவர்
கைவிரலால் தொட்டுவைக்கும் புள்ளி யொன்றே
பொட்டென்னும் புள்ளியென்போம்; மெய்யெ முத்தும்
புள்ளிபெறும் தலையினிலே. ஒலியை மாற்றும்;
கிட்டாத வைரப்பொடி யால்வ ரைந்து
கிடக்கின்ற புள்ளிகளே விண்மீன் கூட்டம்!

காலில்லா திருந்தாலும் எக்கி யம்சொல்
கருத்துதனை விளக்குதற்கு நிறுத்திக் கொஞ்சம்
நூலழகைக் காட்டல்காற் புள்ளி யாகும்;
நுரைநிகர்மெல் லாடைகளில் இருக்கும் புள்ளி
சேல்விழியார் கண்களுக்கு விருந்து வைக்கும்!
செல்வமிக வுடையாரவ் வூரின் புள்ளி
பாலுணர்ச்சி யைக்கிளறும் மச்சப் புள்ளி.
பால்நிலவில் கூடக்கரும் புள்ளி யுண்டாம்!

புவியீர்ப்பு விசைநிற்கும் இடமே எந்தப்
பொருளுக்கும் நடுப்புள்ளி தாங்கும் புள்ளி;
தவிக்குமனம் துன்பமெனும் புள்ளி வீழ்ந்தால்,
தலைமழித்துக் கரும்புள்ளி சிவப்புப் புள்ளி
குவிமனத்தார் பழநாளில் வரைந்து, கெட்ட
குற்றவாளி தனைக்கடிந்த தாகச் சொல்வார்;
கவிந்துளதாய்த் தெரிகின்ற வான வீட்டில்
கதிர்நிலவும் ஒளிப்புள்ளி யாகு மென்போம்.

அழகுமயில் தோகையிலே நீலப் புள்ளி
அஞ்சுகின்ற மானுடம்பில் வண்ணப் புள்ளி,
அழகுமெரு கூட்டுவதைக் காணு கின்றோம்!
ஆந்தையின் மேற்சிறகில் அரிசி போன்று
பழுப்புநிறப் புள்ளிநமை அஞ்ச வைக்கும்.
பணியாளர் குறிப்பேட்டில் வைக்கும் புள்ளி
குழப்பத்தை உருவாக்கும். மடந்தை கற்பில்
குறைநேர்தல் கரும்புள்ளி வாழ்வைக் கொல்லும்!



# ஆலமர அலங்காரம்

தெளிந்தநீரில் வாழுகின்ற மீனின் முட்டைத்
　　திருவடிவில் இருக்கின்ற விதையில் தோன்றி,
ஒளியதனைத் தடுக்கின்ற குடைபோல் நிற்கும்
　　உருப்பெருத்த ஆலமரம் வானை நோக்கும்;
வெளியெல்லாம் கிளைக்கைகள்; விழுதுத் தூண்கள்;
　　வேர்க்கயிறோ பூமியெங்கும் பின்னிக் கொள்ளும்;
களிவிளைக்கும் புள்ளினங்கள் மரத்தில் உள்ள,
　　கனியுண்டு கூத்தாடிக் கொண் டிருக்கும்.

நான்குகால்கள் இல்லாத பந்த லான
　　நல்லியற்கை மண்டபத்தில் பறவைக் கூட்டம்,
ஏனெதற்குக் கேள்விகளைக் கேட்டுப் பார்க்கும்;
　　இல்லறத்தில் அணில்கூட்டம் மகிழ்ந்தி ருக்கும்;
தேன்கூட்டில் ஈக்களங்கே நிதியைச் சேர்க்கும்
　　திருட்டுவிழி ஆந்தைகளும் குடியி ருக்கும்;
மானினத்துப் பெண்டிரெலாம் ஊஞ்சல் கட்டி
　　மனமகிழ்ந்தே ஆடிடுவார் விழுதி னாலே!

கிளிமூக்கைப் போல்சிவந்த பழங்கள், வீழ்ந்து
　　கிடக்கின்ற காட்சியினால் நெஞ்சை அள்ளும்,
தளிரிலைகள் சருகாகி வீழ்ந்து, மண்ணில்
　　தக்கதொரு மெத்தையெனக் காட்சி நல்கும்!
குளிரறைபோல் நிழல்கொடுக்கும் மரத்தின் காட்சி
　　கொற்றத்தேர் தேரடியில் நிற்ப தொக்கும்!
தெளிவான அறிஞர்களின் நூலைப் போலத்
　　தென்னாட்டின் ஆலமரம் நிலைத்து நிற்கும்!

பாலுள்ள ஆலமரம் கறையான் வாயால்
பாழ்பட்டுப் போனாலும் விழுதுத் தூண்கள்
மேலுள்ள கிளைகளையே தாங்கிக் கொள்ளும்!
மேதினிக்கோர் பாடத்தை எடுத்து ரைக்கும்!
வாலில்லாப் பறவையான வௌவால் கூட்டம்
வந்தங்கு, குடியிருக்கப் பேரு ராகும்;
ஆலமரம் பட்டபின்னும் பலகை யார்கும்
அடுப்பெரிக்க விறகாகும் நன்மை செய்யும்!



# மூன்றின் முன்னோட்டம்

இரண்டிற்கே இளையவன்நான் நான்கின் அண்ணன்
என்பெயரை முன்றென்பார்; என்சி றப்பு
நிரம்பியுள்ள தென்றால்நீர் ஒப்ப மாட்டீர்
வெற்றிநாமம் எத்தனையாம்... மூன்று தானே?
தரமிகுந்த திருக்குறள்நூல் மக்க ளுக்குத்
தந்தஅறம் பொருளின்பம் மூன்று தானே?
விரலழகு மணமகளின் கழுத்தில், தாலி
வேலிகட்ட எனையன்றோ எடுக்கின் றீர்கள்?

இறப்பெதிர்வு நிகழ்தலென்று காலம் மூன்று;
இடம்மூன்று; இயலிசைநா டகமாய்ப் போற்றும்
அறத்தமிழும் மூன்றுபிரி வுடைய தாகும்!
அ. இ. உவாய்ச் சுட்டெழுத்தும் மூன்றாம் அன்றோ?
மறவர்புகழ் சேரசோழ பாண்டி யர்கள்—
மண்ணுலகில் மூவேந்தர்; கொடியும் மூன்று
இறவாத புகழ்ச்சங்கம் மூன்று; ஆசை
இயல்பாக மண்பெண்பொன் மூன்றாய்ச் சொல்வர்!

தேங்காய்க்குக் கண்மூன்று; பலாமா வாழை,
தித்திக்கும் முப்பழங்கள்; கரணம் மூன்று;
வீங்குபுகழ் வித்தகர்கள் நாட்டிற் காக
விட்டவைமெய் பொருளாவி யென்னும் மூன்றாம்;
தீங்ககற்றும் மிளகுதிப்பிலி சுக்கு; மேன்மைத்
திரிகடுகம் நூல்படித்தால் மனநோய் நீங்கும்!
ஈங்குமுதல் வழிசார்பு என்று நூல்கள்
இனம்பிரிக்கும் வகைமூன்று! விகாரம் மூன்று!

# ஒரு புதிய பூமி

தூங்கிக் கிடக்கின்ற சிம்புட் பறவைகள்
விழித்தெழப் போகின்றன!
ஏங்கித் தவிக்கின்ற சிங்கங்க ளெல்லாம்
இரைதேடப் போகின்றன!

எத்திப் பிழைத்தவர் சுரண்டிக் கொழுத்தவர்
அத்தனை பேர்களுக்கும்
புத்தி புகட்டிடக் காரிருள் குலைத்திடக்
கிழக்கு வெளுக்கிறது!

கூண்டில் அடைபட்ட மாந்தர் களிங்கே
கொதித்தே எழுந்துவிட்டார்!
ஆண்டான் அடிமைகள் இல்லாமலே யொரு
அண்டம் பிறக்குதடா...!

சத்தியமாகவே மனிதரைப் போற்றிடும்
காலம் உதிக்கிறது!
நித்திய தரித்திரம் இல்லாமலேயொரு
நீன்புவி பிறக்கிறது!

பாரதி பாடிய கொள்கைகள் எல்லாமே
பாரதம் ஆகுமடா!
யாரது தடுத்தாலும் வேரொடு சாய்குவர்
அன்புதான் நிலைக்குமடா!

# ஒன்று கூடுவோம்!

ஒன்றுகூடுவோம்— தமிழ்ச்
சிந்து பாடு வோம்!
உழைக்கும் வர்க்க சக்தியாலே
புதிய உலகம் படைத்து வாழுவோம்...!

உழைப்பதெங்கள் கடமை!
வாழ்வதெங்கள் உரிமை.
பூமித்தாயின் தயவினாலே— நாங்கள்
இனியவாழ்க்கை அமைத்து வாழுவோம்!

வேர்வைத் துளியாலே— பூமியை நாம்
அர்ச்சனை செய்தோம்!
விளைந்துவந்த நெல்மணியை
வீட்டிலே சேர்த்தோம்!

வறுமைச் சிறையை உடைத்தெறிந்து
விடுதலை யாவோம்— நாங்கள்
எந்தநாளும் இன்றுபோல
ஆடிப் பாடுவோம்!

புதிய உலகின் பூபாளந்தான்
காதில் கேட்குது!
புரட்சி நாதத்தால் மடமை
பயந்து ஓடுது! ஆகா... பயந்து ஓடுது!

சாதிபேத மில்லா வாழ்க்கை
இங்கே அமையுது!— நிலவும்
ஏழை செல்வன் நிலையும்மாறி
ஒருமையாகுது! அதுவே— பெருமையாகுது!

ஒன்றுகூடுவோம்!

# மனிதன் தலைவிதி

மனிதன் தலைவிதியை மாற்ற முடியாதுங்க!
மரணத்தை வென்றதாரு சொல்லுங்க?

ஏழை பணக்காரன் என்னும், பிரிவுங்க
என்றைக்கும் இருக்குமிது உண்மைங்க
ஏழையாய் இருப்பதவன் தலைவிதிங்க— அட
இவன்செய்த புண்ணியந்தான் செல்வங்க!

மதஞ்சாதி நாட்டிருக்க வேணுங்க— எல்லா
மரங்களும் தேக்குதானா சொல்லுங்க?
அதர்மத்தால் உலகழிஞ்சாப் பாருங்க— ஏதும்
ஆச்சரிய மில்லையிது உண்மைங்க!

கழுதை வெளுத்திட்டாக் குதிரையா?— அந்தக்
கருப்பனும் படித்திட்டாப் பெருமையா?
உழுபவன் எ(ல்)லாம் படிக்கவேணுமா— எழுதும்
உத்தியோகம் செய்ய எண்ணலாகுமா?

வெள்ளைக் காரன் ஆட்சிக்கென்ன சொல்லுங்க—எங்க
வீட்டுக்கு வந்துவந்து போவாங்க!
கொள்ளைவிலை யானதென்ன சொல்லுங்க— இந்தக்
குப்பையெல்லாம் மேலே வந்ததாலுங்க!

நீசரெல்லாம் ஆலயத்தில் வந்ததால்— அவர்
நீச்சர்மொழி அர்ச்சனையாய் ஆனதால்
ஈசன் கருணை மிகக்குறைந்தது— இங்கு
எல்லாமே துன்பமாக நிறைந்தது. மனிதன்...

*குறிப்பு : காலப் போக்கையும் கருத்து வளர்ச்சியையும் எதிர்க்கும் பழமைவாதியின் மனக்கொதிப்பு இங்கு பாடல் வடிவம் பெற்றது!*

# பிரும்ம சூத்திரம்

சூரியனைச் சுற்றிவரச் செய்தவன் யாரு?
சுற்றுகோளுக் கியக்கத்தைக் கொடுத்தவன் யாரு?
பாரில்காற்றைப் போர்வையாகச் செய்தவன் யாரு?
பழத்தில்ருசி இருக்குமாறு தந்தவன் யாரு?

பூவுக்குள்ளே வாசனையைப் பொதிந்து வைத்தாயா?
பூமிக்குள்ளே ஊற்றுநீரை ஓட விட்டாயா?
சாவுவரும் நாளைநீயும் தெரிந்து கொண்டாயா?
சாகாமலே இருப்பதற்கும் அறிந்து கொண்டாயா?

விரிந்துநிற்கும் வானமென்ன தெரிந்து விட்டதா?
வீசுகாற்றை நிறுத்தவழி புரிந்து விட்டதா?
திரிந்தலையும் சுழற்சிகளை மாற்ற முடியுமா?
திரைநரைகள் இல்லாமலே தடுக்க முடியுமா?

ஆண்டமன்னர் மறவர்வீரம் எங்கே போனது?
ஆசையாகச் செய்ததெல்லாம் என்ன ஆனது!
வேண்டுகிற பொழுதிலெல்லாம் வெற்றி வந்ததா?
வேகத்தோடு முயன்றபோதும் துன்பம் தீர்ந்ததா?

உறங்குதற்கும் விழிப்பதற்கும் என்ன காரணம்?
உழைப்பதற்கும் உண்பதற்கும் சக்தி காரணம்!
பிறப்பதற்கு நீமுயற்சி செய்து வந்தாயா?
பெரியகடல் என்பதென்ன புரிந்துகொண் டாயா?

தண்ணீர்க்கிந்தச் சக்தியையே கொடுத்தவன் யாரு?
தரைமகளை மிதக்கவைத்துக் காப்பவன் யாரு?
பெண்ஆணாய்ப் பேதம்வைத்துச் செய்பவன் யாரு?
பேதத்திலும் கவர்ச்சிவைத்து முடித்தவன் யாரு?

பஞ்சபூதக் கூட்டணிக்குச் செயலர் யாரடா?
பகலிரவு பருவபேதம் செய்வ தாரடா...?
நெஞ்சுக்குளே துடிப்பதென்ன காற்றின் வேலையோ!
நினைப்பதென்ன...மறப்பதென்ன... இயந்திர சாலையோ.

கோபதாபம் இன்பதுன்பம் கொண்டு வந்தாயோ!
குளிக்கவந்தும் அதைமறந்து சுற்றுகின் றாயோ!
யாவருக்கும் புரியாமலே இருப்ப தென்னடா?
யானைமதம் அடங்குதற்கு வழிதான் என்னடா?



# வந்த வேலை மறந்தீரோ?

சந்தைக்கு வந்தவரே
சரக்கேற்ற நிற்பவரே!
வந்தவேலை முடிக்காமல்
பந்தற்காலை ஏன்பிடித்தீர்?

ஆரவாரக் கூச்சலிலே
ஐம்பொறியின் மேய்ச்சலிலே
வந்தவேலை மறந்தீரோ
வான்பொருளை யிழந்தீரோ?

தொட்டிலிலே தொடங்கியது.
கட்டிலிலே உருகியது
வட்டியாகப் பெருகியது
வாழ்க்கையெங் கோமுடிகிறது!

என்னகொண்டு வந்தீரிங்கே?
என்னகொண்டு செல்வீரங்கே?
உண்டுறங்கிக் கிடந்ததன்றி
உருப்படியாய் என்னசெய்தீர்?

உழைத்துழைத்துப் பெற்றதென்ன
ஊர்ச்செலவுக் கேற்றதென்ன?
மழைகாட்டும் வானவில்லில்
மயங்கியதால் வந்ததென்ன?

அறம்விதைத்துச் செழித்தீரா?
அருள்வேட்டுத் திரிந்தீரா?
புறம்பேசிப் பொய்விதைத்துப்
பொருள்தேடிக் குவித்தீரா?

தலைக்கனத்துச் சுமைமாற்றத்
தகுந்தகிளை வரவிலையோ
விலையாகக் கொண்டபொருள்
விறகாகிப் போனதென்ன?

வந்தவேலை மறந்ததென்ன
வாசலிலே நின்றதென்ன?
சந்தனத்தை விட்டுவிட்டு(ச்)
சகதிபூசி மகிழ்வதென்ன...?



# எலும்பும் தோலுமானபோது...

காய்த்தமரம் பழுத்ததும் பறவை வந்தது
காசுபணம் சேர்ந்ததும் உறவும் வந்தது!
வாய்ப்பிழந்து போனவுடன் கிளிகள் பறந்தன;
வரவுநின்று போனவுடன் உறவும் தீர்ந்தது!

பெருக்கெடுத்த ஏரியிலே மீன்கள் வாழ்ந்தன;
பெரியகூட் டமாய்வலைஞர் சுற்றி வந்தனர்;
பருவமாறி ஏரிவற்றிப்பொறுக்கு வெடித்தது...!
பறவையோடு வலைஞர்களும் மறந்து விட்டனர்!

ஈரப்பசை இருக்கும்போ(து) ஒட்டிக் கொண்டன!
எலும்புந் தோலுமானபோது வெட்டிக் கொண்டன.
ஆரவார அதிகாரம் கூட்டஞ் சேர்த்தது!
ஆடிஓய்ந்த பின்னரென்ன வாட்டம் ஆனது?

மயக்கத்திலே கிடந்தபோது அன்பாய்த் தெரிந்தது!
மயக்கந்தீர்ந் தெழுந்தபோது வம்பு புரிந்தது!
இயக்கத்திலே நன்மைதீமை புரிய வில்லையே?
எங்குபாம்பு மணியென்றும் தெரிய வில்லையே...

கானல்நீரே ஏரிபோலக் காட்சி யாகுது!
கைப்பொருளே மிக்கிருந்தால் மாட்சி யாகுது!
கூனல்விழும் பொழுதிலேதோ சாட்சி யாகுது.
குறைநிறையை உணரஏதோ தேவை யாகுது!

வாழைதென்னை வளர்த்ததிலே பயன்வி ளைந்தது!
வாடிநின்ற போதிலது கைகொடுத்தது!
ஏழைநெஞ்சுக் கிதமளிக்க யாரும் இல்லையோ?
இதயக்கடல் புயலடங்க என்ன தொல்லையோ?

# கணக்குப் போடும் நேரம்

தேடிவைத்த பொருளாலே வந்த தென்னடா
திரைசெறிந்த கூனுடம்பைக் கொண்ட தேதடா!
ஆடியஉன் ஆட்டத்திற்கு அர்த்தம் என்னடா?
ஆசையென்னும் கடல்கொடுத்த சொத்து தானடா...!

துன்பமுறு வேளையில்நீ இரங்கினின் றாயோ...?
தூயவர்க்குத் தொண்டுசெய்து பொருளிழந் தாயோ?
மன்னுபெரும் அறமோங்கப் பணிபுரிந் தாயோ?
மக்களிடம் வஞ்சகமாய் நடந்துகொண் டாயோ?

சற்குருவைத் தேடியோடிச் சேவைசெய் தாயோ?
சான்றோர்க்குப் பெருதவி செய்துவந் தாயோ?
அற்பசுகச் சேற்றினிலே வீழ்ந்திருந் தாயோ?
ஆய்ந்துபார்க்கும் நேரத்தில்நீ என்னசெய் வாயோ...

காய்த்தமரம் பழுக்குமுன்னே வெட்டிவிட் டாயோ?
கன்னியரைத் தொட்டுநடு ஆற்றிலிட் டாயோ?
பேய்க்குணத்தில் பிறர்பொருளைக் கவர்ந்துகொண் டாயோ?
பெரியவரைப் பழித்துரைத்து மகிழ்ந்திருந் தாயோ?

உண்ணுகிற அரிசியில்கல் கலந்துவிற் றாயோ?
ஊர்க்குரிய பொருளைநீயே எடுத்துக் கொண்டாயோ?
கண்ணிருகப் பெண்களுக்குத் தீங்கிழைத் தாயோ
கற்றகல்வி தனைமறந்து பிழைபுரிந் தாயோ?

சுருக்கெழுத்தாய் உன்னுடம்பில் எல்லாம் தெரியுது
சுகவாழ்வில் மயங்கிநின்ற தெல்லாம் புரியுது!
இருப்பதென்ன கழிந்ததென்ன கணக்குப் பார்த்திட,
இயற்கைமொழி புரிந்தவனே தயாராகிறான்;

சாதியில்லை பேதமில்லை விசாரனை முன்னே
சாட்சிசொல்ல வருவதற்கு நாதியில் லையாமே!
நீதிகொன்ற யார்வருக்கும் தண்டனை களுண்டு
நினைத்தழுதால் என்னபயன் செய்ததென்ன பண்டு?

பாவத்திலே பங்கெடுக்க யார்வருவா ரிங்கே?
பணபலத்தால் செயல்முடித்த உன்திறமை யெங்கே?
காவலுக்குப் பலரிருந்தும்— மரணதேவன் வந்தால்
கற்றவித்தை பயன்படாது புரிந்துகொள்வாய் நன்கு!



# பார்த்து நடந்து செல்லு தங்கமே, தங்கம்!

போனால் வருவதென்ன?
பொழுதுவந்தால் போவதென்ன?
ஆனாலும் சொந்தபந்தம்
ஆவலிலே மயக்கமென்ன— தங்கமே, தங்கம்!
ஆட்டபாட்டக் கூச்சலென்ன?— தங்கமே, தங்கம்!

அம்பலக் காரரென்றும்
அந்தணக் குலத்தரென்றும்
தெம்பாகப் பேசலென்ன?
தேவரென்று கூறலென்ன— தங்கமே, தங்கம்!
தேவையென்ன சேவையென்ன— தங்கமே, தங்கமே!

வீடுஎன்றும் வாசலென்றும்
வேலியென்றும் காணியென்றும்
பாடுபட்டுத் தேடலென்ன
பந்தயங்கள் கூறலென்ன— தங்கமே, தங்கம்!
பாவவினை ஆவதென்ன?— தங்கமே, தங்கம்!

பட்டமரம் விறகாச்சு
பறவைகூடக் கறியாச்சு
கட்டுடலம் என்னவாச்சு
கதைக்குதவாச், சதையாச்சா?— தங்கமே, தங்கம்!
காற்றிலாத் துருத்தியாச்சோ?— தங்கமே, தங்கம்!

அலங்காரப் பூச்சுகளும்
ஆரவாரப் பேச்சுகளும்
அழகிளமை எங்குபோச்சு
அகங்காரம் கொண்டதென்ன?— தங்கமே தங்கம்!
ஆவிபோன பின்னரென்ன?— தங்கமே— தங்கம்!

சட்டசபைக் கூத்துகளும்
சரித்திரத்தின் கீர்த்திகளும்
வருவினையைத் தீர்த்துடுமோ?
வாங்கிவிற்க முடிந்திடுமோ?— தங்கமே, தங்கம்
வந்தபின்பு என்னசெய்வாய்?— தங்கமே, தங்கம்!

பட்டதென்ன விட்டதென்ன?
பாதியிலே வந்ததென்ன?
சுட்டசட்டி யானதென்ன?
சுமையிரக்க வழியுமென்ன?— தங்கமே, தங்கம்!
சூடுபட்டும் மறந்ததென்ன— தங்கமே, தங்கமே!

போட்டுவந்த வேஷமென்ன?
புரிந்துகொண்ட பாஷையென்ன?
ஆட்டத்திலே கூலியென்ன?
பாலையிலே சோலையுண்டோ?— தங்கமே, தங்கம்!
பார்த்து நடந்து செல்லு— தங்கமே, தங்கம்!



# பயிர்வளரக் காணோமடி கண்ணம்மா!

அப்பர்மொழி விதைத்தேன்
ஆனந்தப் பாட்டிசைத்தேன்
எப்போதும் காத்திருந்தேன் கண்ணம்மா
ஏற்றம் இறைத்திருந்தேன் கண்ணம்மா
பாறையிலே விதைத்தேனோ— கண்ணம்மா
பயிர்வர காணோமடி— கண்ணம்மா!

நானூற்றுத் தேன்பொழிந்தேன்
நாவலரின் பாவிதைத்தேன்
பாமணியார் மருந்தடித்தேன்— கண்ணம்மா
பாபநாச நீரிறைத்தேன்— கண்ணம்மா
பயிரெல்லாம் களையாச்சே— என்னம்மா
பருவத்துக் குற்றமோடி கண்ணம்மா?

வடலூரில் வாங்கிவந்து
கடலூரில் விதைத்திருந்தேன்!
ஏழ்கிணறும் தூர்ந்துபோச்சு—கண்ணம்மா
இயற்கைமழை மாறிப்போச்சு—கண்ணம்மா
இந்நிலைக்குக் காரணந்தான்—என்னம்மா?
ஈரமற்றுப் போகலாமோ—கண்ணம்மா!

ஆசாரக் கோவைதந்து,
அனுதினமும் அருள்விளைய,
பாசமுடன் விதைத்திருந்தேன்— கண்ணம்மா
பாட்டுக்கான வரவிலையே—கண்ணம்மா
பாலையாகக் காரணந்தான்—என்னம்மா?
பரமனருள் வேண்டுமடி—கண்ணம்மா!



கவிஞர் கபிலவாணன்

ஆரவாரப் பூச்சிகளும்
அதிகாரப் பெருநோயும்
அகநிலத்தைக் கெடுத்ததடி— கண்ணம்மா
ஆற்றுவெள்ளம் பாய்ச்சியென்ன — கண்ணம்மா?
யார்மனமும் சுத்தமில்லை— என்னம்மா!
அறம்விளையப் போவதெப்போ கண்ணம்மா!

திருமூலர் மந்திரத்தைத்
தேவாரப் பத்திமையை,
அருணகிரி சந்தங்களைக் கண்ணம்மா
ஆவலுடன் தூவுகிறேன் கண்ணம்மா
குருட்டாட்டம் தொடர்கிறதே— என்னம்மா
கோபமென்ன சாபமென்ன— கண்ணம்மா!

தெங்குகளை நட்டுவைத்தேன்
தினமும்நீர் ஊற்றிவந்தேன்
தெங்கிளநீர் இப்போதில்லை— கண்ணம்மா
தேயமக்கட் காகட்டுமே— கண்ணம்மா
தேவையாகும் நாளும்வரும்— என்னம்மா
திரவியமே கிட்டுமடி— கண்ணம்மா!



# இகழ்ச்சி பேசித் திரியாதே

வந்தது வரட்டும் போனது போகட்டும்
வாழ்க்கையே அதுதாண்டா!
இரவும் பகலும் இன்பமும் துன்பமும்
இருப்பதும் சரிதாண்டா!

போனதை எண்ணிப் புலம்பி அழுதால்
பொழுதும் வீணாகும்!
ஆனதை எண்ணி ஆணவம் கொண்டால்
அடுத்ததும் பாழாகும்!

உன்னைக் கேட்டா காற்றும் அடிக்குது?
பொழுதும் விடியுதடா!
கண்ணுக் கெதிரே காட்சிகள் மலர்வதும்
என்னே விந்தையடா!

கவலை நெருப்பில் மனத்தை எரித்துக்
கரிந்து போகாதே!
உவந்து தருக்கி உலகை மறந்து
உன்னை இழக்காதே!

உதிர்ந்த பூக்கள் செடியில் மீண்டும்
ஒட்டிக் கொள்ளாது!
இழந்த நாள்கள் மீண்டும் வந்து
ஈடு கொடுக்காது!

இலையுதிர் காலம் வஸந்தம் எல்லாம்
இயற்கை விளையாட்டு!
மலையைப் புரட்டும் திறனிருந் தாலும்
மமதைதனை யோட்டு!



கவிஞர் கபிலவாணன்

உரியோர் யாரோ ஆட்டும் வித்தை
உணர்ந்து கொள்ளாமல்,
பெரியோர் சிறியோர் புகழ்ச்சி இகழ்ச்சி
பேசித் திரியாதே!

மண்ணைத் தோண்டிப் பார்க்கும் போது
தண்ணீர் கிடைத்திடலாம்!
உன்னைத் தோண்டிப் பார்த்தால் ஞானப்
பெண்ணே கிடைத்திடலாம்!

தூங்கும் நீயே விழித்துக் கொண்டால்
துயரை ஓட்டிடலாம்!
தூங்கிக் கொண்டே நடந்து போனால்
எதுவும் நடந்திடலாம்!



# உள்ளூரின் துடிப்பு

நல்லதண்ணீர் குடிப்பதற்கு
நாவறட்சி தீர்வதற்கு
கிணறொன்று தோண்டினேனடி மயிலே— கெட்ட
பூதம்வந்து நின்றதென்ன குயிலே!

இசையேக்கம் வந்ததனால்
இதயத்தின் தூண்டுதலால்
வீணைதனை மீட்டலானேன் மயிலே— சிலர்
வேதனையால் துடிப்பதென்ன குயிலே!

கோட்டைகளைக் கட்டிவைத்து—
குத்துவிளக் கேற்றுகையில்
கோட்டானுக் கென்னசெய்தேன் மயிலே— அது
கூத்தடிக்கப் பார்ப்பதென்ன குயிலே!

ஒளிவழியைப் பார்த்திருந்தேன்
உதயமகள் வந்தவுடன்
ஒளியுறவு கொள்கையிலே மயிலே— இந்த
உள்ளூர் துடிப்பதென்ன குயிலே!

வெள்ளைக்குச் சாட்சிசொல்ல
வேதத்தின் உரையெழுத
கள்ளத்திற் கவசரமோ மயிலே— இந்தக்
காப்புக் களையலாலோ குயிலே!

விருத்தி யுரையெழுத
விதிநுனியைத் தொட்டழிக்க
உருகிக்கொண் டிருக்கையிலே மயிலே— நரி
ஊளையிட்டுப் பார்ப்பதென்ன குயிலே!

# புதிரான பரம்பொருள்

பொட்டல்வெளிப் பட்டணத்தில்
பூச்சியத்தின் ராச்சியத்தில்—
பொன்னரங்கில் ஆடும்அருட் பரம்பொருளே— என்னைப்
பூமிக் கனுப்பியதேன் பரம்பொருளே?

வான விதானத்தில்
வைரமணிக் கல்பதித்து
வான்விளக்கும் ஏற்றிவைத்த பரம்பொருளே— நான்
வந்ததற்கு அர்த்தமென்ன பெரும்பொருளே?

காற்றின் அசைவினிலும்
கடல்மாதா நெளிவினிலும்
ஊற்றெடுக்கும் உள்ளுணர்வு பரம்பொருளே— எல்லாம்
உன்படைப்பு விந்தைகளோ பெரும்பொருளே?

படுத்திருக்கும் வரையழகு,
பாயும் நதியழகு,
மருதவயல் அழகும் பரம்பொருளே— நெஞ்சை
மயக்கியே நிற்பதென்ன பெரும்பொருளே?

ஓடித் திரிவதற்கும்
உண்டு சுவைப்பதற்கும்
எத்தனை கொடையளித்தாய் பரம்பொருளே— மண்ணில்
எரிமலையை ஏன்படைத்தாய் பெரும்பொருளே?

புள்ளிமான் வடிவழகில்
பூரித்து நிற்கையிலே
புலிவந்து கொல்வதென்ன பரம்பொருளே?—இந்தப்
புதிருக்கு அர்த்தமென்ன பெரும்பொருளே?

# பெரிய துணை வேண்டும்

ஊசியின் காதுக்குள்ளே
ஒட்டகமே ஓடவேண்டும் !
நாசியில் நாட்டம்வைத்து
நான்மறந் திருக்கவேண்டும்

வாலைப் பெண்ணே—வழி சொல்லடி
ஞானப் பெண்ணே !

ஒன்றுதான் இரண்டாச்சு
இரண்டுதான் மூன்றாச்சு
மூன்றுகள் பலவாச்சு,
மூலத்தைக் காணவேண்டும்

வாலைப்" பெண்ணே— வழி என்னடி
ஞானப் பெண்ணே !

ஐந்து குடித்தனத்தில்
ஆறாகப் போனதனால்
நைந்தாலும் துக்கமில்லை ?
நல்லா யிருக்கவேண்டும்.

வாலைப் பெண்ணே— வழி சொல்லடி
ஞானப் பெண்ணே ?

தேரும் சாலைவிட்டு
தேகசத்தி செய்துகொண்டு
பேரூர்க்குப் போவதற்குப்
பெரியதுணை வேண்டுமடி]

வாலைப் பெண்ணே— வழி என்னடி
ஞானப் பெண்ணே !



இயற்பெயர்:
புலவர் வீ. பெரியசாமி
பெற்றோர்: இரா. வீரப்பன
ஆறாயம்மாள். (காவேரி)
பிறந்த தேதி : 8-10-43.
ஊர் : தஞ்சை மாவட்டம்.
பேராவூருணி-ஏனாதிகரம்பை.
கல்வி: பி.லிட் (க.மு.) சைவ
சித்தாந்தம்.
பணி : தமிழாசிரியர்.
துணைத் தலைமை ஆசிரியர்,
தூயஇராயப்பர் உயர்நிலைப்பள்ளி
இராயபுரம், சென்னை-600 013.

## புலவர் கபிலவாணன்

**தொண்டு :** காவியப்பாவை கவிதை இலக்கியத் திங்கள் ஏட்டை ஆறு ஆண்டுகள் தொடர்ந்து நடத்தியமை. தொலைக்காட்சி, வானொலி, கவியரங்குகளில் கவிதைகள் வழங்கி வருதல். இலக்கிய ஏடுகள், நிகழ்ச்சிகளில் சிந்தனையை வழங்கி வருதல், நாடறிந்த நல்ல கவிஞர்.

**நூல்கள் :** நானொரு கவிதைத் தொழிலாளி, பழநிமலை முருகன் பிள்ளைத்தமிழ், தமிழ்ச்சுடர். ஐந்திலக்கணம், குமாரசாமி அருள்மணிமாலை, கட்டுரைக் களஞ்சியம், கவிஞர் கபிலவாணன் கவிதைத் தொகுதி, கவிதைப்பூங்கா போல்வன.

**பிறசெய்திகள் :** காரல் மார்க்குவின் பொருள்முதல் வாத வெளிச்சப் பாதையில் புதியன தேடிப் புறப்பட்ட சொல்லரசர் 40-ஆம் அகவையில்— பகுத்தறிவுக்கு எட்டாத அற்புதங்களை நேருக்கு நேராகச் சந்தித்ததனால்— ஆன்ம விழிப்படைந்தார். பக்தியோகத்தோடு ஆழ்நிலைத் தியானத்திலும் அணியமாகி வருகிறார். முருகனே முழுமுதற் கடவுள் என்னும் நெறியுடன் வாழ்ந்து வருகிறார்.

பாவேந்தரின் வேகம், புதுக்கவிதையின் கருத்துவளம், சுரதாவின் நளினங்கள். தனக்கே உரிய கவிதைச் சொல்லாட்சி என்று கவித்துவத்தில் உயர்ந்து நிற்கிறார்.

**கவிஞர். இறைமுதல்வன் எம். ஏ.**